# திருப்புல்லாணி நொண்டி நாடகம்

# TIRUPPULLĀṆI NOṆṬI NĀṬAKAM




INSTITUTE OF ASIAN STUDIES
Chemmancherry, Chennai - 600 119
INDIA

# திருப்புல்லாணி நொண்டி நாடகம்
# Tirupullāṇi Noṇṭi Nāṭakam

*General Editor*

**G. JOHN SAMUEL**

*Editor*

**R. JAYALAKSHMI**

**M. MARUTHA MUTHU**

*English Rendering*

**R. RAJARATHINAM**




**INSTITUTE OF ASIAN STUDIES**

**Chemmancherry, Chennai – 600 119**

**INDIA**

**Silver Jubilee Celebration Series - 8**

**திருப்புல்லாணி நொண்டி நாடகம்**
**Tirupullāṇi Noṇṭi Nāṭakam**

First Edition: 2007 pp. 203

Publication No: 100

ISBN: 978-81-87892-23-4

© Institute of Asian Studies

Price: Rs.160/- US $ 20

Published with the financial assistance
from the **UNESCO** under the
**Memory of the World** project

**Copies can be had from**

Publications Division,
**Institute of Asian Studies,**
Chemmancherry,
Chennai – 600 119.
India.
Phone: (Off.) 24501851, 24500831, 24502212
(Res.) 24964831
Fax : 91-44-24964831
E-mail: ias@xlweb.com
World Wide Web site:http://xlweb.com/heritage/asian

*Composed by*
**Institute of Asian Studies, Chennai – 600 119.**

Printed at Student Offset Services, Chennai - 1, ✆42052908

# Contents

## A System of Transliteration of Tamil

### VOWELS

| Short | | Long | | Dip thong | |
|---|---|---|---|---|---|
| அ | a | ஆ | ā | ஐ | ai |
| இ | i | ஈ | ī | ஔ | au |
| உ | u | ஊ | ū | | |
| எ | e | ஏ | ē | ĀYTAM | |
| ஒ | o | ஓ | ō | ஃ | k̲ |

### CONSONANTS

| Hard | | Soft | | Medial | |
|---|---|---|---|---|---|
| க் | k | ங் | ṅ | ய் | y |
| ச் | c | ஞ் | ñ | ர் | r |
| ட் | ṭ | ண் | ṇ | ல் | l |
| த் | t | ந் | n | வ் | v |
| ப் | p | ம் | m | ழ் | ḻ |
| ற் | ṟ | ன் | ṉ | ள் | ḷ |
| ஸ் | s | ஷ் | ṣ | ஹ் | h |
| | | ஜ் | j | | |

# பதிப்புரை

ஓலைச் சுவடிகளிலிருந்து வெளிவராத நூல்களை வெளிக்கொணரும் பணியில் ஈடுபட்டுள்ள நிறுவனமான ஆசியவியல் நிறுவனம் சிற்றிலக்கியங்களுள் ஒன்றான நொண்டி நாடக வரிசையில் முன்னதாக, **திங்களூர் அருள்மலை (மாமலையான்) நொண்டி** நாடகத்தை வெளியிட்டுள்ளது. அந்த வரிசையில் இரண்டாவதாகத் தற்போது **திருப்புல்லாணி நொண்டி** நாடகம் என்னும் இந்நூல் வெளியிடப்படுகிறது.

**சுவடி பற்றிய செய்திகள்**

இந்நூல் தாங்கிய சுவடி, அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் R எண் 3754ல் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. 1952 –53 ல் மதுரைச் தமிழ்சங்க ஒலைச்சுவடியிலிருந்து இது படியெடுக்கப்பட்டுள்ளது. 12 அங்குல நீளம் 10 அங்குல அகலம் உள்ள தாள் சுவடியில் பக்கத்துக்கு 24 வரிகள் வீதம் 51 பக்கங்கள் எழுதப்பட்டுள்ளன.

**பதிப்புமுறை**

வழக்கம் போல் பாடல்கள் சீர் பிரிக்கப்பட்டு அருஞ்சொற்பொருள்கள் எழுதப்பட்டுள்ளன. பதிப்புரை, ஆய்வுரை, மொழிபெயர்ப்புடனும், சொல்லடைவுடனும் வெளியடப்படுகின்றது. நொண்டி நாடகங்கள் பட்டியலும், திருப்புல்லாணி இலக்கியங்கள் பற்றிய சுவடிகளன் அட்டவணையும் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

**நன்றியுரை**

இந்நூலை வெளியிட நிதியுதவி வழங்கிய யுனெஸ்கோ நிறுவனத்துக்கு எங்கள் நன்றி உரியது. நூலை வெளியிட ஒப்புதல் அளித்த அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகக் காப்பாளர் முனைவர். சௌந்தரபாண்டியன் அவர்களுக்கும் பிற உதவிகளைச் செய்த திரு.தியாகராசன் அவர்களுக்கும் எங்கள் நன்றி. இப்பணியில் எங்களை ஊக்குவித்த நிறுவன இயக்குநர் அவர்களுக்கு மிகவும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம். கணினியில் அச்சிட்ட திருமதி. தாரா, திருமதி. கீதா, செல்வி. கோகிலா, செல்வி. திவ்யா ஆகியோருக்கும், ஆங்கிலப் பகுதியில் அச்சுப்பிழை திருத்தி உதவிய திரு. ராமரத்தினம் அவர்களுக்கும், நன்முறையில் அச்சிட்ட அச்சகத்தார்க்கும் எங்கள் நன்றி.

பதிப்பாசிரியர்கள்

# Editor's Note

The **Institute of Asian Studies** has published many rare literary contained in palm- leaf manuscripts that remained unpublished. In the *Noṇṭi Nāṭakam* genre of *ciṟṟilakkiyam* (minor literature) category in Tamil, the Institute first published a work entitled *Tiṅkaḷūr Aruḷmalai (Māmalaiyāṉ ) Noṇṭi Nāṭakam.* This work *Tiruppullāṇi Noṇṭi Nāṭakam* is the second publication of the series.

**The details of manuscript**

The paper manuscript on which this work is based is kept and preserved at the **Government Oriental Manuscript Library** in the number R 3754. This manuscript was copied in 1952-53 from a palm-leaf manuscript of ***Maturait Tamiḻc Caṅkam.*** The paper manuscript 12 inches in length and 10 inches in width contains 51 pages with 24 lines per page.

**Editing methodology**

As usual the words of the songs in this work have been divided according to the metrical foot. Meanings of difficult words are provided. The entire text of the work has been translated into English. Besides a critical introduction and editor's note are there in both Tamil and English. A list of *Noṇṭi Nāṭakam* works in Tamil and a catalogue of the palm-leaf works related to the ***Cirrilakkiyam of Tiruppullāṇi*** are provided in the Annexure.

**Acknowledgement**

We are grateful to the UNESCO for having funded this project. We thank the **Government Oriental Manuscript Library** for their permission to publish this work. Our thanks are due to the Director of the **Institute of Asian Studies** for his guidance and encouragement we also thank Mrs. **Tara,** Mrs. **Geetha** , Miss. **Dhivya** and Miss. **Kokila** for the computer printing of the work. The press unit which has printed this work very well deserver our appreciation.

**Editors**

## நூலாய்வு

### நூற்பெயர்

நூலின் பெயர் **திருப்புல்லாணி நொண்டி நாடகம்**. திருப்புல்லாணி இறைவன் மீது பாடப்பட்ட நொண்டி நாடகம் என்பது பொருள். எனவே நொண்டி நாடகம் என்பது என்ன என்பதை அறிவது இன்றியமையாததாகிறது.

### சிற்றிலக்கியங்கள்

தமிழில் உள்ள இலக்கியங்கள், **பேரிலக்கியங்கள்**, **சிற்றிலக்கியங்கள்** என இரண்டாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. ஐம்பெருங்காப்பியங்கள், **கம்பராமாயணம்**, **பெரிய புராணம்** போன்றவை **பேரிலக்கியங்கள்** வகையைச் சார்ந்தவை. பேரிலக்கியங்களின் உள்ளே உள்ள **தூது**, **உலா**, **ஊஞ்சல்**, **அம்மானை**, போன்ற கூறுகளை ஒவ்வொரு தனி இலக்கியமாக்கிப் பாடப்பட்டவை **சிற்றிலக்கியங்கள்** எனப்படும். இச்சிற்றிலக்கியங்கள் பொதுவாகத் தொண்ணூற்றாறு என்று கூறப்பட்டாலும் 320க்கும் மேற்பட்ட சிற்றிலக்கியங்கள் இன்று நம்மிடையே உள்ளன. இவற்றுள் ஒன்றுதான் **நொண்டி நாடகம்**.

### நொண்டி நாடகம் என்றால் என்ன?

கள்ளர் குலத்தில் பிறந்து, திருட்டுத் தொழில் மேற்கொண்டு, தீமைகள் பல செய்து, மாறுகால் மாறுகை வாங்கப்பட்டு நொண்டியானவன் மனம் திருந்தி இறைவனை வேண்டிக் காலைப் பெறுவதான கதையை நாடக அமைப்பில் கூறுவதே நொண்டி நாடகம். இது நொண்டியே பாடி ஆடுவதாக அமையும்.

**தொல்காப்பியம்** நகைச்சுவை என்னும் மெய்ப்பாடு தோன்றுதற்குரிய நிலைக்களன்களாக எள்ளல், இளமை, பேதைமை, மடன் என்ற நால்வகையைக் குறிப்பிடுகிறது.[1] இந்நகைச் சுவையை அடித்தளமாகக் கொண்டு எழுந்தவையே நொண்டி நாடகங்கள். **நொண்டிச் சிந்து** எனவும் **நொண்டி நாடகம்** எனவும் குறிக்கப்படும் இவ்விலக்கிய வகை, தமிழ்மேடை நாடகத்துக்கு முன்னோடியாக அமைகின்றது.

நகைச்சுவையும் எள்ளலும் நிறைந்து 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் பெருகிய வழக்குடன் அமைந்த இந்நாடகம் மக்களை மகிழ்வித்து அறிவுபுகட்டும் நோக்கத்துடன் அமைகின்றது.

### நொண்டி நாடகக் கருவின் தோற்றம்

இலக்கிய வகை ஒவ்வொன்றும் ஒரு கருப்பொருளை அடிப்படையாகக் கொண்டுதான் தோற்றம் பெறுகின்றது. அவ்வகையில் நொண்டி நாடகமும் திருட்டுத் தொழில் காரணமாக ஒருவன் கைகால்களை இழக்கிறான் என்னும் ஒரு கருவைக் கொண்டு அமைகின்றது. நொண்டி நாடகக் கருவின் தோற்றத்தினைக் காரண காரியக் கோட்பாட்டின்படி ஆய்கின்றபோது சில விளக்கங்களும் முடிவுகளும் கிடைக்கின்றன.

தமிழ் நொண்டி நாடகங்களில் முதலாவதாக அறியப்படுவது **சீதக்காதி நொண்டி நாடகம்**. இந்நாடகம் கி.பி.1697 ற்குப்பின் எழுந்துள்ளது. நொண்டி நாடகம் எழுவதற்குத் தோற்றுவாயாக விளங்குவது, இதற்குச் சுமார் 50 ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்த மதுரைவீரனின் உண்மை வரலாறாகும்.

கி.பி. 1623 ஆம் ஆண்டு முதல் 1659 ஆம் ஆண்டு வரை மதுரையை ஆட்சி செய்தவர் திருமலை நாயக்க மன்னர். இவரது ஆட்சிக் காலத்தில் மதுரைவீரன் என்னும் வீரன் அரச குடும்பப் பெண்ணான வெள்ளையம்மாளைக் கவர்ந்து சென்று திருமணம் செய்து கொள்கிறான். இதையறிந்த திருமலை மன்னர் மதுரை வீரனைச் சிறை செய்துகொண்டு வரச்சொல்லி, மாறுகால், மாறுகை தறிக்க உத்தரவிடுகின்றார். மதுரைவீரனும் அவ்வாறே தண்டிக்கப்படுகிறான். இவ்வுண்மைச் சம்பவ வரலாறு அக்காலத்தைய புலவர் ஒருவரால் **மதுரைவீரன் கதை**யாக நாட்டுப்புறக் கதைப்பாடல் வகையில் பாடப்பட்டது. இக்கதையானது அக்கால கட்டத்தில் தமிழகம் முழுவதும் வழங்கி வரலாயிற்று.

தமிழிலக்கியத்தில் இக்கால கட்டத்திலிருந்தான் திருட்டுக் குற்றத்தின் தண்டனையாக மாறுகால், மாறுகை வாங்கும் வழக்கம் தொடங்குகின்றது. பாண்டி நாட்டில் பேசப்பட்டு வந்த **மதுரைவீரன் கதை**யும் அதன் தொடர்பான மாறுகால், மாறுகை வாங்கும் வழக்கமும் தென்பாண்டி நாட்டில் வாழ்ந்து வந்த முத்தாலங்குறிச்சி க. கந்தசாமிப் புலவரால் தாமியற்றிய **சீதக்காதி நொண்டி நாடகத்**திற்குக் கருப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டது. பின்வந்த புலவர்களும் இக்கருத்தையே தாமியற்றிய நொண்டி நாடகத்திற்குக் கருப்பொருளாகக் கொள்ள ஆரம்பித்துள்ளனர் என்பதைத் தமிழிலக்கிய வரலாற்றால் அறியமுடிகின்றது."[2]

**நொண்டி நாடகம் எழுந்த காலச் சூழ்நிலை**

இந்திய வரலாற்றில் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியும் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கமும் ஒரு குறிப்பிடத்தக்க காலகட்டமாகும். 1707இல் முகலாயச் சக்கரவர்த்தி ஔரங்கசீப் இறந்ததும் முகலாய சாம்ராஜ்யம் சிதற ஆரம்பித்தது. வரலாற்றில் அக்கால கட்டம் 'வரலாற்றின் பெரும் அராஜகம்' என்று குறிப்பிடப்படுகிறது. இந்தச் சிதறல் போக்கு ஐரோப்பிய நாடுகளான இங்கிலாந்து, பிரான்சு, ஆகியவற்றின் நுழைவினால் மிகுதியாயிற்று. ஆங்கிலேயர்கள் சென்னையில் இருந்து கொண்டும் பிரெஞ்சுக்காரர்கள் புதுவையில் இருந்து கொண்டும் இந்தியாவின்மீது தங்களின் ஆதிக்கத்தை நிலைநாட்ட ஒருவருக்கொருவர் போட்டியிட்ட காலம் அது.

அக்கால கட்டத்தில் நம் நாட்டில் போர் செய்து வந்த படைகளுள் ஒன்று காலாட்படை, மற்றொன்று குதிரைப்படை. குதிரைப்படைக்கே மதிப்பும் கௌரவமும் அதிகம். எனவே குதிரைப்படையை மிகுதியாக்க எதிரிகளிடமிருந்து குதிரைகளைத் திருடிக்

கொள்வது வழக்கமாக இருந்தது. ஆங்கிலப் படைக் குதிரைகளைப் பிரெஞ்சுக்காரர்களும், பிரெஞ்சுப் படைக் குதிரைகளை ஆங்கிலேயர்களும் திருடினர். குதிரையைத் திருடத் தெற்கத்திக் கள்ளர்கள் பயன்படுத்தப்பட்டனர். இத்தகைய கள்ளர்கள் கிழவர்களாகி ஊர் திரும்பியபிறகு தங்கள் பேரன்மார்களுக்கும், பிறருக்கும் தாங்கள் குதிரை திருடப்போன சூழல்களையும், நிகழ்த்திய வீரச் செயல்களையும், பட்ட துன்பங்களையும், தண்டனையால் தாங்கள் கைகால் இழந்ததையும் கதையாக எடுத்துக்கூறி, பொழுது போக்குவது வழக்கம். இதை அடிப்படையாகக் கொண்டுதான் தமிழ்ச் சிற்றிலக்கிய வகையில் ஒன்றாக விளங்கும் **நொண்டி நாடகம்** தோன்றியிருக்க வேண்டும்.

பதினேழாம் நூற்றாண்டின் இடைக்காலத்திற்குப்பின் எழுந்த **மதுரைவீரன் கதை**யின் தாக்கம், பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவின்மீது அயல்நாட்டாரால் ஏற்பட்ட போர் விளைவு, குதிரை களவாடுதல், காலச்சூழ்நிலை ஆகிய இவை அனைத்தும் **நொண்டி நாடகம்** என்னும் இலக்கியவகை தோன்றுவதற்குக் காரணங்களாக இருந்துள்ளன.[3]

**கருப்பொருள் ஆய்வு**

**உறித்தாபசன் கதை** என்னும் சமண சமயக் கதையானது நொண்டி நாடகத்தின் கருப்பொருளையுடையதாக அமைகிறது. அக்கதை :

கௌசாம்பி என்னும் நகரத்து அரசன் ஸ்ரீஷேண மகாராசன். இவன் மனைவி ஸ்ரீமதி. இவர்களின் புத்திரர்கள் ஸ்ரீதரன், சிவதேவன். அமைச்சர் மகன் ஸ்ரீதத்தன். இந்நகரில் பொய்யான தவ ஒழுக்கத்தையுடைய உறித்தாபசன் என்பவன் இருந்தான். இவன் பகல் நேரம் முழுதும் தொங்கும் உறியில் வீற்றிருந்து தவமேற்கொள்வான். இரவு நேரத்தில் வெளியில் வந்து அந்நகரிலுள்ள செல்வந்தர்கள் வீட்டில் பொன், பொருளைத் திருடி ஒரு வேசியிடம் கொடுத்து இன்பமாக இருந்துவிட்டு பொழுது புலர்வதற்குள் திரும்பவும் உறியின்மேல் சென்று இருந்து கொள்வான். இவ்வாறு ஒவ்வொரு நாளும் நடந்தவண்ணம் இருக்க, அவ்வூர் மக்களும் அரசனும் 'திருடன் யார்?' என்று அறியாமல் திகைக்கின்றனர்.

அமைச்சர் மகனான ஸ்ரீதத்தன் இதைக் கண்டுபிடிக்க ஒருநாள் அந்தி நேரத்தில் உறித்தாபசனிடம் வந்து மாலைக்கண் நோய் உள்ளவன் போல் நடித்து, அவன் வீட்டில் தங்கியிருக்கின்றான். உறித்தாபசன் வழக்கம்போல இரவில் உறியை விட்டு இறங்கி நகரிலுள்ள செல்வந்தர் வீட்டில் புகுந்து விலையுயர்ந்த பொருட்களைத் திருடி வந்து வேசியிடம் கொடுத்து இன்பம் அனுபவிக்கிறான். இந்நேரத்தில் அவனைப் பின் தொடர்ந்துவந்த ஸ்ரீதத்தன், படைத்தலைவன் விக்ரமகேசரிக்குச் செய்தி அறிவித்து அவனைப் பிடிக்கத் துணை செய்கின்றான். விசாரணை மன்னன்முன் நடக்கிறது. விசாரணையில் வேசிக்கு மூக்கு அறுக்கப்படுகிறது. பொய் ஒழுக்கனான உறித்தாபசனின்

கைகால்கள் தறிக்கப்படுகின்றன. இவ்வாறு இக்கதை முடிகிறது. திருட்டுத் தொழிலினால் உண்டாகும் கெடுதலை இக்கதை கூறுகிறது.

பொருளைத் திருடி வேசியிடம் கொடுத்து இன்பமாக இருந்து முடிவில் அகப்பட்டு கைகால் அறுக்கப்படும் இத்தன்மைகளைக் கருப்பொருளாகக் கொண்ட இக்கதை நொண்டி நாடகக் கதைக் கருவிற்கு ஒப்புமை உடையதாக அமைகிறது.[4]

**நொண்டி நாடகம் வளர்ச்சி வரலாறு**

இறைவனின் பெருமை, தலத்தின் சிறப்பு, சமய ஒழுக்கம் ஆகியவை பாசுரங்களாகப் பாடப்பட்டு வந்த வரலாறு, பொதுமக்கள் விரும்பும் காட்சி வடிவிலும், பாட்டு வடிவிலும் மாறிய பரிணாமமே **குறவஞ்சி, நொண்டி, பள்ளு** ஆகிய நாடக அமைப்புகளாகும்.

நொண்டி நாடகங்களில் முதலில் தோன்றியது ***சீதக்காதி* நொண்டி நாடகம்.** இதனை இயற்றியவர் முத்தாலங்குறிச்சி **க. கந்தசாமிப் புலவர்.** இந்நூலில் காணப்படும் செய்தியான துல்பர்கானின் செஞ்சி முற்றுகை கி.பி.1689 முதல் கி.பி.1697 முடிய எட்டாண்டுக் குட்பட்டதாகும். எனவே கி.பி.1697–ஆம் ஆண்டிற்குப்பின் இந்நூல் தோன்றியிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. மேலும் இந்நூலாசிரியர் **திருச்செந்தூர் நொண்டி நாடகம், திருவனந்தபுரம் நொண்டி நாடகம்** என்னும் இரு நொண்டிநாடகங்களையும் இயற்றியுள்ளார்.

*பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்த அமரம்பேடு* **மதுரகவிராயர் திருக்கச்சூர் நொண்டி நாடகம்** என்னும் நூலை இயற்றியுள்ளார். இவர் தம்மை ஆதரித்த வள்ளலான புதுவை ஆனந்தரங்கம் பிள்ளையின் கொடைத்தன்மையை இந்நூலின் பல்வேறு பாடல்களில் பாடியுள்ளார்.

இந்தக் காலகட்டத்தில் **அனந்தபாரதி** என்பவரால் **திருவிடை மருதூர் நொண்டி நாடகம்** என்னும் நூல் பாடப்பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. இந்நூலிற்கு முன்பு தோன்றிய சில நொண்டி நாடகங்களின் பெயர்களை இந்நூல் தருகிறது. அவை : 1. **திருச்செந்தூர் நொண்டி நாடகம், 2. சாத்தூர் நொண்டி நாடகம், 3. பழனி நொண்டி நாடகம், 4.குன்றக்குடி நொண்டி நாடகம்.**

பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்கும் கடைப்பகுதிக்கும் இடையில் (கி.பி. 1750-1780) **கு. அவிநாசிப் புலவரால் திங்களூர்** அருள்மலை **நொண்டி நாடகம்** என்னும் நூல் இயற்றப்பட்டுள்ளது. **தஞ்சை வேதநாயகம்** *சாஸ்திரி என்பவர் கி.பி.1800* இல் **ஞான நொண்டி நாடகத்தையும், 1809** இல் **சென்னப்பட்டணப் பிரவேச நொண்டி** என்ற நாடகத்தையும் இயற்றியுள்ளார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் **வீரராகவையங்கார்** என்பவர் **திருப்புல்லாணி நொண்டி நாடகம்** என்னும் நூலையும், **மாரிமுத்துப் பிள்ளை** என்பவர் **தில்லைவிடங்கன்**

அய்யனார் நொண்டி நாடகம் என்னும் நூலையும் இயற்றியுள்ளார். மேலும் இந்நூற்றாண்டில் திருமலையாதிபன் நொண்டி நாடகம் என்னும் நூலை மன்னார் பெருமாள் புலவர் என்பாரும், ஆதிமூலேசர் நொண்டி நாடகம் என்னும் நூலைக் குழந்தைக் கவுண்டர் என்பாரும், திருக்குடந்தை சாரங்கபாணி நொண்டி நாடகம் என்னும் நூலை அரியலூர் சண்பக மன்னார் என்பாரும் இயற்றியுள்ளார்கள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சதாசிவம் பிள்ளை என்பவரால் இல்லற நொண்டி நாடகம் என்னும் நூலும், தபோமணிப் பிள்ளை என்பவரால் தெட்சணா மூர்த்தி நொண்டிச் சிந்து என்னும் நூலும், கோவளம் முத்துராமக் கவிராயர் என்பவரால் திருத்தணிகை நொண்டி நாடகம் என்னும் நூலும் இயற்றப்பெற்றுள்ளன. இந்நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் திருவாமாத்தூர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என்பவர் புதுவை நொண்டி நாடகம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

இருபதாம் நூற்றாண்டில் 1940ற்குப் பின் நாமக்கல் கவிஞர் வெ.இராமலிங்கம் பிள்ளை என்பவரால் காந்தி சுதந்திர நொண்டிச் சிந்து என்னும் நூலும், சுதந்திரத் தியாகியும் கவிஞருமான ஊமையம்பட்டி ந.கந்தசாமி என்பவரால் அலிப்புரம் நொண்டி நாடகம் என்னும் நூலும் இயற்றப்பட்டுள்ளன. இவ்விரு நொண்டி நாடகங்கள் மட்டுமே இந்நூற்றாண்டில் எழுந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.[5]

தமிழிலக்கிய வரலாற்றில் இதுவரை சுமார் 44 நொண்டி நாடகங்கள் தோன்றியதாக அறியமுடிகிறது. இவற்றில் சுமார் 15 நொண்டி நாடகங்கள் மட்டுமே அச்சாகி வந்துள்ளன. பிற நொண்டி நாடகங்கள் சுவடி நிலையிலேயே இருந்து அழிந்த வண்ணம் இருக்கின்றன.

**நொண்டி நாடகங்களின் இலக்கிய நோக்கம்**

நொண்டி நாடகங்கள் எள்ளலை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவாதலின் இந் நாடகங்கள் மக்களைக் களிப்பூட்டி, அவர்களுக்கு நல்லொழுக்கத்தைக் கற்பிப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளன.

இறைவனைப் போற்றுதல், சமயத்தைப் பரப்புதல், அறநெறிக் கருத்துக்களை மக்களுக்கு உணர்த்துதல், ஆதரித்த வள்ளல்களின் புகழ் பாடுதல் ஆகியவை நொண்டி நாடக இலக்கியங்களின் நோக்கமாக அமைந்துள்ளன. பிற்காலங்களில் தேசிய உணர்வு, கட்சிக் கொள்கை ஆகியவற்றைப் பரப்ப நாடகக்கலை பயன்படுத்தப்பட்டதுபோல, இந்தநாடகங்கள் எழுந்த காலத்தில் சமயநெறி, தலப்பெருமை போன்றவற்றைப் பரப்ப இவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஒருவனே மேடையின்மீது தோன்றி பாடித் தன்வரலாறு கூறுவதாக அமையும் நொண்டி நாடகத்தை ஒரு Mono-acting நாடகமாகக் கொள்ளலாம்.

**நொண்டி நாடக இலக்கணம்**

**யாப்பு**

சிற்றிலக்கியங்களுக்கு இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்களில், பிரபந்தத் திரட்டு மட்டுமே நொண்டி நாடகத்துக்கு இலக்கணம் கூறுகிறது.

"கலிப்பாவும், தாழிசையும், நான்மணி மேற்காட்டல்
*நலத்துறு சடானனம் நற்பா வலக்காலிற்*
காலற்ற வேகாங் கிகலிவெண் பாச்சிந்தாய்க்
கோலுற்றார் நொண்டியென்று கொண்டு."

என்னும் நூற்பாவால் நொண்டி நாடகம் கலிப்பாவாலும், தாழிசையாலும், *கலிவெண்பாவாலும், சிந்தாலும் அமையும் என அறியலாம். ஆனால் எல்லா நொண்டி* நாடகங்களிலும் தருக்களும் (கீர்த்தனை போன்ற அமைப்புடையது), விருத்தங்களும் இடம்பெற்றுள்ளன.[6]

**பெயர் பெறுதல்**

*தலத்தின் பெயராலும், தலம், இறைவன் இரண்டின் பெயராலும்*, நொண்டிக்கருளிய இறைவன் பெயராலும், நொண்டியைக் காத்த வள்ளல் பெயராலும், நொண்டி பெற்ற ஞானத்தின் பெயராலும் நொண்டி நாடகத்தின் பெயர் அமையும்.

**தலத்தின் பெயர்**

திருப்புல்லாணி நொண்டி நாடகம்,
திருக்கச்சூர் நொண்டி நாடகம்,
பழனி நொண்டி நாடகம்,
திருமலை நொண்டி நாடகம்.

**தலத்திலுள்ள இறைவன் பெயர்**

ஆதிமூலேசர் நொண்டி நாடகம்.

**தலம் இறைவன் இரண்டின் பெயர்**

திங்களூர் மாமலையான் நொண்டிநாடகம்
தில்லைவிடங்கன் ஐயனார் நொண்டி நாடகம்
குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகம்

**வள்ளல் பெயர்**

செய்தக்காதி (சீதக்காதி) நொண்டி நாடகம்

### ஞானத்தின் பெயர்

ஞான நொண்டி நாடகம்.

### அமைப்பு

நொண்டி நாடகங்கள் காப்பு எனப்படும் வாழ்த்துடன் தொடங்குகின்றன. எந்தச் சமயச் சார்புடையதோ அந்தச் சமயக் கடவுளின் வணக்கம் இடம் பெறுகிறது. பின்னர் தோடயம், அவையடக்கம் ஆகியவை இடம் பெறுகின்றன.

நொண்டி சபைக்கு வந்து தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ளுதல், தன் குலப் பெருமை கூறதல், தன் வல்லமை கூறதல், ஊர் ஊராய்ச் சென்று திருடுதல், தாசியிடம் பொருளை இழத்தல், மாறு வேடம் பூண்டு மீண்டும் ஊர் ஊராய்ச் சென்று திருடுதல், மீண்டும் பொருளை வேசியிடம் இழத்தல், மறுபடியும் திருடும்போது பிடிபட்டு மாறுகால் மாறுகை இழத்தல், மரக்கால் பெறுதல், குறிப்பிட்ட ஊரில் இறைவன் அருளால் கால் பெறுதல், வாழ்த்து, நூற்பயன் என்ற அமைப்பில் நொண்டி நாடகங்கள் காணப்படுகின்றன. சில உறுப்புகள் குறைதலும் உண்டு.

### நொண்டி நாடகத்தில் நாட்டுப்புறக் கூறுகள்

சகுனம் பார்த்தல், கூறியதையே திரும்பக் கூறதல், பேச்சு வழக்கு, பழமொழி, விடுகதைகளைப் பயன்படுத்தல், சோதிடம் பார்த்தல், மருந்திடுதல், சடங்குகள், கனவுகள், நம்பிக்கைகள் ஆகிய நாட்டார் இயல்புகள் நொண்டி நாடகத்தில் காணப்படுகின்றன.

### திருப்புல்லாணி நொண்டி நாடகம்

### அமைப்பு

திருப்புல்லாணி நொண்டி நாடகத்தில் காப்பாக, கலியன் (திருமங்கையாழ்வார்), நம்மாழ்வார், சேனை முதலியார், கருடன், ஆதிசேடன், ஆகியோர் மீது துதி பாடப்படுகின்றது. பிறகு நொண்டியாகிய சோரசூரன் சபைக்கு வருகிறான். பின்னர் தன் வல்லமை, வரலாறு, குலப்பெருமை கூறுகின்றான். ஆற்றாப்புலி என்பவனோடு பந்தயம் வைத்துத் தோற்றுத் தலயாத்திரை செல்லுதல், ஒரு மங்கையின் ஆபரணங்களைத் திருடுதல், தாசியிடம் மோகம் கொண்டு அவற்றை இழத்தல், அவள் வீட்டிலேயே திருடுதல், திருடிய பொருளைப் புதைத்தல், புதைத்த பொருள் களவு போதல், கள்ளர்களோடு சேருதல், ஈஸ்வர யோகியிடம் செல்லுதல், கேரள அரசனிடம் தன அதிகாரியாதல், சேதுபதி அரண்மனையில் சேனாதிபதியாதல், மீண்டும் தாசியிடம் சென்று, மீண்டும் திருடுதல், மாறுகால், மாறுகை வாங்கப்படுதல், திருப்புல்லாணி சென்று இறைவனை வழிபட்டுக் கால்கைகளைப் பெறுதல், ஆகிய தன் வரலாறுகளை விவரிக்கின்றான். வாழி பாடலுடன் நூல் முடிகிறது. இதில் தோடயம் நூற்பயன் ஆகியவை

இடம் பெறவில்லை. ஆனால் **வாழி** பாடலில் "இந்நூலைப் படித்தவர் கேட்டவர் வாழி" என்று மட்டும் கூறப்படுகிறது.

**யாப்பு**

ஒரு சில விருத்தம் தவிர ஏனையவை சிந்தாகவே அமைந்துள்ளன.

**பெயர்க்காரணம்**

திருப்புல்லாணி இறைவனை வணங்கி அருள் பெற்றதால் **திருப்புல்லாணி நொண்டி நாடகம்** என்று பெயர் பெற்றுள்ளது.

**திருப்புல்லாணி இருப்பிடம்**

**திருப்புல்லணை** என்பதே **திருப்புல்லாணி** என்று மருவியுள்ளது. இவ்வூர் இராமநாதபுரத்துக்குத் தெற்கே கீழக்கரை செல்லும் பாதையில் ஆறு கல் தொலைவில் உள்ளது. இராமநாதபுரம் சேதுபதியால் மாறுகால் மாறுகை வாங்கப்பட்டதால் பக்கத்திலுள்ள திருப்புல்லாணியில் கால் பெறுதல் பொருத்தமாக உள்ளது.

**ஆழ்வார் வருணனை**

திருப்புல்லாணி,

"கள்ளவிழும் மலர்க்காவியும் தூமடல் கைதையும்
புள்ளும் அள்ளற் பழனங்களும் சூழ்ந்த புல்லாணி"

என்று திருமங்கையாழ்வாரால் வருணிக்கப்படுகிறது.[7]

(காவி – நெய்தல், கைதை – தாழை, புள் – பறவை, அள்ளல் – சேறு, பழனம் – வயல்)

கடலோரம் உள்ள ஊராதலால் நெய்தல், தாழை சூழ்ந்த ஊர் என்று பாடினார் திருமங்கையாழ்வார்.

**தல வரலாறு**

"**திருப்புல்லாணி** நூற்றெட்டு வைணவ திவ்விய தேசங்களுள் ஒன்று. இங்கு, புல்லர், கண்வர், காலவர் ஆகியோர் தவம் செய்துள்ளனர். புல்லர் விரும்பியபடி திருமால் தேவியர் மூவரோடும் (ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி), நான்கு கரங்களோடும், ஐந்து ஆயுதங்களோடும் (சங்கு, சக்ரம், வில், வாள், கதை) ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம், பீதம்பரத்தோடும் காட்சியளிக்கிறார். இவருடைய திருப்பெயர் கல்யாண ஜகந்நாதர்.

இத்தலத்தில் தேவலர் என்னும் முனிவர் தவம் செய்யும்போது, சப்த கன்னியர் அங்குள்ள திருக்குளத்தில் நீராடினர். அவர்கள் தம் தவத்தைக் கலைத்ததால் முனிவர்

அவர்களை யட்சர்களாகும்படி சபித்தார். புல்லாணி இறைவனை வழிபட்டுச் சாப விமோசனம் அடையும்படியும் கூறினார்.”[8]

இராமாயணத்தில் சீதையை மீட்க இலங்கை செல்லும் இராமன் இடையேயுள்ள கடலைக் கடக்க வருணனை நோக்கி இங்குதான் தவம் செய்தார். புல்லணையில் (தர்ப்ப சயனம்) இருந்து தவம் செய்கிறார். இதனைக் கம்பர்,

“தருண மங்கையை மீட்பது ஓர்நெறி தருகெனும்
பொருள்ந யந்துநல் நூல்நெறி அருக்கிய புல்லில்
கருணை யங்கடல் கிடந்து கருங்கடல் நோக்கி
வருண மந்திரம் எண்ணினன் விதிமுறை வணங்கி”

என்று பாடுகிறார்.[9] இராமர், திருப்புல்லாணிப் பெருமாளை வழிபட, இறைவன் இராமருக்கு வில் ஒன்றைக் கொடுத்துள்ளார். இதனால் **தெய்வச் சிலையார், திவ்யசரபன்** என்ற பெயர்களைப் பெற்றுள்ளார்.

இதன்பின் இராமர் கடலை வற்றச் செய்வதைவிட அணை கட்டுதலே ஏற்புடைத்து என்று கருதிச் சேது அணையைக் கட்டினார். எனவே இத்தலத்துக்கு **ஆதிசேது** என்றும் பெயர்.

இறைவன் பெயர் **கல்யாண ஜகந்நாதன்.** தயார் பெயர் **கல்யாணவல்லி,** விமானம் **கல்யாண விமானம்.** பிரகாரத்தில் இராமர் தர்ப்பசயனராகக் காட்சியளிக்கிறார். தீர்த்தங்கள் **ஹேமதீர்த்தம், சக்கர தீர்த்தம்.** தல விருட்சம், **அசுவத்த விருட்சம்** என்னும் போதி மரம். இத்தல விருட்சம் பற்றி ஒரு புராணக் கதை உண்டு.

ஆதியில் படைப்புத் தொழில் பரந்தாமனிடத்தில் இருந்த போது முதலில் பிரம்மாவையும் நவப்பிரஜாதிபதிகளையும், இந்திரன் முதலானோரையும் படைத்த திருமால், பின்னர் பிரம்மனைப் படைப்புத் தொழில் செய்ய நியமித்தார். படைப்புத் தொழில் செய்ய பிரம்மா தெற்கு நோக்கி வந்தபோது கோடி சூர்ய ஒளியோடு ஒரு ஜோதி தெரிய அது என்ன என்று வினவினார் பிரமன். “அதுவே ஞானவடிவான போதிமரம். இதன் அடியில்தான் ஜகந்நாதராக நான் தங்கியிருக்கிறேன்” என்று திருமால் கூறியருளியதாகப் புராணம்.

திருமங்கை மன்னன் இத்தலத்தின் இறைவன் மீது இருபது பாசுரங்கள் நாயகி பாவத்தில் பாடியுள்ளார்.[10]

**வருமானம்**

திருப்புல்லாணியை உள்ளடக்கிய சமஸ்தானமே சேது சமஸ்தானம். சேதுபதி மன்னர்கள் இக்கோயில் பராமரிப்புக்காக 27 கிராமங்கள் அளித்துள்ளனர். கிழவன் சேதுபதி என்னும் ரகுநாத சேதுபதி பதினொரு கிராமங்களைக் கொடுத்துள்ளார். இதற்குச் செப்பேட்டுச் சாசனங்களும், ஓலைச் சாசனங்களும் உள்ளன. கோயிலுக்குச் சொந்தமாக உப்பளங்களும் உண்டு. தூத்துக்குடி முத்துக்குளிப்பிலும் பங்குண்டு.[11]

**நொண்டியின் கோலம்**

பொதுவாக நாடகங்களில் ஒப்பனைக்கான செய்திகளை நூல்களே சொல்லி விடுவது வழக்கம். அதுபோலவே இந்நாடகத்தில் நொண்டியின் ஒப்பனை "இடையில் பட்டு, காலில் வீரவண்டையம், பொற்சரிகை மேலாடை, முறுக்கு மீசை, எஃகுப் போல் உடல், பூமியில் உள்ள புதையலைக் கண்டுபிடிக்கும் மை, கன்னக் கோல் ஆகியவற்றுடன் சபையில் தோன்றினேன்" என்ற நொண்டியின் கூற்றால் விளக்கப்படுகிறது.

**நூலில் காணப்படும் பழமொழிகள்**

"நண்டு கொழுத்தால் வளையில் தங்காது" (6-6)
"வெறுங்கை முழம் போடாது" (8-25)
"ஒட்டுமோ பச்சைமண்ணும் சுட்ட மண்ணும்" (8-30)
"எளியாரை வாட்டினால் ஏற்குமோ தெய்வம்" (10-21)
"கேடுவரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே" 12-50)
"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்" (14-55)
"சட்டி சுட்டதடா கைவிட்டதடா" (14-65)
"இளைத்தவன் தேவி எல்லோர்க்கும் பத்தினி" (14-88)
"கண் கெட்டபின் சூரிய நமஸ்காரம்" (14-108)
"துள்ளின மாடு பொதி சுமக்கும்" (14-116)
"பூ விற்ற கடையில் புல்லு விற்பதோ" (14-124)

போன்ற பழமொழிகள் ஏற்ற இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**உவமைகள்**

நூலில் ஆங்காங்கே பொருத்தமான உவமைகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. வேசியின் வலைக்குள் அகப்பட்டதை **கண்ணியில் சிக்கிய சிட்டுப்போல்** என்று கள்ளன் விவரிக்கின்றான். (6-22)

தாய்க்கிழவியை வருணிக்கையில் **வெள்ளைக் கொக்குப் போலே கண்கள், சாமரம் போல் தலை,** என்று கூறுகிறார் ஆசிரியர். (6-33, 34)

திருடனே தனாதிகாரியாக நியமிக்கப்பட்டதற்கு **விரைக்கோட்டை எலி** உவமிக்கப்படுகிறது. (12-18)

தாசியைக் கண்டு உருகும்போது **உலையிட்ட மெழுகு** உவமையாக்கப் படுகிறது. (12-40)

கூத்துப் பார்த்த விடத்தில் தாசியிடம் மோகங்கொண்டு உடனே போக இயலாததால் நொண்டி, **முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டதுபோல்** கொட்டாவி விட்டதாகக் கூறுகிறான். (12-44)

தாசியைத் தேடிப் போகையில் **குழிநரிபோல்** பதுங்கிச் சென்றதாகக் கூறுகிறான். (12-52)

கூட்டத்தின் நடுவே தான் விரும்பிய தாசியைக் கண்டமைக்குப் **புதையல் கண்டதை** ஒப்புமைப் படுத்திக் கூறுகிறான். (12-58)

'திருடனுக்குச் சேனாதிபதி பதவியா' என்பதற்கு **நாய்க்குத் தேங்காய் தகுமோ** என்னும் உவமை கூறப்படுகிறது.

*மாறுகால் மாறுகை வாங்கப்பட்டுக் கவனிப்பாரற்றுக் கிடந்த போது மைத்துனன்* வருகை **எதிர்வந்த தெய்வமெனக்** கூறப்படுகிறது. (12-118)

**காகம் அன்னம்போல் நடக்க நினைத்துத் தன்னடையும் இழந்த செய்தி** திருடன் காலிழந்தமைக்கு உவமையாக்கப்படுகிறது. (12-120)

இவ்வாறு பல அழகிய உவமைகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

**சகுனம்**

பொதுவாக நாட்டாருக்குச் சகுனம் பார்ப்பதில் நம்பிக்கை மிகுதி. 'கெவுளி சொல் (6-12) கேட்டு எழுந்திருந்தேன்', 'போகாதே என்றொரு கரும்பூனை குறுக்கே போனதை மீறிச் சென்றேன்' (12-51), 'தோளும், கண்ணும் இடப்பக்கம் துடித்தன (12-58) (தீச்சகுனம்) அதையும் மீறித் தாசியைத் தூக்கினேன்' என்று திருடன் கூறுவதிலிருந்து சகுனங்களில் மக்களுக்கிருந்த நம்பிக்கை புலப்படுகிறது. 'கெடுதல் வரும்போது தூமதேது என்னும் வால் நட்சத்திரம் தோன்றும்' என்னும் நம்பிக்கையும் உவமை வாயிலாய் விளக்கப்படுகிறது. (6-20)

**பேச்சுவழக்குச் சொற்கள்**

நாட்டார் இலக்கியங்களில் பேச்சுவழக்குச் சொற்கள் காணப்படுதல் இயல்பு. ஒலுகு (திண்டு), ஓட்டாண்டி (ஒன்றுமில்லாதவன்), கும்பு (கும்பல்), அப்புச்சி (அக்காள் கணவன்), தாட்டீகம் (கம்பீரம்), மடிசஞ்சி (சாக்குப்பை), கடுக்கன், கண்டி தெம்பதி (தம்பதி) கெதி கெட்ட, செலதாரை, பூந்து (புகுந்து), முசுறு (சிகப்புக் கட்டெறும்பு), ரெம்பும் (நிரம்பும்) ஆகிய பேச்சு வழக்குகள் இந்நாடகத்திலும் இடம்பெற்றுள்ளன.

**சொல் விளையாட்டு**

ஆங்காங்கே காணப்படும் சிலேடைகள், அடுக்கு மொழிகள், ஆசியரின் சொல்திறமைக்குச் சான்று பகர்கின்றன. **அங்க தேசத்தில்** போய் என்பது உடலையும், அங்க நாட்டையும் குறிக்கிறது. இதேபோல் **கலிங்கம்** என்பது ஆடையையும், கலிங்க

தேசத்தையும் குறிக்கின்றது. "தனத்தைக் கொடுத்துத் தேடும் தனத்தையெல்லாம் எடுத்துக் கொண்டேன்" என்று கூறுமிடத்துத் தனம் சிலேடையாவதோடு (மார்பு, பொருள்) சொல்லடுக்கு அழகாக அமைந்துள்ளது. **திருடா எழுந் திருடா** என்பதும் இவ்வாறே.

வக்கணை பேசுவதும் ஏசுவதும்
**வரம்பில்லை** யவர்நாக்கில் **நரம்பில்லை**

என்பதும் ஓசைநயத்துடன் ஒலிக்கிறது. காவலர்கள் தூங்காமலிருந்தமையை "இரவு அவர்கள் சிவராத்திரி கொண்டாடினார்கள் நான் நன்றாகத் தூங்கினேன்." என்று திருடன் கூறுவதாக சொல்திறமையுடன் விளக்குகிறார் ஆசிரியர்.

**பிறமொழிச் சொற்கள்**

சோரசூரன் திருடிவிட்டு ஓடும்போது சிப்பாய்கள் துரத்துகின்றனர். இதில் தெலுங்குச் சிப்பாய்கள் "எந்த மஞ்சிவாருனி உன்னாடு தொங்கப் பாடுகோ" என்றும்,

மராட்டியர்கள் "பளால் பக்காச் சோர மளால்" என்றும்,

கன்னடியர் "வள்ளே கள்ளன் சிக்கிதன் நல்லா" என்றும், பட்டாணியர், பகடோ பகடத்தேரிப் பாணிச்சோர்" என்றும் கூறுவதாக ஆசிரியர் பாடுகிறார். எல்லாவற்றுக்குமே "கள்ளனைப் பிடியுங்கள்" என்றுதான் பொருள். இவ்வரிகளிலிருந்து ஆசிரியரின் பிறமொழி அறிவு புலப்படுவதோடு, படையில் எல்லா தேசத்தவரும் இருந்தனர் என்றும் வரலாற்றுச் செய்தியும் புலப்படுகிறது. எவ்விட, எந்தாணு என்னும் மலையாளச் சொற்களும் நூலில் காணப்படுகின்றன. கேரள நம்பூதிரிகள் பேசிக் கொண்டுவருமிடத்தில் இச்சொற்கள் கையாளப்படுகின்றன.

**நூலில் காணப்படும் வரலாற்றுச் செய்திகள்**

1. இராம கதையைக் கேட்டவுடன், "இராமரோடு போருக்கு வருகிறேன்" என்று கூறிய சேர அரசன், 2. பாம்புக் குடத்தில் கைவிட்ட குலசேகரப் பெருமாள், 3. சேரமான் பெருமாள், 4. மார்த்தாண்டன் முதலிய சேர அரசர்கள் வழிவந்த **அனந்தபத்மநாபதாசன்** என்ற அரசன் குறிக்கப்படுகிறான். இவன் சேதுபதி காலத்தவன் என்பது தெரிகிறது. சேதுபதியைக் குறிக்குமிடத்து 72 பாளையப்பட்டு அதிபர்களாலும் தொழப்படுபவர், சூரிய குல அதிபதி, சனங்கட்குப் பாம்பன் துறைகடத்திப் பாதை விடுத்தோன், காவிக்குடை, கசசம்புக் குடையுடையோன், தாயிக்கு வேலி, அரவக் கொடி, கெருடக் கொடி விருது பெற்றவன் என்ற வரலாற்றுச் செய்திகள் நூலில் காணப்படுகின்றன. இதனால் நூலின் காலமும் தெரிகிறது. சோழஅரசனாகிய இராஜாதிராஜன் **கொப்பம்** என்னும் இடத்தில் பகையை வென்று ஆயிரம் யானையை வீழ்த்திக் **கொப்பத்துப்பரணி** என்னும் இலக்கியம் பெற்றான். இச்செய்தி இந்நூலில்

**கொப்பத்தில் வீழ்த்திய யானைக்கெங்கே ஒட்டம்** (12-11)

என்னும் தொடரால் குறிக்கப்படுகிறது.

**நூலில் காணப்படும் ஊர்கள்**

நொண்டியாகிய கள்ளன் **திருமாலிருஞ்சோலையில்** உள்ளவன். அங்கிருந்து **மதுரை, திருப்பரங் குன்றம், ஸ்ரீவில்லிபுத்தூர்** வந்து வேசியிடம் அகப்பட்டுத் திருடிப் பின்னர் ஈசுவர யோகி என்பவரிடம் பணி செய்கிறான். அப்போது சேர அரசன் **தனுஷ்கோடியில்** கடலாட வருகிறான். வரும் வழியில் உள்ள ஊர்களாக **தோவாளை திருநெல்வேலி** ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. அரசனைக் காண ஈஸ்வர யோகியுடன் சோரசூரனும் செல்கிறான். சேரன் சோரசூரனைத் தனாதிகாரியாக்கிக் கொள்கிறான். அங்கிருந்து தனுஷ்கோடி போகும்போது வழியில் உள்ள ஊர்களாக **சீவலப்பேரி, ஒட்டப்பிடாரம், வேடனத்தம், வைப்பாறு,** முதலியார் மடம், **சாயற்குடி, கடுகுசந்தை, கொத்தங்குளம், சிக்கல், புல்லாணி, தோணித்துறை, பாம்பன், இராமேஸ்வரம்** ஆகிய ஊர்கள் கூறப்படுகின்றன.

சுருங்கக் கூறுமிடத்து இந்நூல் இலக்கிய நயமும், வரலாற்றுச் செய்தியும், நாட்டுப்புற இயல்புகளும் உள்ளடக்கிய ஒரு சிறந்த நூலாகும்.

**நொண்டி நாடகங்கள் ஒப்பாய்வு**

**கடவுள் வணக்கம்**

**திருச்செந்தூர் நொண்டி நாடகம்**, விநாயகர், முருகன், சிவன், சத்திவிநாயகர், மும்மூர்த்திகள் அவர் மனைவியர், ஐயனார், சமயக்குரவர்கள், வேல், சூரியன், சந்திரன், மயில், சேவல், நவவீரர், வீரபத்திரன், சத்த கன்னியர் ஆகியோர் மீது காப்புச்செய்யுள் பாடுகின்றது. **பழனி நொண்டி நாடகம்** கணபதி, விநாயகர், முருகன், சிவன், மீதும், **திருக்கச்சூர் நொண்டி நாடகம்** கணபதி, கலைவாணி, முத்தி விநாயகர், சிவன், முருகன் மீதும், **குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகம்** கணபதி, விநாயகர், முருகன், சிவன், திருமால், உமை, நான்முகன் மீதும், **தில்லை விடங்கன் ஐயனார் நொண்டி நாடகம்** கணபதி, முருகன், துன்டி கணபதி, சிவன் மீதும், **திருமலை நொண்டி நாடகம்** கணபதி, முருகன், திருமால், சிவன், கிருட்டிணன், வள்ளி தெய்வானை மீதும், **சாத்தூரப்பன் நொண்டி நாடகம்** சாத்தூரப்பன், கணபதி, இந்திரன், துதிக்கையன், விச்சினேசுவரன் மீதும், **திருக்குடந்தை சாரங்கபாணி நொண்டி நாடகம்** கணபதி, திருமால், சிவன், சரஸ்வதி மீதும் கடவுள் வணக்கம் பாடுகின்றன. **திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம்** திருமால் மீது மட்டும் காப்புப் பாடுகிறது.

**செய்தக்காதி நொண்டி நாடகம்** நபிநாயகம் வணக்கம், அபூபக்று வணக்கம், உமறு கத்தாப் வணக்கம், உதுமான் வணக்கம், அலி வணக்கம், ஹஸன் ஹுஸைன் வணக்கம், முஹய்த்தீன் வணக்கம் முதலிய காப்புப் பாடல்களைக் கொண்டுள்ளது. **ஞான நொண்டி** நாடகத்தில் இயேசுவின் மீது மட்டுமே காப்புச் செய்யுள் பாடப்பட்டுள்ளது.

**தோடையம்**

தோடயம் என்பதும் ஒரு வாழ்த்துப்பாட்டே. குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகம், திருக்கச்சூர் நொண்டி நாடகம், ஞான நொண்டி நாடகம், ஆகிய மூன்றிலும் காப்புச்செய்யுளைத் தொடர்ந்து தோடையம் இடம் பெறுகின்றது. திங்களூர் அருள்மலை நொண்டி நாடகத்தில் அவையடக்கத்தைத் தொடர்ந்து தோடையம் இடம்பெறுகின்றது. குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகத்தில் தோடையம் பல தெய்வ வாழ்த்தாகவே அமைந்துள்ளது. கணபதி, குடுமியான் மலை இறைவன் முதலியோர் இதில் இடம் பெறுகின்றனர். திருக்கச்சூர் நொண்டி நாடகத்தில் அஞ்சனவிழியன், குஞ்சரவண்ணன், முருகன் முதலியோர் தோடையத்தில் இடம்பெறும் கடவுளர். ஞான நொண்டி நாடகத்தில் தோடையம் கிறிஸ்துவின் வணக்கமாகவே அமைந்துள்ளது.

**நூற்பயனும் அவையடக்கமும்**

திருச்செந்தூர் நொண்டி நாடகத்தில் நூற்பயனும் அவையடக்கமும் இடம் பெறுகின்றன. பழனி நொண்டி நாடகம், திருக்கச்சூர் நொண்டி நாடகம், ஞான நொண்டி நாடகம், திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம் முதலியவற்றில் அவையடக்கம் மட்டுமே கூறப்பட்டுள்ளது. குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகத்தில் "பெருகும் இக்கதையைக் கேட்போர் பேறு பெற்றோரே" என்று நூற்பயன் இடம்பெற்றுள்ளது. திருப்புல்லானி நொண்டி நாடகத்தில் "படித்தோரும், கேட்டோரும் வாழி" என்று வாழி பாடலில் நூற்பயன் கூறப்படுகிறது.

**சித்தாண்டியின் வருகை**

தெருக்கூத்து, குறவஞ்சி, விலாசம், கீர்த்தனை நாடகங்களில் கட்டியங்காரன் தோன்றிக் கதைத்தலைவன் வருகையைக் கூறுவான். இது மரபாக அமைந்துள்ளது. இது போன்றே நொண்டி நாடகத்தில் கட்டியங்காரன் செயலைச் சித்தாண்டி செய்கிறான். **ஆதிமூலேசர் நொண்டி** நாடகத்தில் மட்டும் களரியில் நொண்டி தோன்றுவதற்கு முன் சித்தாண்டி தோன்றுகிறான். 'வங்கமெனுஞ் சித்தாண்டி வந்து முன் தோன்றினானே' என்று சித்தாண்டி தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு கதைத் தலைவியின் வருகையைக் குறிப்பிடுகிறான். வேறு எந்த நொண்டி நாடகத்திலும் சித்தாண்டி இடம் பெறவில்லை. **குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி** நாடகத்தில், 'கட்டிவரக்குலவு சித்தாண்டியை அழைத்தேனே', என்று சித்தாண்டியின் பெயர்தான் குறிப்பிடப்படுகின்றதே தவிர அவன் அரங்கிடைத்தோன்றவில்லை. **ஆதிமூலேசர் நொண்டி** நாடகத்தில் இடம் பெறுகின்ற சித்தாண்டியின் செயல் கதைத்தலைவனை அறிமுகப்படுத்துவதோடு முடிவடைகிறது. பின்னால் "சித்தாண்டி வந்தான் எனைப் பெத்தாண்டிபோல" என்று அவனைப்பற்றிக் குறிப்பிடப்படுகின்றதே தவிர, அவன் இடம் பெற்றதாகக் குறிப்பு இல்லை. சித்தாண்டி அரங்கிடைக் காப்புச் செய்யுளும் அவையடக்கமும் பாடப்பட்ட பின்னர்தான் தோன்றுவதாக உள்ளது.

**வசனம்**

நொண்டி நாடகங்கள் கவிதையில் அமைந்துள்ளன. **தில்லைவிடங்கன் ஐயனார் நொண்டி நாடகம், திருக்கச்சூர் நொண்டி நாடகம், ஆதிமூலேசர் நொண்டி நாடகம், திருக்குடந்தை சாரங்கபாணி நொண்டி நாடகம்** ஆகிய நாடகங்களில் மட்டுமே இடையில் வசனம் காணப்படுகின்றது. சபையில் உள்ளோர் நொண்டியைப் பார்த்துப் பெயர், குலம், கால், கைகள் வெட்டப்பட்டதன் காரணம் முதலியன கேட்பதாக வசனம் அமைந்துள்ளது. ஆதிமூலேசர் பெருமையெல்லாம் பாடிப்புகழ்கின்ற நொண்டியைப் பார்த்து சபையோர்கள், 'உன் பெயர் என்ன, உன் தாய் தகப்பன், உன் கால்கை போனதன் காரணம் இவற்றை ஒளியாது சொல்லுக என்றனர்' என்று **ஆதிமூலேசர் நொண்டி** நாடகத்தில் வசனம் இடம் பெற்றுள்ளது. மேலும் சித்தாண்டி வருகையைக் கூறுகின்றபோது வசனத்தில்தான் குறிப்பிடுகின்றனர். வசனம் **திருக்கச்சூர்** நொண்டி நாடகத்தில் ஓரிடத்திலும், **தில்லை விடங்கன் ஐயனார் நொண்டி** நாடகத்தில் ஓரிடத்திலும், **திருக்குடந்தை சாரங்கபாணி நொண்டி** நாடகத்தில் ஓரிடத்திலும், **ஆதிமூலேசர் நொண்டி** நாடகத்தில் ஏழு இடங்களிலும் இடம் பெற்றுள்ளது.

**திருடர்கள் பற்றிய குறிப்பு**

குறவர்களின் வாழ்க்கை முறையினை அறிவதற்குக் குறவஞ்சி நூல்களும், பள்ளர்களின் வாழ்க்கை முறையினை அறிவதற்குப் பள்ளு நூல்களும் பயன்படுவதைப் போன்று கள்ளர்களின் (திருடர்களின்) வாழ்க்கை முறையினை அறிய நொண்டி நாடகங்கள் பயன்படுகின்றன. இந் நாடகங்களில் இடம்பெறுகின்ற திருடர்களைக் குலத்தொழிலால் திருடர்களாக இருப்பவர் சூழ்நிலையால் திருடர்களாக ஆனவர் என இருவகையினராகப் பிரிக்கலாம். இவ்விரு வகையினருள் முதல்பிரிவைச் சேர்ந்தவர்களே நொண்டி நாடகங்களில் அதிகமாக இடம்பெறுகின்றனர்.

**சாத்தூரப்பன் நொண்டி நாடகத்தில்** வருகின்ற நொண்டியும், **பழனி நொண்டி நாடகத்தில்** வருகின்ற வாதிசிங்கனும் குலத்தொழிலால் திருடர்கள் அல்லர். **சாத்தூரப்பன் நொண்டி,** யாத்திரை சென்ற இடத்தில் திருடர்களுடன் சேர்ந்து, அவர்தம் தொழிலைக் கற்றுக்கொண்டு திருடனாகிறான். **வாதிசிங்கன்** படைத்தலைவனாக இருந்து பொருள்களை எல்லாம் வேசிக்குக் கொடுத்துத் திருடனானான். இவைதவிர, ஏனைய நாடகங்களில் திருடர்கள் குலத்தொழிலால் திருடர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

**திருச்செந்தூர் நொண்டி நாடகம்**

இது காப்புப் பாடல் உள்ளிட்ட முந்நூற்று முப்பத்திமூன்று பாடல்களைக் கொண்டது. ஐந்து விருத்தப்பாக்களும் ஒரு வெண்பாவும், முந்நூற்று இருபத்தேழு சிந்துப்பாக்களும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. இந்நூல் பாடல்களில் இராகம், தாளம் பற்றிய குறிப்புக்கள் காணப்படவில்லை.

இந்நூல் முருகன் ஏனைய கடவுளர்களாலும் வணங்குதற்குரிய தன்மை பெற்றவன் என்பதை எடுத்துக்காட்டி முருகனின் புகழைப் பாடுகின்றது. "நொண்டி, முருகப்பிரானின் திருவடியை வணங்காத சமணர்கள் தலையைத் தன் காலில் கட்டிய பனைமரத்துடன் சேர்த்துக் கட்டித் தான் ஆடப்போவதாகக் கூறுகிறான்."

**பழனி நொண்டி நாடகம்**

தனது திருட்டுத் தொழிலின் பொருட்டுத் திருடன் எல்லாக் கடவுளர்களையும் வணங்கும் போக்கு இதில் காணப்படுகின்றது.

திருடன் யார் யார் வீட்டில் திருட வேண்டும், யார் யார் வீட்டில் திருடக்கூடாது என்பது இறைவனாலேயே குறிப்பிட்டுக் காட்டப்படுகின்றது. 'தஞ்சமென்று வந்தவர்களுக்கு அன்னமிட்டுதவாதவர்கள் வீட்டிலும், இறைவனை அன்பால் நினையாதவர் வீட்டிலும், நல்லோரையும் பெரியோரையும் மனம் நடுங்கும்வண்ணம் செயல் செய்கின்றவர் இல்லத்திலும் திருடுக' என்றும், 'அறநெறி வாழ்வாளர்கள், தண்ணீர்ப்பந்தல் வைத்தோர், சிவபூசைகள் செய்தோர், சாலையில் மரம் நடுவோர், இல்லை என்று வருவோருக்குக் கொடுத்துதவுவோர், இளைத்தோர், பசித்து வந்தோர் முதலியவர்களுக்குத் தீங்கு செய்தல் கூடாது' என்றும் இறைவன் வரம் கொடுக்கிறார். மக்களிடையே அறநெறியைப் பரப்புதற்கெனவே இந்நாடகம் எழுந்தது என்று கொள்ளலாம்.

திருடுகின்ற சமயத்தில் திருடன் அகப்பட்டுக் கொள்ளுதல் மற்ற நொண்டி நாடகங்களில் காணப்பட, இந்நாடகத்தில் மட்டும் திருடிய பொருள் பயன்பாட்டிற்கு வருகின்றபோது, அது திருடிய பொருள் எனக் கண்டுபிடிக்கப்பட்டு, அரசனால் தண்டனைக்குள்ளாகிறான். மற்ற நொண்டி நாடகங்களில் வேசிக்குத் தண்டனை கொடுக்க அழைத்து வந்ததாகக் குறிப்பு இல்லை. இதில் திருடனுடன் வேசி கொண்டுவரப்படுகிறாள். ஆனால் அவளைத் தண்டித்ததற்கான குறிப்புக்கள் இல்லை. இறுதியில் திருடன், தான் திருடியது குற்றமில்லை என்பதை நிறுவ, மாயன் திருடியது, இறைவன் பிள்ளைக்கறி உண்டது, வள்ளியை முருகன் களவில் கொண்டு வந்தது போன்ற புராணக் கதைகளை எடுத்துக் காட்டுகிறான்.

**திருக்கச்சூர் நொண்டி நாடகம்**

இந்நாடகத்தின் ஆசிரியர் மதுரகவிராயர். இதில் பதின்மூன்று விருத்தப்பாக்களும், ஒரு வெண்பாவும், மூன்று கலித்துறைப் பாடல்களும், இரண்டு கொச்சகக் கலிப்பாவும், ஒரு அவையடக்கம், ஒரு தோடையம், ஒரு வசனம், ஒரு மங்களம் முதலியனவும் இடம் பெற்றுள்ளன. வறாளி, புன்னாக வறாளி, முகாரி, சங்கராபரணம், ஸ்ரீ இராகம் முதலியன இடம் பெற்றுள்ளன. விருத்தப்பாக்கள் கதைப் போக்கைச் சுட்டிச் செல்கின்றன.

தன்னை மயக்குவதற்காக நாற்பதுக்கு மேற்பட்ட மருந்துப் பொருட்களைச் சேர்த்து மருந்திட்டாள் வேசியின் தாய் என்று திருடன் கூறுவதைக் காணலாம். வேசியரைப்

பற்றிய குறிப்புக்கள் இதில் அதிகமாக இடம் பெறுகின்றன. இந்நாடகத்தில் தெலுங்குச் சொற்கள் பல பயின்று வருகின்றன.

**குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகம்**

மூன்று காப்பு விருத்தங்களும், எட்டு விருத்தப்பாக்களும், ஒரு தோடையமும், ஒரு ஏசல் பாடலும், மற்ற அனைத்துப் பகுதிகளிலும் சிந்துப்பாக்களும் அமைந்துள்ளன. ஆனந்தக்களிப்பு என்றொரு பாடல் இசைப்பெயருடன் காணப்படுகிறது. மற்ற நொண்டி நாடகங்களில் மாறுகால் மாறுகை வாங்க, இதில் நொண்டிக்கு ஒற்றைக்கால் மட்டும் வெட்டப்படுகின்றது. சாத்தூரப்பன் நொண்டியில் இதேபோன்று ஒற்றைக்கால் வாங்குவதும், இறுதியில் ஏசல் பகுதியும் அமைந்திருக்கின்றன.

மேலும் இதில்மட்டும்தான் பிற நொண்டிகளை உறவுமுறைப்படுத்திக் கூறுகின்ற போக்குக் காணப்படுகிறது. திருச்செந்தூர் நொண்டி, சாத்தூர் நொண்டி, மாத்தூர் நொண்டி போன்றோர் இதில் இடம் பெறுகின்றனர். நொண்டியை மயக்குவதற்காகத் தாய்க்கிழவி நூற்றுக்கு மேற்பட்ட மருந்துப் பொருட்களைச் சேர்த்து நொண்டிக்குச் சோற்றிலும் வெஞ்சனத்திலும் கொடுத்தாள் என்ற குறிப்பும் இதில் காணப்படுகின்றது.

**தில்லை விடங்கன் அய்யனார் நொண்டி நாடகம்**

இந்நாடகத்தை இயற்றியவர் மாரிமுத்துப்பிள்ளை. இதில் ஒன்பது விருத்தப்பாக்களும், ஒரு வசனமும் உள்ளன. 'தரு'க்களில் ராகம், தாளம் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. களரியில் தோன்றி நின்ற நொண்டியிடம், ஊர், பேர், முதலியன அவையோர்கள் கேட்பதாக அமைந்துள்ளது. விருத்தப்பாக்கள் கதை நிகழ்ச்சியை விவரிப்பதாக அமைந்துள்ளன. தோடி, புன்னாகவராளி, சங்கராபரணம், கல்யாணி, தேசிக தோடி, பியாகு, நாட்டை, நாத நமக்கிரியை முதலிய இராகங்களும், ஆதி, ரூபகம் முதலிய தாளங்களும், ஆனந்தக்களிப்பு, முதலிய இசைக்குறிப்புக்களும் காணப்படுகின்றன.

இந்நாடகத்தில் யானை திருடச் சென்று அகப்பட்டுக்கொண்டதாக உள்ளது. யானை திருடுவதற்குக் காரணம் கூறுகின்றபோது வேசிமார்க்குக் கொடுப்பதற்கு வாசியைத் திருடினால் ஒரு நாள் செலவோடு போய்விடும்; அதனால் பட்டத்து யானையைத் திருட வேண்டும் என்று கூறுவது, யானை திருடியதன் நோக்கத்தைப் புலப்படுத்துவதாக உள்ளது. பல தெலுங்குச் சொற்கள் இதில் இடம்பெற்றுள்ளன.

**திருமலை நொண்டி நாடகம்**

நாடகத்தலைவன் தேவன் என்பான். இவன் கள்ளர் மரபில் தோன்றியவன். கண்டி என்னும் வெளிநாடுவரையில் சென்று திருடியவன். வேசியின் ஆசையை நிறைவேற்றக் கண்டி என்னும் வெளிநாட்டிற்குத் திருடச்சென்று திரும்பும் வழியில் மாணிக்கவல்லி என்னும் பெண்ணிடம் பொருள்களைக் கொடுக்கிறான். அவளோடு இருக்கின்ற காலத்தில் ஆசையின்

மிகுதியால் குதிரை திருடச் செல்கிறான். குதிரை திருடச் செல்வதை மாணிக்கவல்லி தடுக்கிறாள். இதுபோன்று ஆசை மிகுதியால் குதிரை திருடச் செல்வதும், திருடச் செல்வது வேண்டாம் என்று வேசி தடுப்பதும் வேறு எந்த நொண்டி நாடகங்களிலும் காணப்படவில்லை. மற்ற நொண்டி நாடகங்களில் திருடுவதற்கு வேசியரே காரணமாக இருக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**சாத்தூரப்பன் நொண்டி நாடகம்**

இதில் பதின்மூன்று விருத்தப்பாக்களும், ஒரு ஏசல் சிந்தும் உள்ளன. மற்ற அனைத்துப் பாடல்களும் சிந்துவால் ஆனவை. இதில் இராகம், தாளம் பற்றிய குறிப்புக்கள் இல்லை.

இந்நொண்டி நாடகமும், குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகமும் தண்டனை கொடுப்பதில் ஒன்றாகவே அமைந்துள்ளன. மற்ற நாடகங்களில் கால், கை, வாங்க, இவற்றில் ஒற்றைக்கால் மட்டும் வாங்குவதாக உள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**ஆதிமூலேசர் நொண்டி நாடகம்**

தலைவனான சோரக் கோளரி என்ற திருடன் தான் திருடிய பொருள்களை வேசியிடம் கொடுத்துவிட்டு மீண்டும் அவள்மேல் கொண்ட மோகத்தால் குதிரை திருடி, குதிரையை விற்று அவளுக்கே செலவழிக்கின்றான். பொருள் குறைந்தபின் மீண்டும் குதிரை திருடச் செல்கிறான். அந்நேரம் காவலர்கள் விழித்துக்கொள்ள, தப்பித்தல் வேண்டிப் புல்லுக்கட்டுக்குள் மறைந்திருக்கின்றபோது குதிரை கட்டும் முளையைக் காவலர்கள் இவனது கையில் அடித்து விடுகின்றனர். தன்னுடைய வாளால் கையை வெட்டிவிட்டு, அவ்விடத்திலிருந்து தப்பித்து அகழியைக்கடக்க முயல்கிறான். முதலை அவனுடைய காலைக் கவ்வ அதனின்று விடுபட தன்னுடைய காலைத் தானே வெட்டிக் கொள்கிறான். மற்ற நொண்டி நாடகங்களில் அரசனால் தண்டனை வழங்கப்பட்டு கைகால்கள் வெட்டுப்பட இதில் மட்டும் தன்னுடைய கையையும், காலையும் தானே வெட்டிக்கொள்வதைக் காணலாம். தன்னுடைய காலும், கையும் வெட்டுப்பட்டதன் பின்னும் திருடன் வேசியைச் சந்திக்க வருகிறான். வேசி மறுத்துவிடுகிறாள். இதுபோன்று வேறு எந்த நொண்டி நாடகங்களிலும் காணப்படவில்லை. முடிவு நிகழ்ச்சியிலும் இந்நாடகம் மற்றவற்றினின்று மாறுபடுகிறது. மற்ற நொண்டி நாடகங்களில் இறைவன் அருளை இறைவன் எழுந்தருளியுள்ள தலத்தினில் சென்று பெறுவதைக் காணலாம். ஆனால் இந்நாடகத்தில் அரங்கத்திலேயே நொண்டிக்குக் கைகால்கள் தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளது.

**செய்தக்காதி நொண்டி நாடகம்**

இது நான்கு விருத்தப்பாக்களையும், கடவுள் வணக்கத்தோடு இருநூற்று முப்பத்திரண்டு பாடல்களையும் கொண்டது. தருவில் இராகம், தாளம் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவை பூபாளம், மோகனம், நாத நாமக்கிரியை ஆகிய இராகங்களிலும், ஆதி தாளத்திலும், அமைந்துள்ளன.

இந்நாடகம் மட்டும் தன்னைக் காத்த வள்ளலின் பெயரால் அமைந்திருக்கிறது. நொண்டி நாடகங்களில் வேசியிடம் பொருள்களை எல்லாம் கொடுத்துத் திருடச் செல்வதைக் காண்கிறோம். இதில் நொண்டி திருச்செந்தூர் நொண்டியைப் போல் வேசியின் ஆசையை நிறைவேற்றுவதற்காகக் குதிரை திருடச் செல்கிறான். "பொன்னே மடமயிலே இதோபோரேன் சிறைகொடு வாரேன்" என்று கூறிச் சென்று, குதிரை திருடுகிறபோது அகப்பட்டுக் கொண்டு அரசனால் கையும் காலும் வெட்டப்படுகிறான். சீதக்காதியின் உதவியால் மெக்காவிற்குச் சென்று இழந்த கை, கால்களை மீண்டும் பெறுகிறான்.

இந்நாடகத்தில் அராபி, பாரசீகம், இந்தி முதலிய பிறமொழிச் சொற்கள் காணப்படுகின்றன. எழுபத்தேழு பாரசீக, இந்திச் சொற்களும், ஐம்பத்து நான்கு அராபிப் பெயர்களும் காணப்படுகின்றன.

**ஞான நொண்டி நாடகம்**

இதில் மூன்று காப்புப் பாடல்கள், ஆறு கடவுள் வாழ்த்துப் பாடல்கள் ஒரு கலிப்பா, முப்பது விருத்தப்பாக்கள் உள்ளிட்ட முந்நூற்றிமுப்பது பாக்கள் உள்ளன. மற்ற நொண்டி நாடகங்களில் காணப்படாத **கொண்டாட்டு** என்னும் பகுதி இதில் இடம் பெற்றுள்ளது.

மற்ற நொண்டி நாடகங்களில் கதைத்தலைவன் திருடுதல் காரணமாகத் தண்டிக்கப்படுகிறான். ஆனால் இந்நாடகத்தில் உண்ணக்கூடாது என்று ஒதுக்கிய கனியை உண்டதால் இறைவனால் தண்டிக்கப்படுகிறான். இதன் அமைப்பு முறையும் கதைப்போக்கும் மற்ற நொண்டி நாடக அமைப்பிலும் கதைப்போக்கிலும் இருந்து முற்றிலும் மாறுபட்டு இருக்கிறது. மற்ற நொண்டி நாடகங்கள் சமயத்தைப் பாட வந்தாலும் சமயத்தலைவர்களைக் கதைமாந்தர்களாகப் படைக்கவில்லை. ஆனால் இந்நாடகத்தில் ஆதாம், ஏவாள் கதைமாந்தராகப் படைக்கப்பட்டு அவர்களின் கதையைக் கூறுவதாக அமைந்துள்ளது.

ஆதாம், ஏவாள் இருவரும் சாத்தானின் சூழ்ச்சியால் உண்ணக்கூடாது என்று ஒதுக்கப்பட்ட கனியை உண்டதால் அவர்களுக்குள் இனவேறுபாடு தோன்றுகிறது. இதையறிந்து இறைவன் அவர்களைத் தண்டிக்கிறான். "மோட்சம் உங்களுக்குக் கிடையாது. உலகத்தில் சந்ததிகளைப் பெருக்கி இன்ப துன்பங்களை அனுபவியுங்கள்"

என்று இறைவன் கூறுவதாக மூலக்கதை அமைகிறது. மூலக்கதையினின்று ஞான நொண்டி நாடகத்தின் முடிவுப்பகுதி வேறுபட்டு அமைந்துள்ளது. கனியை உண்டதற்காகக் கால், கை, துண்டிக்கப்பட்டதாக ஞான நொண்டி நாடகம் கூறுகிறது, நொண்டி நாடகங்களில் கால், கை வாங்குதல் வழக்காக உள்ளமையின் அவ்வழக்கைப் பின் பற்றி,

துன்றி ஞானக்கை காலை யிருள்
துட்டப் பயல் வந்து வெட்டினேனே

என்று கூறுவதைக் காணலாம். நொண்டி நாடகங்களில் அரசனால் தண்டனை கொடுக்கப்பட்டு இறைவனால் மன்னிக்கப்படுவதாக உள்ளது. ஆனால் இதில் இறைவனாலேயே தண்டனை வழங்கப்படுகின்றது. குற்றம் செய்வதற்குக் காரணமாக இருந்த ஏவாளும் தண்டிக்கப்படுவதைக் காணலாம். நொண்டி நாடகங்கள் மக்களிடம் நிலவிவந்த காலத்தில் மதத்தைப் பரப்பவேண்டுமென்ற காரணத்தால் மூலக்கதையினை மாற்றியமைத்து ஞான நொண்டி நாடகம் எழுதப்பட்டது எனலாம். நொண்டி நாடக அமைப்பு முறையிலிருந்து இதுமாறுபட்டதாக உள்ளது.

**திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம்**

இந்நாடகத்தில் அவையடக்கப் பாடலுக்கடுத்துத் தோடயம் இடம்பெறுகின்றது. இப்பாடலில் ஒரு தெய்வ வாழ்த்தாக ஆவினன்குடி முருகனையும், அருள்மலை முருகனையுமன் வாழ்த்திப் பாடுவதாக அமைகின்றது. இதற்கடுத்து முருகனின் பெருமைகளாக, அவர் அசுரர்களை அழித்த செயலும், அவரது தசாங்கச் சிறப்பும், திங்களூர் அருள்மலையின் சிறப்பும் மூன்று பெரிய பாடல்களில் கூறப்படுகின்றன. இவ்வாறு நூலின் பாட்டுடைத் தலைவரையும் தலத்தையும் சிறப்பித்து நொண்டியின் வருகைக்கு முன்பாகவே பாடும் இவ்வமைப்பு இந்நொண்டி நாடகத்தில் மட்டுமே காணப்படுகிறது.

நொண்டி தான் திருடிய பொருள்களை வேசியிடம் இழப்பதை அனைத்து நொண்டி நாடகங்களிலும் காணமுடிகிறது. திங்களூர் அருள்மலை நொண்டி நாடகத்தில் வருகின்ற நொண்டி, திருடிய பொருள்களைப் பொன்னுக்கு விற்று, அப்பொன்னை வேசியிடம் தந்து இழக்கிறான். இவ்வாறு தான் திருடிய பொருளை விலைக்கு விற்று அப்பொன்னை வேசியிடம் இழப்பதை வேறு எந்த நொண்டி நாடகத்திலும் காணமுடியவில்லை.

நொண்டியிடமிருந்து பொருள்களைப் பறிக்கத் தாசியும், அவளது தாயும் நூற்றுக்கும் மேற்பட்ட மருந்துப்பொருட்களைச் சேர்த்து மருந்துசெய்து அவனுக்குச் சோற்றிலும், வெற்றிலையிலும், வெஞ்சனத்திலும் கொடுக்கும் முறை எல்லா நொண்டி நாடகங்களிலும் காணப்படுகிறது. இம் மருந்திடும் முறையை ஒருசில நொண்டி நாடகங்கள் விரித்தும், ஒருசில நொண்டி நாடகங்கள் சுருக்கியும் கூறும். **திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம்** இதனை விரித்துச் சொல்கின்றது.

# திருப்புல்லாணி நொண்டி நாடகம்
## வாழ்த்து
### திருமங்கையாழ்வார்
### விருத்தம்

1. பருதிமதி யெனத்தகைய திருவாழி சங்கணிந்த
பதுமக் கையர்
சுருதிவடி வினர்திருப்புல் [1]லாணியிற்தெய் வச்சிலையார்
[2] துளவத் தான்மேல்
விருதிலகு நொண்டிநாட கந்தன்னை யான்பாட
மேக வண்ணன்
கருதியெதிர் வந்துதனைத் தொண்டுகொளப் பெறுங்கலியன்
காப்புத் தானே.

குறிப்புரை

**பருதி** – சூரியன். **மதி** – சந்திரன். **திருவாழி** – சக்கரம். **பதுமக்கையர்** – தாமரைமலர் போன்ற கைகளையுடையவர், திருப்புல்லாணியிற் கோயில் கொண்டுள்ள திருமால். **சுருதி** – வேதம். **திருப்புல்லாணி** – இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள திருமால் தலம். திருப்புல்லணை (தர்ப்பசயனம்) என்பது திருப்புல்லாணி என மருவியது. இராமன் புல்லையே தலையணையாக வைத்துப் படுத்திருந்த இடம். **தெய்வச்சிலையார்** – திருப்புல்லாணியில் கோயில் கொண்டுள்ள திருமால். **துளவம்** – துளசி. **விருதிலகு** – வெற்றி பொருந்திய. **நொண்டி நாடகம்** – சிந்துச்செய்யுளாலான சிற்றிலக்கிய வகை. **மேகவண்ணன்** – மேகம் போன்ற கருநிறமான திருமால். **தொண்டுகொள** – அடிமை கொள்ள. **கலியன்** – திருமங்கையாழ்வார். **காப்பு** – துணை.

பா.வே : 1. லைத்தெய்
சு.செர : 2. துழவத் தாண்மேல்

# Tiruppullāṇi Noṇṭi Nāṭakam
## Invocation
### Tirumaṅkai Āḻvār

May **Kalian̲**[1] whose devoted service the cloudhued **Tirumāl**[2]
Did decide to accept in His grace divine,
Protect and guide my effort humble
To compose in verse a **noṇṭināṭakam**[3] glorious
On the ***Tuḷavam***[4] loving Lord of **Tiruppullāṇi**[5]

Abiding there as an idol sanctified
Of **Tirumāl** whose hands lotus like
Sport a wheel and a conch
Lustrous like the sun and the moon
And who is shaped like the scriptures as well.

1. **Kaliyan** – **Tirumaṅkai Aḻvār**
2. **Tirumāl** – The god of protection in Hinduism
3. **noṇṭināṭakam** – a play in verse of ***Cintu*** category
4. ***Tuḷavam*** – ***Tuḷaci*** or basil an aromatic plant used in worship of **Viṣṇu**.
5. **Tiruppullāṇi** – a Vaishnavite shrine in **Irāmanātapuram** District.

**( நம்மாழ்வார் துதி )**

**தரு**

2. மாவினாள்புவி மாதுகோகுல
மாதர்சேர்செக நாதர்மீதினில்
வாகுகொண்டியல் பாகுநொண்டியையே – கொண்டாடவே
நாவினாள்துதி யாதிநாதரை
நாடியேதொழு காரிமாறனெந்
நாளுமெந்தனை யாளவந்தருளே – தந்தாள்விரே. 1

**(சேனைமுதலியார் துதி)**

கோலிலேதளி ராலிலேகடற்
பாலிலேபணி மேலிலேதுயில்
கோனையாதியு மானதேவனையே – கொண்டாடவே
தாலநாயகர் பாலிலேபிர
தானியாகிய சேனைக்காவலர்
தாளென்னாவிலென் னாளுமேயினவே – தந்தான தனதனனனா. 2

**(கருடன் துதி)**

மையிற்றிகழ்தரு மெய்யச்சுதரினி
துய்யக்கருணைசெய் தைவர்க்குதவினர்
வையத்தவர்துதி தெய்வச்சிலைமுகிலையே – கொண்டாடவே
பையுற்றிடுபணி தொய்யத்தமர்துதி
செய்யச்சுரருல கெய்திச்சுதையது
பையக்கொடுவரு செல்வக்ககபதிதா – ளென் தியானமே. 3

### ( ஆதிசேடன் துதி )

மண்ணையோரடி யாலளந்தவர்
அன்னமாய்முது [1]நூல்பயின்றவர்
வண்மைபேசுமு லாசநொண்டியையே – கொண்டாடவே
வண்ணமார்கதிர் கோடிகொண்டொளிர்
மின்னுமாமணி யாயிரம்பட
மன்னுசேடனை யானிறைஞ்சுவனே – கொண்டாடவே
– தனதானனா. 4

### ( போதி நிழல் துதி )

ஆடகந்திகழ் மேடைமண்டபம்
[2]ஓடைதண்டலை சூழுமெங்கள் புல்
லாணியெம்பெரு மானையன்புடனே – கொண்டாடவே
நீடுசேர்திரு மாலெனும்படி
நீர்மை கொண்டுயர் போதியந்தரு
நீழலுந்துணை யாகிவந்திடுமே – தனதானனா. 5

**மாவினாள்** – இலக்குமி. **புவிமாது** – பூமிதேவி. **கோகுல மாதர்** – ஆயர்பாடி பெண் யசோதை. **செகநாதர்** – உலகிற்கு இறைவனாகிய திருமால். **வாகு** – வெற்றி. **நொண்டி** – நொண்டி நாடகம். **நாவினாள்** – கலைமகள். **ஆதிநாதர்** – ஆழ்வார் திருநகரியிற் கோயிற் கொண்டெழுந்தருளியுள்ள இறைவன் பொலிந்து நின்ற பிரான். **காரிமாறன்** – காரியார் குமாரராகிய நம்மாழ்வார்.

**கோல்** – மரக்கொம்பு, ஆயன் கைக்கோல். **தளிர்ஆல்** – ஆலிலை, ஆலமரத்தின் இலை. **கடற்பால்** – பாற்கடல். **பணி** – பாம்பு, ஆதிசேடன். **துயில்கோனை** – உறங்குகின்ற இறைவனை. **ஆதியுமான தேவன்** – ஆதிசெகநாதப் பெருமாள். **தால நாயகர்** – பூமிக்குத் தலைவர், திருமால். **பாலிலே** – பக்கத்திலே. **பிரதானி சேனைக்காவலர்** – சேனைமுதலியார். **தாள்** – பாதம். **மேயின** – பொருந்தின.

**மை** – கருநிறம். **அச்சுதர்** – திருமால். **மையில்..... அச்சுதர்** – கரிய நிறமான உடலையுடைய திருமால். **துய்ய** – தூய்மையுள்ள. **ஐவர்** – பஞ்சபாண்டவர். **பை** – நச்சுப் பை. **பணி** – பாம்பு, இங்கு ஆதிசேடன். **தொய்ய** – நெகிழ, விலகிட. **தமர்** – சுற்றத்தார். **சுரர்** – தேவர். **சுதை** – அமுது. **பைய** – மெல்ல. **கொடுவரு** – கொண்டுவந்த. **ககபதி** – பறவைகளின் அரசனான கருடன். **மண்ணையோரடியாலளந்தவர்** – மாவலிச் சக்கரவர்த்தியின் ஆணவத்தை அடக்க, ஆகாயத்தை ஓரடியாலும் பூமியை ஓரடியாலும் அளந்தவராகிய திருமால்.

**வண்ணமார்கதிர் கோடி கொண்டொளிர்** – பலநிறம் பொருந்திய கோடி சூரியர்களின் ஒளியைக்கொண்டு விளங்குகின்ற. **மின்னுமாமணி** – ஒளிவிடும் மாணிக்கம். **மன்னுசேடன்** – உறுதியாய்ப் பொருந்தும் ஆதிசேடன். **இறைஞ்சுவன்** – வணங்குவேன்.

**ஆடகம்** – பொன். **ஓடை** – நீரோடை. **தண்டலை** – சோலை. **புல்லாணியெம்பெருமான்** – திருப்புல்லாணியிற் கோயில்கொண்டுள்ள திருமால், தெய்வச்சிலைப் பெருமாள். **நீடு** – நெடுங்காலம். **நீர்மை** – தன்மை. **போதியந்தரு** – அழகிய போதிவிருட்சம், அரசமரமாகிய தலவிருட்சம். **நீழல்** – நிழல்.

**பா.வே :** 1. நூல் பயந்தவர் 2. வாடைத்தென்றலை

## Nammāl̲vār

May **Kārimār̲an̲**[1] who doth worship in right earnest
**Ātinātar** whom **Kalaimakaḷ**[2] too doth praise and pray
Adopt me in his guidance for ever
To hail in a ***noṇṭināṭakam*** successful
The glory of **Cekanātar**[3] who doth associate himself
With **Srītēvi**[4] and **Pūtēvi**[5]
And with the devoted damsels of **Kōkulam**[6] as well.

## Cēn̲ai Mutaliyār

To hail and celebrate the Prime Lord
Who doth rest in slumber divine
In the wooden stick of ***Āyar***[7]
On the banyan leaf tender,
In the ocean of milk as well
And on a snakebed even
The feet of the **Cēn̲ai Nāyakar**
Found before the Lord of this earth (**Tirumāl**)
Did settle but aptly in my tongue
For worship prayerful.

## Karuṭan̲

To hail and eulogize **Teivaccilaiyār**[8] the cloud of mercy,
Who is verily the darkbodied **Accutar**[9]
Who did help in His grace divine
The virtuous **Pāṇṭavars**[10] five in distress theirs,
And who is worshipped by the entire folk earthly,
I do meditate on the feet of **Kakapati (Karuṭan̲)**

Who did gently bring *cutai*[11] from the world of **Curar**[12]
As entreated by the heavenly beings
In such prayer earnest as to make
Even the Lord of snake bed uncoil and become loose.

### **Āticēṭan̲**

To hail the Lord who did measure
The earth entire in just one step
And who did learn the scriptures ancient as a swan,
And to project the ***noṇṭinā ṭakam***
Which doth proclaim gaily the glory of the Lord such
I do worship in prayer pious
**Āticēṭan̲**[13] lustrous like a billion suns colourful
Endowed with hoods as if gemstudded.

### ***Pōti Nil̲al***

To hail our Lord of **Tiruppullāṇi**
Surrounded by groves and halls of sterling gold
Even the shade of the **Pōti**[14] tree there
Enriched with the greatness of **Tirumāl**
Will come to my help for sure.

1. **Kārimāran̲** - **Nammāl̲vār** one of the twelve Vaishnavite **Āl̲vārs.**
2. **Kalaimakaḷ** - The goddess of learning in Hinduism.
3. **Cekanātar** – The Lord of the earth (**Tirumāl).**
4. **Srītēvi** - Goddess **Ilakkumi** of wealth,
5. **Pūtēvi** – **the earth is worshipped as femele god .**
6. **Kōkulam** – The **Yātavā** colony where Lord **Kriṣṇā** or **Kaṇṇan̲** was brought up.
7. **Āyar** – Shepherds of Cowherds of **Yātavā** community.
8. **Teyvaccilaiyār** – The name of the deity of **Tiruppullāṇi.**
9. **Accutar** – another name of **Tirumāl.**
10. **Pāṇṭavars** – Five brothers of **Mahāpāratam** epic.
11. *Cutai* – Ambrosia which will provide immortality.
12. **Curar** – **Tēvar** or heavenly beings.
13. **Āticētan̲** - A legendary thousand hooded snake as a bed of **Tirumāl.**
14. **Pōti** – A tree called ***aracu*** in Tamil.

(நொண்டி சபைக்கு வருதல்)
விருத்தம்

3. பலங்கொண்ட தண்டலைகள் மருவுதிருப் புல்லாணிப்
[1]பத்ம நாபர்
[2]நலங்கொண்ட பதகமலர் செகநாதர் சந்நிதியை
நேசங் கொண்டு
வலங்கொண்டு நடங்கொண்டு தொழுதுகொண்டு திருமாலை
வாழ்த்திக் கொண்டு
துலங்குமரக் கால்கொண்டு நொண்டிநொண்டிக் கொண்டு நொண்டி
தோன்றி னானே.

**பலங்கொண்ட** – கனிகள் நிறைந்த. **பலம்** – கனி. **தண்டலை** – சோலை. **மருவு** – பொருந்திய. **பத்மநாபர்** – உந்தித் தாமரையோனாகிய திருமால். **பதகமலர்** – தாமரை மலர் போன்ற பாதம் உடையவர். **சந்நிதி** – இறைவன் முன். **துலங்கு** – சிறந்து. **மரக்கால்** – மரத்தால்செய்த கால். **நொண்டி** – முடமான ஆள்.

**பா.வே** :1. பதும நாபர் 2. நிலங்கொண்ட.

## *Noṇṭi* arrives at the Court

At **Tiruppullāṇi** with its fruitladen orchards all
To the ***Canniti***[1] of **Cekanātar** lotusfooted
Endowed with all the traits beneficial of **Patmanāpar**[2]
A ***noṇṭi***[3] fitted with a fine wooden leg conspicuous
Did arrive with devotion deep
Praying to Lord **Tirumāl** in worship pious
And going round the ***Canniti*** adancing
Thus did the lame man appear there.

1. ***Canniti*** - the place in front of the deity in the temple.
2. **Patmanāpar** – another name of **Tirumāl.**
3. ***noṇṭi*** – a lame person.

## (நொண்டி தன் வல்லமை கூறுதல்)
## தரு

4. மாமாது மலரடி போற்றிக் – கனி
வாயனைத் தெய்வச்சிலை மாயனை வாழ்த்திக்
காமாதி குணங்களை மாற்றி – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 1

தத்தரிகிட தகசெமதா ததிதடியொன்றிலே – நின்று
தகதன ததிகிட ததிங்கணத் தோமென்று
கைத்தலதி தாளங்கள் கொண்டு – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 2

விரித்திடும் வல்லவட்டுப் பிலுக்கக் – காலில்
வீரவெண் டயங்கள்க லீரென வொலிக்கக்
கருத்தினில் நினைத்தவரம் பலிப்ப – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 3

பல்லைக்கடித் திளைஞரை யுறுக்கி – மெய்யிற்
பவிசுடன் பொற்சரிகைக் கவசமும் இறுக்கிக்
கல்லைக்கெம்பு மீசையை முறுக்கி – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 4

வீசுமொரு காலிசற்றே பங்கமே – அன்றி
விக்கிரமந் தன்னில்நான் உக்கிரநர சிங்கம்
காசறு சபைக்குக்கட்டித் தங்கம் – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 5

துருவற்ற வுருக்குப்போல் மெய்யன் – மண்ணில்
சொர்ணமெல்லாம் தெரியஅஞ் சனமிடுங் கையன்
கருமாய மிட்டடைத்த பையன் – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்வைகட்டி னேனே. 6

புறப்பட்ட இடத்தில்வாயு வேகன் – கடும்
பொட்டலில் முக்குளிக்கும் துட்டநீர்க் காகம்

கறுப்பிட்ட கொடுங்காள மேகம் – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 7

விலையிட்டுப் புலியைக்கண் படுப்பேன் – உடல்
வேறுவே றாகவொரு நூறுரு வெடுப்பேன்
கலைமதி யையும்பாய்ந் தடுப்பேன் – நொண்டி
கால்தூக்கி யாடிக்கொள்ளக் கச்சைகட்டி னேனே. 8

திகழுமெட் டெழுத்துருச் 'செபிப்பேன் – தெய்வச்
சிலையாரைத் துதியாரைச் சிலையாகச் சபிப்பேன்
செகநாதர் தாளில்மனங் கவிப்பேன் – மால்
திருப்பதிதோ றுஞ்சென்று விருப்போடு 'சீவிப்பேன். 9

செங்கண்மா லன்பரை ஸ்மரிப்பேன் – அணி
திருநாமம் வளையாழி தரியாரை யரிப்பேன்
அங்கத மலையை நமஸ்கரிப்பேன் – மண்ணில்
அண்டலர் களைவென்று கொண்டுசஞ் சரிப்பேன்.
– தத்தரிகிடதக செமதா – 10

**மாமாது** – இலக்குமி பதுமாசனி. **கனிவாயன்** – கனி போன்ற வாயினன், திருமால். **காமாதி குணம்** – காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் ஆகிய அறுவகைக் குற்றங்கள். **கச்சை** – அரைக்கச்சு, அரைப்பட்டிகை. "ததிதரிகிட .......... ததிங் கிணதிதோமென்று" என்பது தாள ஒலியின் அநுராகம். **கைத்தலத் தாளம்** – உள்ளங்கையால் போடும் தாளம், **வல்லவட்டு** – கழுத்தைச் சுற்றித் தொங்கவிடும் ஆடை. **பிலுக்க** – பகட்ட. **வீரவெண்டயம்** – வீரக்கழல் – வீரர்கள் காலில் அணியும் அணி. **கருத்தினில்** – மனத்தினில், எண்ணத்தில். **பலிக்க** – நிறைவேற. **இளைஞர்** – இளையோர். **உறுக்கி** – அதட்டி. **பவுசு** – பெருமை, மதிப்பு. **பொற்சரிகை** – பொன்னால் ஆன இழை. **கவசம்** – உடற்பாதுகாப்பு உறை. **இறுக்கி** – இறுக உடுத்தி. **கல்லைக் கெம்பு மீசை** – கல்லையே நெம்பும் வலிமைமிக்க முறுக்கி நிமிர்ந்த மீசை.

**வீசுமொரு கால்** – வீசிநடக்கக் கூடிய ஒருகால். **பங்கம்** – குறை. **அன்றி** – அல்லாமல். **விக்கிரமம்** – வீரம், பேராற்றல். **உக்கிர நரசிங்கம்** – சினம் மிகுந்த நரசிங்கமூர்த்தி. **காசறு** – குற்றமில்லாத. **துருவற்ற** – கறை இல்லாத. **உருக்கு** – எஃகு இரும்பு. **மெய்யன்** – உண்மையாளன். **சொர்ணம்** – தங்கம். **அஞ்சனம்** – மந்திரமை. **கருமாயம்** – மிகுந்தவஞ்சனை. **வாயுவேகன்** – காற்றைப் போன்ற வேகம் உள்ளவன். **கடும்பொட்டல்** – காய்ந்துவறண்டு போன இடம். **முக்குளிக்கும்** – முழுகி எழும். **துட்ட** – தீய. **நீர்க்காகம்** – ஒருகாக்கை வகை. **கறுப்பு** – கருமை. **காள மேகம்** – கருமேகம். **கண் படுத்தல்** – கிடத்தல். **நூறுரு** – நூறு வடிவங்கள். **கலைமதி** – அழகான சந்திரன், நிலவு.

**எட்டெழுத்து** – ஓம் நமோநாராயணாய என்னும் மந்திரம். **உருச்செபித்தல்** – பலமுறை சொல்லுதல். **தெய்வச்சிலையார்** – திருப்புல்லாணியில் எழுந்தருளியிருக்கும் பெருமாள், திருமால். **சிலை** – கல். **மனங்கவிப்பேன்** – மனதைச் செலுத்துவேன். **மால் திருப்பதி** – திருமால் எழுந்தருளியிருக்கும் தலங்கள். **செங்கண்** – சிவந்த கண். **மாலன்பர்** – திருமால் பக்தர். **ஸ்மரிப்பேன்** – உச்சரிப்பேன்.

**அணி திருநாமம்** – வைணவர் நெற்றியிலும் உடலிலும் இடும் நாமம். **வளையாழி** – சங்குசக்கரம். **தரியார்** – அணியாதவர். **அரிப்பேன்** – கொல்வேன். **அங்கதமலை** – வாலியின் மகன் அங்கதனுடைய மலை. **அண்டலர்** – பகைவர். **சஞ்சரிப்பேன்** – வாழ்வேன்.

பா.வே : 1. செவிப்பேன்

## *Noṇṭi* declares his skills and talent

Worshipping the flowery feet of ***Māmātu***[1]
Besides greeting **Teyvaccilaiyār** sweetmouthed
Who is the **Mayaṉ**[2] ventable
And discarding lust and vice alike (numbering six)
I, a ***noṇṭi*** did put on a waist band
To raise my feet and dance

With the rhythmic percussion of my palms
Sounding ***Tattarikiṭa – Tatiṅkiṇattōm***[3]
I a ***noṇṭi*** wear the ***Kaccai***[4]
To lift my feet and dance

With the unfolded ***vallavaṭṭu***[5] glittering around shoulders mine
And the martial anklets clanging in resonance
In fulfillment of my cherished desire as a boon,
I, a ***noṇṭi'*** did raise my feet to dance
Wearing the ***Kaccai*** proper.

Grinding my teeth and chiding the youngsters
In a stance quite aggressive,
Wearing but tightly an armour gold laced
Majestically on my person,
And twirling the hornlike moustache as well
I, a ***noṇṭi*** did lift my feet to dance

With a ***Kaccai*** around my waist.
Though in one of my feet I am handicapped a little
In my powers I am ferocious
Like **Ukkiranaraciṅkam**[6] for sure.
But for the flawless audience gathered here
I'll be like sterling gold solid
I, a ***noṇṭi*** did sport a ***kaccai*** to lift my feet and dance

A honest person like steel rustless,
One who can with ***añcaṉam***[7] dabbed by his hand.
Locate treasures of gold on earth,
Also versed fully in blackmagic vicious
Such a ***noṇṭi*** that I am
I did wear ***Kaccai*** to lift my feet and dance

Fast wind from the start,
A wily crow aquatic which attempts to bathe in a desert barren
A dark cloud ominous,
Such a man am I, a ***noṇṭi,***
I did put on a ***Kaccai*** to raise my feet and dance
At a price I can lay down a tiger even
And assume a hundred shapes different of body mine,
Pounce I can on the moon.
To halt his movement in the sky,
With such night enomous I a ***noṇṭi,***
Did sport a ***Kaccai*** to lift my feet and dance

Chant I shall the eight lettered incantation[8] holy,
Curse I shall those who don't worship **Teyvaccilaiyār**
To become stones lifeless,
I shall fix my mind on the feet of **Cekanātar,**
I will go over to all the shrines of **Tirumāl**
And live thus willingly for ever.
I shall pronounce but piously
The names of the redeyed **māl's** devotees all,
Kill I shall but certainly,

Those who do not put on the ***Tirunāmam***[9]
And the symbol of conch and wheel
On persons theirs,
Prostrate I shall before the mount of **Aṅkataṉ**
I shall conquer foes all and roam thus - **Tattarikiṭataka Cematā.**

1.*Māmātu* - Goddess **Ilakkumi.**
2.**Māyaṉ** – another appellation of **Tirumāl.**
3.*Tattarikiṭa Tatiṅkiṇattōm* - rhythmic percussion notes
4.*kaccai* - a waistband
5.*vallavaṭṭu* – A shawl.
6.**Ukkiranaraciṅkam** - Ferocious manlion incarnation of **Viṣṇu.**
7.**añcaṉam** – black ink with magical potency.
8.**eightlettered incantation** – **ŌmNamō Nārāyaṇāya**
9.*Tirunāmam* - Vaishnavite Caste mark.

## (நொண்டி தன் வரலாறு உரைத்தல்)
## விருத்தம்

5. [1]மருக்குலாம் செம்பொற் கஞ்ச
மாதினாள் புவிப்பெண் ணோடு
தருப்பையா தனத்தென் னாளும்
தழைசெக நாத மூர்த்தி
திருப்பதாம் புயங்கள் தன்னைச்
சிந்தித்தென் வரலா றெல்லாம்
விருப்பமாய்ப் புகல்வேன் செய்த
வினையை விட்டக லுவேனே.

**மருக்குலாம்** – மணம் உலவும். **செம்பொன்** – சிவந்தபொன். **கஞ்சமாதினாள்** – தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமி. **புவிப்பெண்** – பூமி தேவி. **தருப்பையாதனம்** – தர்ப்பாசனம் – தருப்பை + ஆசனம் – தருப்பைப் புல் ஆசனம். **தழை** – விளங்கும். **திருப்பதாம்புயங்கள்** – பதம் + அம்புயங்கள். அம்புயம் – தாமரை, பாதமாகிய தாமரை மலர்கள். **வரலாறு** – முன்செய்தி. **புகல்வேன்** – சொல்வேன். **வினை** – செயல். **அகலுவேன்** – நீங்குவேன்.

**பா.வே** : 1. மருக்குலா விம்பொற்

**Cōracūraṉ bigins to tell history**

I did contemplate in my mind,
The lotus feet of **Cekanātamūrtti**

Who is ensconced in His ***taruppai***[1] seat
Along with **Ilakkumi** on her lotus fragrant
And ***Puvimātu*** the goddess of earth
Hence shall I narrate the story of my life
Willingly and rid myself of the impact
Of my misdeeds all.

*1.* ***Taruppai*** – a kind of holy grass.

**(சோரசூரன் தன் குலப்பெருமை கூறதல்)**

**தரு**

6. மணியாழி வண்ணன்வளர் – திரு
மாலிருஞ் சோலை மலைதனிலே
அணியான ஜாரிக்கள்ளர் – குடி
யாகிய பேர்கள னேகருண்டு 1

அதில்நா னொருவன்கண்டீர் – அவர்
அத்தனை பேர்க்கும்நான் எத்தன்கண்டீர்
துதிகொண்டு வாழ்ந்திருந்தேன் – சோர
சூரனென் றெனக்குப் பேரழைப்பார். 2

திருமங்கை யாழ்வாரைக் – குல
தெய்வமென் றேவைத்துக் கைதொழுவேன்
தருமங்கள் தப்புகிலேன் – கிருஷ்ண
சாமிக்கு யில்லையென் சாமர்த்தியங்கள் 3

தினமொன்றுக் காயிரம்பொன் – சோரஞ்
செய்தாலல் லால் நித்திரை செய்வதில்லை
அநியாய மென்கனவு – பொன்
அளந்து முற்றாமல் வளர்ந்ததுகாண். 4

**மணியாழி வண்ணன்** – அழகிய கடல் போன்ற கருமையான நிறத்தையுடையவன். **திருமாலிருஞ்சோலை** – அழகர் கோயில் கொண்டுள்ள மலை, அழகர் மலை. **ஜாரிக்கள்ளர்** – ஒருவகைக் கள்ளர் கூட்டத்தினர். **அனேகர்** – பலர். **எத்தன்** – ஏமாற்றுவோன். **துதிகொண்டு** –

புகழ்மிகுந்து. **சோரசூரன்** – இந்நூலில் இடம்பெறும் நொண்டி. **திருமங்கையாழ்வார்** – பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர். **தப்புகிலேன்** – தவறமாட்டேன். **கிருஷ்ணசாமி** – கண்ணன். **சாமார்த்தியம்** – திறமை. **தினம்** – நாள்தோறும். **சோரம்** – களவு. **நித்திரை** – உறக்கம். **அநியாயம்** – முறையின்மை. **அளந்து முற்றாமல்** – அளவிட்டும் முடிவுபெறாமை.

பா.வே : 1 பேருரைப்பார்.

## Cōracūraṉ declares his communal glory

At **Tirumāliruñcōlai**[1] where doth reside
The Lord of such complexion as the ocean beautifully,
There are genuine ***Kaḷḷar***[2] so many
As a community settled thus.

One among them am I, for information thine,
And I can cheat them all for sure
Lived there with renown great
And called **Cōracūraṉ**[3] which is my name proper

Pray I shall to **Tirumaṅkaiyāḻvār**[4]
As my family deity exclusive,
In charities mine never do I fail
In cleverness and with resourceful
Even Lord **Kriṣṇa**[5] is no match to me

Never would I go to bed and sleep
Without stealing one thousand ***Poṉ***[6] atleast per day
This dream of my unjust greed for wealth
Did grow for ever without any limit or end.

1. **Tirumāliruñcōlai** – the shrine of **Kaḷḷaḻakar**.
2. *Kaḷḷar* – the name of a community in Tamilnadu.
3. **Cōracūraṉ** – the hero and narrator of this poem.
4. **Tirumaṅkaiāḻvār** – one of the twelve **Āḻvārs.**
5. Kriṣṇa – An incarnation of **viṣṇu.**
6. *Poṉ* – a gold coin as a monetary unit.

**(சோரசூரன், ஆற்றாப்புலி என்பவனோடு ஆட்டுக்கிடாய்ப் பந்தயம் வைத்தல்)**

நண்டு கொழுத்ததென்றால் – தன்
வளைக்குள் ளிராத வழக்கம் போலே
உண்டு கொழுத்தமதம் – இருக்க
ஒட்டுமோ யென்னிலுந் துட்டப்பயல் 5

ஆற்றாப் புலியென்பவன் – என்னோட
ஆட்டுக்கி டாய்ப்பாச்சல் மூட்டவந்தான்
தோற்றா லொருவருஷம் – சீமை
சுத்தவும் பந்தயம் வைத்துக்கொண்டோம். 6

**நண்டு** – நீர் ஓரம் வாழும் ஒருவகைச் சிறு உயிரி. **வளை** – துளை. **இராத** – இல்லாத. **உண்டு** – உணவருந்தி. **துட்டப்பயல்** – தீயோன். **ஆற்றாப்புலி** – சோரசூரனை எதிர்த்த கள்வன். **ஆடு** – விலங்கு வகை. **கிடாய்** – ஆட்டின் ஆண். **பாச்சல்** – பாய்ச்சல் – பாய்தல். **மூட்டுதல்** – தூண்டிவிடுதல். **சீமை** – நாடு. **சுத்தவும்** – சுற்றிவரவும். **பந்தயம்** – போட்டி.

## Cōracūraṉ lays a wager for a ram fight

As a fattened crab will not confine itself to its hole,
I could not remain passive
As I too was far and wellfed
Hence when on **Āṟṟāppuli**
A fellow more vicious than I
Did lay a wager for a ram fight
Readily did both of us agree to be bet mutual
That the loser in the fight should
Leave his place native and roam around the country
For one full year.

**(சோரசூரன் பந்தயத்தில் தோற்றல்)**

வைத்துப் பொருதையிலே – நான்
வளர்த்த கிடாய்போரில் இளைத்திட்டுதே
வித்தியாசம் வந்துதென்றே – ஊரை
விட்டுடனே புறப்பட்டு நின்றேன் 7

அளவற்ற செல்வமெல்லாம் – விட்டு
அரைத்துணி யோடே வரத்துணிந்தேன்
களவென்ற கற்பகந்தான் – எந்தன்
கைக்குள் ளிருக்க மயக்கமென்ன 8

**பொருதையிலே** – சண்டைசெய்யும் பொழுது. **இளைத்திடுதல்** – தோற்றுப்போதல். **வித்தியாசம்** – வேறுபாடு. **அரைத்துணி** – இடையில் கட்டிய துணி. **களவு** – திருட்டு. **கற்பகம்** – தேவலோகத்தில் உள்ள மரம், வேண்டியதைத் தரும். **மயக்கம்** – மனச்சோர்வு.

### *Cōracūraṉ loses the bet*

It so happened in the fight that ensued
My ram last in marked difference
*And I had to leave my place immediately*
As agreed upon earlier.

Learning the entire looted wealth limitless
*And with just the cloth that covered my waist*
Did I venture out as a vagrant
Why should I bother
As my skill as a burglar is there
*To yield the desired wealth ?*

**(சோரசூரன் தல யாத்திரை செல்லல்)**

*மனையாட்டி வைப்பாட்டி* – இரு
மங்கையர் உண்டெனக்கு அங்கவர்மேல்
*நினைவான பாசமொன்று* – மாத்திரம்
நீங்காமல் [1]நீங்கிநின் றேங்கினபின் 9

வீணாசை யென்னசும்மா – நம்ம
வீட்டிலி ருக்க வினைவந்துதே
நாணா திருப்போமென்றால் – அவன்
*நாப்புவனே நாமோ கேட்போமென்று* 10

ரோசத்தை எண்ணிக்கொண்டு – அந்த
நூலிடை யாரிடந் தோலிடவே

தேசத்திலே நடந்தேன் – புண்ணிய
தீர்த்தங்கள் தெய்வங்கள் போற்றவென்றே. 11

**மனையாட்டி** – மனைவி. **வைப்பாட்டி** – பரத்தை, தாசி. **ஏங்கி** – மனம் வாடி. **பாசம்** – ஆசை. **வினை** – கேடு. **நாணாது** – வெட்கப்படாது. **நாப்பு** – பரிகாசம், ஏளனம்.. **ரோசம்** – தன்மானம். **நூலிடையர்** – மெல்லிய இடையுடைய பெண்கள்.

**பா.வே** : 1. நின்றுநின்.

## Cōracūraṉ goes on a pilgrimage

A wedded wife and a concubine (mistress)
I had both,
With longing great and love for them
Which I had to forego in anguish acute
As fatefully I could not remain at home
And become an object of derisire scorn and ridicule
By the challenger of the fight
And with selfrespect and a sense of shame
Urging me to leave
I did bid farewell to my women slim waisted
And walked away on a pilgrimage
Seeking deities and holy ponds
In pious worship proper.

### (சோரசூரன் மதுரைக்கு வருதல்)

நடந்தேன் ஒருநினைவாய் – அன்று
ராத்திரி மதுரை சேத்திரத்தில்
கிடந்தேன் நடுநிசியில் – [1]ஒரு
கெவுளிசொன் னதைக்கேட் டவ்விடம்விட்டுச் 12

**ராத்திரி** – இரவு. **சேத்திரம்** – புண்ணியத் தலம். **நடுநிசி** – நடு இரவு. **கெவுளி** – கவுளி – பல்லி.

**பா.வே** : 1. அங்கொரு.

## Cōracūran arrives at Maturai[1]

Thus did I walk singleminded and resolute
And arrived at **Maturai** shrine holy
At dead of night and stayed there
For a while and then left
As a ***Kevuḷi***[2] there did tick
As a signal for me to leave.

1. **Maturai** – a city in Tamilnadu with a glorious part
2. ***Kevuḷi*** – a lizard whose ticking is considered predictive.

### (சோரசூரன் மங்கையொருத்தியைக் காணல்)

சந்தித் தலைமடத்தில் – வந்து
தங்கினேன் அங்கொரு மங்கைவந்தாள்
எந்தப் புருஷனையோ – தேடிக்கொண்
டென்னையவ னென்றவள் சன்னைசெய்தாள் 13

அதைநான் விடுவேனோ – விட
ஆண்பிள்ளை யோயிவன் வீண்பயலோ
இதமாய் இடுந்தெய்வம் – எங்கு
இருந்தாலும் இடுமென் றெண்ணியவள் 14

சன்னைக்குள்ளேயிணங்கி – வந்த
தைவரப் பற்றிக்கொள் ளாமல்விட்டால்
சின்னத்தன மென்றெண்ணி – மெத்தச்
சீராட்டி னேன்தொழிற் பாராட்டினேன். 15

**சந்தித் தலைமடம்** – சாலைகள் கூடுமிடம். **சன்னை** – குறிப்பு. **இதமாய்** – விருப்பமாய். **இடும்** – கொடுக்கும். **சின்னத்தனம்** – அற்பத்தனம். **தருணம்** – தகுந்தநேரம்.

## Cōracūran sees a damsel

Thus did I leave there
And then reached a choultry at a road junction
As I stayed at that ***Cantimaṭam***[1]
A woman did arrive there

Seeking the company of a man whomsoever
And signalled her desire carnal in hints
To attract attention mine.
Would I ever let go an opportunity such?
Am I not manful, am I impotent?
Thinking that the thoughtful God
Would cater to my needs wherever I was
I did respond but affirmatively
To her gestures voluptuou s
Mean it would be on my past
If I do not grab such a handy chance
Thus did I commend myself
And acted on such impulses mine

*1. Cantimaṭam* – A choultry or public resting place situated at a roadjunction.

**(சோரசூரன் அவளின் ஆபரணங்களைத் திருடுதல்)**

அந்தத் தருணத்திலே – யவட்கு
ஆசைப் பிசாசமா யாவேசம்வந்து
சிந்தை கலக்க முற்றாள் – அப்பால்
தேகப் பரவச மாகிவிட்டாள் 16

அவசம் பிறந்ததிலே – யவள்
ஆகத் துடைமை யனேகத்தையுஞ்
செவியா பரணத்தையும் – ஒக்கச்
சிக்கிக்கொண்டேன் கக்கப் பொக்கணமாய்ச் 17

**ஆசைப்பிசாசம்** – காமவிச்சை என்னும் பேய். **ஆவேசம்** – வெறி. **தேகம்** – உடம்பு. **பரவசம்** – தன்வசமற்ற நிலை. **ஆகத்துடைமை** – உடலிலணிந்த அணிகலன். **செவியாபரணம்** – காதணிகலன். **ஒக்க** – ஒருசேர. **சிக்கிக் கொண்டேன்** – கட்டிக் கொண்டேன். **கக்கப் பொக்கணம்** – கக்கத்தில் இடுக்கிய துணிமூட்டை.

## Cōracūraṉ steals the woman's ornaments

At such a juncture emotional
That woman obsessed with desire lustful

Did become frenzied and confused.
Then she lost control over body hers
While she was in a such a trance helpless
I did remove her belongings all
Found on her person.
Including her earrings as well.
I packed those ornaments all.
In a piece of cloth as a bundle.
And kept it in my armpit.

**(சோரசூரன் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு வருதல்)**

சென்றேன் விடியுமுன்னே – தென்
திருப்பரங் குன்றத்தில் தரித்திருந்து
அன்றேஸ்ரீ வில்லிப்புத்தூர் – வந்து
அடுத்தெங்கள் சூடிக் கொடுத்தாளையும் 18

மன்னாரை யுந்தொழுதன் – பின்
வடபத்திர சயனர் அடிபணிந்தேன்
பொன்னார மொன்றளித்தேன் – மற்ற
[1]பூஷணமெல் லாம்விற்றொரு நாணயமாய்க் 19

**தென்** – தெற்கு. **திருப்பரங்குன்றம்** – முருகக்கடவுளின் அறுபடை வீடுகளுள் ஒன்று. **தரித்திருந்து** – தங்கியிருந்து. **ஸ்ரீ வில்லிப்புத்தூர்** – விருதுநகர் மாவட்டத்திலுள்ள ஓர் வைணவத் தலம். **சூடிக்கொடுத்தாள்** – ஆண்டாள். **பொன்னாரம்** – பொன்னாலான மணிவடம். **பூஷணம்** – அணிகலன், நகை. **நாணயம்** – காசு.

**சு.சொ** : 1. பூழணமெல்லாம்

**Cōracūran̲ arrives at Srīvilliputtūr[1]**

I walked away thus before dawn.
Reached **Tirupparaṅkun̲ram**[2] and stayed there for a while,
On that day itself did I leave for **Srīvilliputtūr**
And worshipped Lord **Man̲n̲ār**[3] and **Cūṭikkoṭuttāḷ**[4] both
And worsipped at the feet of Lord **Vaṭapattiracayan̲ar** [5]
I did also gift a goldchain to the deities those

I sold the rest of the ornaments at a price,
And got coins in exchange
Which I did keep in a knot of cloth mine.

1. **Srīvilliputtūr** – a temple town in southern Tamilnadu and the birth place of **Aṇṭāḷ**.
2. **Tirupparaṅkunram** – One of the six ***paṭaivēṭu*** or camp resorts of Lord **Murukan.**
3. Lord **Mannār** – **Tirumāl**'s manifestation in **Srīvilliputtūr.**
4. **Cūṭikkoṭuttāḷ** – another name of **Aṇṭāḷ** who herself wore the garland, before offering them to **Tirumāl**
5. **Vaṭapattiracayanar** - The name of God at **Srīvilliputtūr.** It means lying on the baniyan leaf.

### (சோரசூரன் தாசியைக் காணுதல்)

கடுக முடிந்துகொண்டேன் – அதைக்
கண்டொரு வேசையென் னண்டைவந்தாள்
கெடுதல் வரும்பொழுது – தூம
கேதுமுன் னேவரும் ஏதுவைப்போல் 20

வந்தாள் எனதிடத்தில் – கண்
வலைவீசிப் பாதி முலைகாட்டி
எந்தூர் எவ்விடமென்றாள் – உம்மை
எங்கேயோ கண்டதுண் டிங்கோயென்றாள் 21

வார்த்தைப் பகட்டினிலும் – முக
மாயத்தி லும்மன நேயத்திலும்
ஊத்தைக் குழிக்குட்சிக்கிக் – கண்ணி
யொட்டுக்குள் அகப்பட்ட சிட்டுப்போலே 22

**கடுக** – விரைவாக. **வேசை** – வேசி, பரத்தை. **அண்டை** – அருகில். **தூமகேது** – ஒரு வால் நட்சத்திரம் **ஏது** – நிமித்தம், காரணம். **எந்தூர்** – எந்த ஊர். **பகட்டு** – கவர்ச்சி. **ஊத்தைக் குழி** – நாற்றம் மிகுந்த பள்ளம். **கண்ணியொட்டு** – பறவை பிடிக்கும் கண்ணி. **சிட்டு** – சிட்டுக் குருவி.

### Cōracūran meets a prostitute

On seeing coins in possession mine
A *vēcai*[1] did come near me

As if to indicate like the ***Tūmakētu***[2] meteor
The inevitable misfortune imminent,
With her eyes did she weave a web
And exposed her luring breast but partially
Then she did enquire the whereabouts mine.
In her glib talk and tempting gestures facial,
And the pretended affection so warm
I was trapped in the pit of sin odorous
Like a sparrow caught in a ***kaṉṉi***[3]

1. *Vēcai* – a prostitute.
2. *Tūmakētu* – a meteor the occurrence of which forecasts evil to the world.
3. *Kaṉṉi* – a bird trap.

**(சோரசூரன் தாசியுடன் உரையாடுதல்)**

மோப்பம் பிடித்துநின்றேன் – ஒரு
முன்னேரத் துக்குப்பொன் என்னவென்றேன்
பேய்ப்பய லென்றெண்ணினாள் – வேசைப்
பெண்டறி யானிவ னென்றறிந்தாள். 23

காசாசை யில்லையென்றாள் – வெகு
காயக்கஞ் செய்தாள் மாய்மாலக்கள்ளி
பாசாங்குக் காரியவள் – என்னைப்
பஞ்சரித்துத் தன்னைக் கெஞ்சவைத்தாள். 24

**மோப்பம்** – மணம், வாசனை. **முன்னேரம்** – இரவின் முன்பொழுது. **பேய்ப்பயல்** – முரட்டுப்பயல். **வேசைப்பெண்டு** – பரத்தை. **காசு** – நாணயம். **காயக்கம்** – மோக மயக்கம். **மாய்மாலக் கள்ளி** – பாசாங்குக்காரி, ஏமாற்றுக்காரி. **பஞ்சரித்து** – கொஞ்சிப் பேசி. **கெஞ்ச** – வருந்திக் கேட்க.

## Cōracūraṉ talks to the prostitute

I stood there sniffing her (person)
And asked how much I had to pay
For her company for the night early
She perhaps thought that I was a brute

Quite unaware of the ***vēcai*** or her role
'Not after money am I' said that hench deceitful,
And made me infatuated by her endearment false
Luring me by her words and deeds
She leterally made me beg for her company.

**(தாசி, சோரசூரனை வீட்டிற்கு அழைத்து வருதல்)**

வீட்டுக் கழைத்துவந்தாள் – என்னை
மெள்ளவா வென்றுதா னுள்ளேசென்றாள்
ஓட்டத் தினிலோடி – அன்னைக்கு
ஓதினாள் நான்வந்த சேதியெல்லாம் 25

நிதிக்கார னென்றுரைத்தாள் – பெட்டி
ரெம்புமென் றாள்நல்ல கொம்பனென்றாள்
குதித்தார்கள் தோழியர்கள் – வந்து
கும்பிட்டார் கூடத்திற் கம்பளத்தில் 26

வரலாகு மென்றழைத்தார் – அந்த
மாடத் தழகையா ரோடேசொல்வேன்
ஒருகோடி கண்ணில்லையே – எவர்
உண்டாக்கி னாரோவிம் மண்டலத்தில் 27

தானேயுண் டானதுவோ – தெய்வத்
தச்சன்வந் தேசெய்த கைச்செயலோ
நானாகம் பூரிக்கவே – அங்கே
ரெத்தினக் கட்டிலின் மெத்தையின்மேல் 28

**அன்னை** – தாய். **ஓதி** – சொல்லி. **சேதி** – செய்தி. **நிதிக்காரன்** – பணக்காரன். **ரெம்பும்** – நிரம்பும். **கொம்பன்** – ஆற்றலுடையவன். **கூடம்** – வீட்டின் கூடம். **கம்பளம்** – கம்பளிப்போர்வை. **மாடம்** – மேல் வீடு. **மண்டலம்** – பூமி. **தெய்வத்தச்சன்** – தேவலோகத்துச் சிற்பியான விசுவகன்மா. **ஆகம்** – உடல். **பூரிக்க** – மகிழ்ச்சி கொள்ள. **மெத்தை** – படுக்கை, பஞ்சணை.

## The *tāci*[1] brings Cōracūra<u>n</u> to her house

She took me to her house
Asking me to step in gently she went inside,
Moving fast she informed her mother
Of my arrival and the circumstances thereof
She said that I was quite a wealthy person
And her coffers could be filled
She did refer to me as a man of talent too.
Her maids jumped in joy,
They did greet me with reverence and invited me
To the hall to be seated on the carpet there.

To whom can I reveal the elegance
Of the ***māṭam***[2] in her house,
Millions of eyes I do not possess
To see the ***māṭam*** entire and describe
Who ever did create such a marvel
On this earth of ours ?
Did it emerge on its own?
Or was it the handiwork of heaven's carpenter ?
In Sheer delight of body mine.
On a mattress in a gem studded cot,
Was I reclined on a pillow there.

*1. tāci* – a courtezan or prostitute.
*2. māṭam* – upper storey or first floor.

(தாசியின் உபசரிப்பு)

ஒலுகினிற் சாய்ந்திருந்தேன் – அப்போது
ஊழியப் பெண்களும் தோழிகளும்
[1]விரைநாறு சந்தனமும் – வெள்ளை
வெற்றிலைப் பாக்குடன் அத்தர்பன்னீர் 29

பழமுஞ் சருக்கரையும் – தேனும்
பால்குழம்பு மெந்தன் பாற்கொணர்ந்தார்

அழகான மாப்பிள்ளைக்கு – உங்கள்
அத்தை கொடுத்தனுப் பித்ததென்றார் 30

ஒருத்தி சுருள்மடிக்கப் – பின்
னொருத்தி படிக்கம் பிடித்துநிற்க
ஒருத்தி யிசைபடிக்கப் – பின்
னொருத்தி விசிறி யசைத்துநிற்க 31

**ஒலுகு** – திண்டு, சாய்வணை. **ஊழியப்பெண்** – வேலைக்காரி. **விரை நாறு** – நறுமணம் வீசுகின்ற. **வெற்றிலை** – வெற்றிலைக் கொடியின் இலை. **அத்தர்** – பூக்களிலிருந்து எடுக்கும் நறுமணத்தைலம். **பன்னீர்** – ரோசாவிலிருந்து இறக்கப்படும் நறுமணநீர். **எந்தன்பால்** – என்னருகில். **சுருள்** – வெற்றிலைச் சுருள். **படிக்கம்** – காளாஞ்சி – எச்சில் துப்பும் கலம். **இசை** – பாட்டு.

பா.வே : 1. விலையேறு.

## The *tāci*'s hospitality

There arrived then the *tāci*'s maids and servants
Fragrant sandalpaste they did bring
Alongwith betelleaves white and arecanuts
Perfumes of ***attar***[1] and rose water besides
Fruits and Sugar, honey and milkshake
Did they bring for me
'All there for you the ***māppiḷḷai***[2] of this house
Sent by your aunt beloved."
They did tell me thus.
One of the maids rolled a pack of betelleaves
And nuts for me to chew,
While another maid stood beside me
Holding a spittoon in her hand.
Yet another maid fanned me
With a ***viciṟi***[3] in her hand
A maid sang but prosperly to suit the occasion.

1. *attar* – a Kind of perfume.
2. *māppiḷḷai* – son-in-law or bridegroom.
3. *viciṟi* – a handfan.

### (சோரசூரன், பொன் தருதல்)

அத்தை யருமையினால் – அங்
கனுப்பினேன் சேலைக்கு முப்பதுபொன்
வைத்த பணத்தைக்கண்டாள் – அந்தப்
பப்பரத்தி யதை அப்பிக்கொண்டாள் 32

**அத்தை** – மாமியார். **பப்பரத்தி** – இழிவான பரத்தை. **அப்பி** – எடுத்து.

## Cōracūran has to part with his money

For my dear mother-in-law I did set apart
Thirty ***Pon*** towards a sari for her
On seeing that money with me
The ***papparatti***[1] mean did take it away
For herself

*1. papparatti* – Courtezan.

### (தாய்க் கிழவியின் வருகை)

முடியத் தலைதடவி – மெள்ள
மூளையை யுறுஞ்சு வாளெனவே
குடிலக் கிழவிவந்தாள் – வெள்ளைக்
கொக்குப்போ லேகண்கள் பக்குப்போலே 33

தலைசாமரம் போட – முலை
தாளோ டிழுக்கவோர் கோலூன்றி
கலைசோர்ந்து காலில்விழ – அதைக்
[1]கையாலெ டுக்கவும் மெய்நடுங்கி 34

மொழியுங் குரல்நடுங்க – மெத்த
முக்கிக்கொண்டு சற்றே வெட்கிக்கொண்டு
நிழலோ டொதுங்கிநின்று – கையை
நெத்திக்கு மேலேவைத் துத்துப்பார்த்து 35

**குடிலக்கிழவி** – வஞ்சகியான தாய்க்கிழவி. **பக்கு** – பள்ளம். **சாமரம்** – விசிறி கவரிமான் மயிரால் அமைந்த அரச சின்னம். **கோல்** – மரக்கொம்பு. **கலை** – ஆடை. **நெத்தி** – நெற்றி.

பா.வே : 1. கையாற் பிடிக்கவும்.

## The arrival of the *tāykkiḻavi* (The old mother of the *tāci*)

To cheat me but totally
And to brainwash as well
The vicious ***tāykkiḻavi*** cunning like **Kuṭilaṉ**[1]
Did arrive there like a crane white
With holloweyes and an oscillating head of hair,
Her sagging breasts reaching up to her feet,
supported by a stick to walk,
The garments on her slipping downwards
To fall at her feet
Unable to take and set them right
With her shivering hands,
Her voice too did tremble and falter,
Straining,moaning and blushing too a little
Standing aside as a part of her shadow
She did place her palm above her eyes
On her forehead to stare at me

**1.Kuṭilaṉ** – an evil character in *Cīvakacintāmaṇi* which is a famous Tamil epic.

### (தாய்க்கிழவி சோரசூரனுடன் உரையாடுதல்)

வாரும் மருமகனே – என்
வரிசைத் துரையே மருமகனே
சேரும் படிசேர்ந்தீர் – மகள்
சின்னஞ் சிறியாள்முன் பின்னறியாள் 36

மனதிற் கபடறியாள் – ஒரு
மாதரைப் போலவே சூதறியாள்
[1]அனுக்கல் மிக்கவள்காண் – கலி
யாணஞ்செய் தோர்மாதங் காணுமிவள் 37

ராச வளர்த்திகண்டீர் – ஒரு
    ராத்திரி வைகுண்ட சாத்திரியார்
பேசி யிருந்ததுண்டு – இந்தப்
    பேதையை நீரினி யாதரித்துத் 38

தினமுஞ் சுகித்திருப்பீர் – வீட்டுச்
    சேதலா பமுமும தாதலினால்
எனக்குப் பொறுப்பில்லையே – என்று
    எத்தனை யோமெத்த மெத்தச்சொன்னாள் 39

மெய்யென்று கேட்டிருந்தேன் – அந்த
    வெள்ளாட்டி மாரைவிட் டுள்வீட்டைச்
செய்யுஞ்சிங் காரமென்றாள் – அங்கே
    செல்லுமிது உமக்கே செல்லுமென்றாள் 40

தானுந்தன் வீட்டிற்சென்றா – ளங்கே
    தன்மகள் கேதேதோ [2]மர்மஞ்சொன்னாள்
.......... ............... ................. ..................
............ .......... ............... ................ 41

**உத்து** – உற்று. **வரிசைத் துரை** – மரியாதைக்குரிய தலைவன். **கபடு** – வஞ்சகம். **சூது** – வஞ்சனை. **அனுக்கல்** – வருத்தம். **சுகித்திரு** – இன்பம் நுகர்ந்திரு. **சேதலாபம்** – வீட்டுச் செலவும் வரவும். **மெத்த** – மிகவும். **மெய்** – உண்மை. **வெள்ளாட்டிமார்** – பணிப்பெண்கள். **சிங்காரம்** – அலங்காரம். **மர்மம்** – இரகசியம்.

**பா.வே** : 1.அனுகூல.
**சு.சொ** : 2. மற்மஞ்.

## The *tāykkil̲avi* talks to Cōracūran̲

"Oh! ***marumakan̲***[1] dear, Welcome to thee,
Our lord of honour here
Thou hast arrived but properly here
My daughter is quite young and innocent
Not wily like womenfolk other
Not cunning in mind either
Of tender sympathy in nature hers

She was formally wedded only a month back
*Has grown tall and majestic like a queen*
Just for one night one **Vaikuntacāttiriyār**[2]
Did keep company with her
Hereafter you have to support this innocent woman,
*You may enjoy everyday.*
Carnal pleasure connubial,
I need not bother any longer
About the household worries of income and expenditure
*Thus did the old woman go on talking*
I did listen to her
And also believed what she said
She did go inside her house
*Instructing her servant maids to decorate the portion interior*
She invited me inside saying
That I have a right to move therein
Then did she whisper something in her daughter's ears.

1. *Marumakan* - nephew or son-in-law.
2. **Vaikuntacāttiriyār** – a vaishnavite priest or scholar.

**(தாசி அலங்கரித்து வருதல்)**

திலகம் நுதற்கணிந்தாள் – குழல்
    சீவினாள் பூவோடென் னாவியையும்
கலந்து சொருகிவிட்டாள் – முலைக்
    கச்சிலே [1]நெஞ்சையும் வைத்துக்கொண்டாள் 42

மின்போல் இடைதுவளப் – பொன்
    விலைபெற்ற வெள்ளைச் சலவைக்கட்டிப்
பொன்பூத்த பூங்கொடிபோல் – அன்னம்
    போலே நடந்தென்முன் னாலேவந்தாள்.
- தந்தானத் தானதானா 43
-

**திலகம்** – நெற்றிப்பொட்டு. **நுதல்** – நெற்றி. **குழல்** – கூந்தல். **ஆவி** – உயிர். **மின்** – மின்னல். **சலவை** – வெளுத்த துணி. **பூங்கொடி** – அழகிய கொடி. **அன்னம்** – ஒருவகைப்பறவை.

**பா.வே :** 1. நஞ்சையும் வைச்சுக்கொண்டாள்.

## The *tāci* arrives grandly dressed and decked

The *Taci* did put a ***tilakam***[1] on her forehead,
Groomed her locks of hair and fixed flowers therein,
So elegantly as to captivate my soul
In her bewitching brassiere cups
Did she hold my heart as a ransom
Woth her lightning waist to swing
Wearing but a costly garment washed bright
And like a creeps with flowers of gold
Walked she like a swan.
And stood before me. ***Tantānat tāṉattāṉā.***

1. ***tilakam*** – a mark or colourful sticker.

**(சோரசூரன், தாசியின் அழகில் மயங்குதல்)**
**(விருத்தம்)**

7. வந்தவ ளழகைக் கண்டு மயங்கினே னந்த வேளை
பைந்தொடி தனம்யான் கொள்ளப் பாவையென் றனத்தைக் கொள்ளச்
சிந்தையிலி ரண்டு பேருந் தீராத மைய்யல் கொண்டோம்
அந்தநாள் சுகித்த தெல்லாம் அனந்தநாட் சொல்ல லாமே.

**பைந்தொடி** – பசிய பொன்னாலான வளையணிந்த பெண். **தனம்** – முலை, செல்வம். **பாவை** – பெண். **சிந்தை** – மனம். **மைய்யல்** – மயல் – மயக்கம். **சுகித்தது** – இன்பம் துய்த்தது. **அநந்த நாள்** – அளவற்ற நாள், பலநாள்.

## Cōracūraṉ is enamoured of the *tāci*'s beauty

At that moment was I so enamoured
Of that lass goldbangled
That I held her breasts in hands mine
And she held my chest in her turn
With lust unquenchable did both of us
Have sexual pleasure so ecstatic on that day
That I can describe it on all the days to follow.

## (சோரசூரன் தாசியின் அழகில் மயங்கி உரைத்தல்)

### தரு

8. கடல்விழி துயில்பெருமாள் – செம்பொற்
கலைப்பெருமாள் தெய்வச் சிலைப்பெருமாள்
அடிகளைப் பணியாமல் – அங்கே
அனத்தமாய்ப் பெண்ணுருவாய் எனக்கெதிரே 1

வந்தவ ளழகைக்கண்டேன் – கண்டு
மனப்பயித்தி யங்கொண்டேன் மயக்கங்கொண்டேன்
சிந்தனை யுளறிவிட்டேன் – அவள்
செண்டுமுலை யைக்கண்டு தெண்டனிட்டேன் 2

நானுனக் கடிமையென்றேன் – நீயென்
னாச்சியென் றேதலை [1]சாச்சுநின்றேன்
சீனிசர்க்கரை யோடி – நீதான்
தேவரம்பை யோரதி தேவியோடி 3

என்னாவி பதறுதடி – என்னை
இரட்சியடி நீயென் [2]துரட்சியடி
உன்னாணை பொய்யல்லடி – நீசொன்ன
ஊழியஞ் செய்கிறநா னேழையடி 4

கொஞ்சநே ரத்துக்குநீ – யிருதனக்
குடத்தையு மென்னிடத்திற் கொடுத்துவைத்தால்
எஞ்சரீரம் முழுதும் – உனக்
கெழுதித் தருகிறேனிப் பொழுதிலென்றேன் 5

பஞ்சடி பெயர்த்தாளே – நடை
பாவாடை விரித்தேனென் மேலாடையை
மஞ்சமீ தினிலிருந்தாள் – நான்
வணங்கிக்கை கட்டிக்கிட்ட வணங்கிநின்றேன் 6

**கடல்விழிதுயில் பெருமாள்** – பாற்கடலிடல் பள்ளிகொண்டுள்ள திருமால். **செம்பொன்** – சிறந்த பொன். **அடி** – பாதம். **அனத்தம்** – தீங்கு. **சிந்தனை** – எண்ணம். **உளறி** – தடுமாறிப் பேசி.

**செண்டு** – பந்து. **தெண்டன்** – வணக்கம். **ஆச்சி** – பத்தினி. **சாச்சு** – சாய்த்து. **சீனி** – சர்க்கரை. **தேவரம்பை** – இரம்பை தேவருலகப் பெண்டிருள் ஒருத்தி. **ரதிதேவி** – மன்மதனின் மனைவி. **ஆவி** – உயிர். **பதறுதல்** – முன்பின் ஆராயாமல் விரைவுபடுதல். **இரட்சி** – காப்பாற்று. **துரட்சி** – துரைச்சி – தலைவி. **ஆணை** – கட்டளை. **ஊழியம்** – தொண்டு, வேலை. **எஞ்சரீரம்** – என் உடல். **பஞ்சடி** – பஞ்சு போன்ற பாதம். **பெயர்த்தாள்** – நடந்தாள். **மஞ்சம்** – கட்டில்.

பா.வே : 1. சாய்த்து நின்றேன். 2. துரைச்சியடி.

**The enamoured Cōracūra<u>n</u> waxes eloquent on the beauty of the *tāci***

Instead of worshipping the feet
Of the **Teyvaccilaiperumāḷ** crafted in crimson gold,
Of that **Perumāḷ** who doth slumber in ***Pāṟkaṭal***[1]
I did look at the *tāci* young and beautiful
Who was an embodiment of evil ventable
I did become dazed and infatuated
And prattled my thoughts in a falter
On seeing her breasts bouquet like
I surrendered at her feet
'I am thy slave' said I bowing my head
Thou art my *ācci*[2] for sure'
Are you sugar so sweet
Or the **Rampai**[3] divine or **Ratitēvi**[4]?
So excited am I in my life and soul
Thou art my boss, I wear by thee,
I shall abide by directions thine,
Honestly without fail in service humble
Just a poor person am I in that regard.
If only you give me thy potlike breasts both
For a while to keep,
I shall pledge in writing now itself
My body entire for service thine.
She walked ever so gently with her feet soft
I did lay my garment as a carpet
For her to walk
As she did sit on the bed
I did stand before her with hands folded
And bowing in reverence as well.

1. ***Pāṟkaṭal*** – a legendary ocean of milk where **Tirumāl** is supposed to lie on his snakebed
2. ***Ācci*** – boss or mistress
3. **Rampai** – heavenly damsel of great beauty.
4. **Ratitēvi** -- wife of **Maṉmataṉ** the god of love she is noted for her ravishing beauty.

**(சோரசூரன் தாசியுடன் மகிழ்ந்திருத்தல்)**

கடைக்கண்ணாற் பார்த்துக்கொண்டாள் – மனம்
களித்துக்கொண்டாள் கிட்ட விழுத்துக்கொண்டாள்
மடியிலே வைத்துக்கொண்டாள் – யானை
மத்தகங்க ளைக்கொண்டு குத்தவிட்டாள் 7

முடித்ததன் குழற்பூவை – எனக்கு
முடித்தெந்தன் உயிரையென் னிடத்திற்தந்தாள்
............ ..................... ...........................
................ ........................ ........................ 8

கலவைச் சந்தனம்பூசிச் – சுருள்
கடித்துத்தந் தாள்இசை [1]படித்துத்தந்தாள்
இலகிய விதழைத் தந்தாள் – அந்த
இடத்தைத்தந் தாள்கள் குடத்தைத்தந்தாள் 9

அங்கதே சத்தினிற்போய் – மதன்.
அரண்மனை யைத்திருடி வரநினைந்தேன்
கொங்கை என்வசமாக்கி – அங்கே
குதிகொண்டு [2]கனிவாய முதையுண்டு 10

கலிங்கத்தை ஒதுக்கிவிட்டு – இடைக்
காட்டில்வந் தாளடி மேட்டில்நின்றேன்
வலம்புரி முழக்கங்கண்டு – இரு
[3]வாழையூடே பதுங்கிக் கீழிருந்து 11

கன்னத்திற் கன்னம்வைத்தேன் – அந்தக்
கட்டித்தி ரவியத்தைக் கட்டிக்கொண்டேன்

மின்னும்மன் மதக்களவில் – நான்
வீறுகொண் டதைக்கண்டன் னேரமவள் 12

சன்னதம் போற்குனுகி – இதுநல்ல
சமையம் விடாதேடா சாமியென்றாள்
என்னிலுங் கள்ளியவள் – என்னை
ஏவலாளாய்க் கொள்ள வெழிலெடுத்தாள் 13

உபாதி செய்யத்தொடுத்தாள் – காதில்
ஓலையசைய முத்து மாலையசைய
குபீலென்று புளகமெழ – குகுகுகு
குகுகென்று புட்குர லொலிப்ப 14

இருவிழி மேற்சொருக – நெத்திக்
கோர்வையாய் முத்து முத்தாய் வேர்வையூர
அரைவடங் கலகலெனக் – குழல்
அவிழ்ந்துகூ டாரம்போற் கவிழ்ந்துகொள்ள 15

அசைந்தெழுந் துன்னியுன்னி – அவட்
கடவுசெய் மன்மத நடனத்திலே
இசைந்திடுந் தாளத்தொனி – கேட்டேன்
இருசெவி குளிர்ந்ததத் தருணத்திலே 16

கொங்கைச் சுமைகனத்து – அவள்இடைக்
கொடியுந் துவளத்தாங்க முடியாமல்
அங்கத்தின் மேற்சாய்ந்தாள் – நானும்
ஆனந்தக் கடலுக்கு ளாழ்ந்தேனே 17

மேனியி ரண்டுமொன்றாய் – ஒரு
விடையமுந் தெரியாமல் வெகுநேரம்
ஆனைகண்டவர் கதைபோல் – அரண்டு
ஆகமும் பரவச மாகியதே. 18

**களித்து** – மகிழ்ந்து. **குழற்பூ** – கூந்தலில் சூடியிருக்கும் மலர். **கலவைச் சந்தனம்** – மணப்பண்டங்கள் சேர்ந்த சந்தனம். **சுருள்** – வெற்றிலைச் சுருள். **இசை** – பாட்டு. இலகிய – தணிவான. **இதழ்** – உதடு. **அங்கம்** – உடல். **மதன்** – மன்மதன். **கொங்கை** – முலை. **கலிங்கம்** – ஆடை. ஒரு தேசம். **கன்னம்** – கன்னம் என்னும் உறுப்பு, கன்னக்கோலால் இட்டதுளை என்னும் இரண்டு பொருள் தரும். கட்டித்திரவியம் என்றது வேசையையும் குறித்தது. **வீறு** – மிகுதி. **சன்னதம்** – ஆவேசம். **குனுகி** – கொஞ்சிப்பேசி. **உபாதி** – வேதனை. **நெத்தி** – நெற்றி. **வேர்வை** – வியர்வை. **அரைவடம்** – இடையணி. **குழல்** – தலைமுடி. **தொனி** – ஓசை. **தருணம்** – சமயம் நேரம். **சுமைகனத்து** – பாரம்அதிகமாகி. **துவள** – துவண்டுவிழ. **அங்கம்** – உடல். **விடையம்** – விஷயம். **ஆனை** – யானை. **ஆகம்** – உடல். **பரவசம்** – தன்வசம் இல்லாமை.

**சு.சொ:** 3. வாளையுடே பதுங்கிக் கீளிருந்து.
**பா.வே** : 1. படித்துகந்தாள் 2. கனிவாய் மதுவையுண்டு.

## Cōracūran joyous in the company of the *tāci*

She looked at me from the corner of her eyes,
Felt happy in her mind
And pulled me towards her.
Placing me on her lap
And made her breasts like elephantine ***mattakam***[1]
Press me and pierce
With the flowers worn on her locks
She adorned me and acted
As if she pledged her very life to me alone.
Smearing mixed sandal paste on person mine
She did hand me a roll of betel leaves and nuts to chew
After biting it herself a little,
She did offer her lips lovely too
At such a moment so ecstatic
I did plan to go over to **Ańkatēcam**[2] even
To steal the palace of **Manmatan**[3] himself
With her breasts at my disposal
I did happily taste that nectar divine.

I then did press my cheek (*Kannam*) against hers
And hugged that treasure solid
(In the art of ***Kannam***[4] as a burglar

was I not an expert?)
Then as I showed virility mine
In the ***manmatakkalai***[5] of sexual acts all
She did become frenzied in orgasm hers
And fondled me but endearingly
'This is a moment so fine
Do not stop, do proceed' she said
Wilier than the wily one that I am
She hath decided to enslave me by beauty hers.

With her earrolls and pearlnecklace moving
My pleasure reaching its zenith
A Cuckoo's notes sounding somewhere in orchestration
Her eyes, both rolling upwards in a trance
With drops of sweat like pearls on her forehead
And the chain on her waist jingling
Her tresses falling and covering her like a tent
Thus was our **Manmata** act performed
Rising and falling alternately in unison perfect
It was music to my ears indeed
To hear this rhythmic dance of ours in love.
Then with her breasts becoming heavy and stiff
And her creeper like waist unable to bear that weight,
She leaned on me for support
And I did swim in an ocean of delight
The bodies both of ours became one
Unaware of what transpired for long
In the episode of the blindmen's encounter
With an elephant.
Thus was ecstatic the bodily pleasure then.

1. *mattakam* – the forehead of an elephant.
2. **Aṅkatēcam** – One of the country of **Bharatam** in olden days. The other meaning body.
3. **Manmatan** – a god of love.
4. *kannam* – burglary; the word also means 'cheek'. The word is used as a Pun here.
5. *Manmatakkalai* – the art of love and sex.

### (தாசியின் கபடப் பேச்சு)

பரவசந் தெளிந்தெழுந்து – முகம்
பார்த்திருந்தே னந்தக் கூத்திமகள்
துரையேநா னிதுவரையி – லிந்தச்
சுகங்கண்ட தில்லையென மகிழ்ந்துகொண்டாள். 19

அண்டையை விட்டகலாள் – நமக்கு
ஆவியொன் றுடலிரண் டாகுமென்றாள்
மண்டைதொட் டாணையிட்டாள் – இனி
மறுமுகம் பாரேனென் றுறுதிசொன்னாள். 20

கொஞ்சிக்கொஞ்சி யுபசரித்தாள் – அந்தக்
கும்பத்துநீ ரங்கத்துக் காகுமென்ற கதைபோல்
கெஞ்சிக்கெஞ்சி [1]நயந்துகொண்டாள் – அவள்
கிண்ணிமா [2]றாட்டத்தை உண்மையெனக் கொண்டு 21

**கூத்திமகள்** – வேசைமகள். **அண்டை** – பக்கம். **ஆவி** – உயிர். **மண்டை** – தலை.

**சு.சொ** : 1. ராட்டத்தை
**பா.வே:** 1. நடந்துகொண்டாள்

## The glib talk of the cunning *Tāci*

After the hangover of my lustful ecstasy cleared
As I was looking at her face
That ***Kūttimakaḷ*** did remark joyously
'Oh! Lord never have I had pleasure such
As I had with you today.'

Never did she leave me a whit
'We are both one despite our bodies twain'
She swore thus touching my head
"I won't look at anyone else" she promised.
She did attend on me in fondling hospitality

Always in soft pleading did she speak
With her breasts cuplike swinging but earnestly.

1. ***Kūttimakaḷ*** - daughter of a prostitute.

(தாசி பணம் பறித்தல்)

பலநாளு மிப்படியே – பாலை
பழுக்குமென் றெண்ணிச் செழித்திருந்தேன்
சிலதுநா ளிருக்கையிலே – வீட்டுச்
செலவுக்கென் றும்பூசுங் கலவைக்கென்றும் 22

சவ்வாது புனுகுக்கென்றும் – பட்டுச்
சேலைக்கென் றும்தங்க வோலைக்கென்றும்
இவ்வாறு வாங்கிக்கொண்டாள் – அவள்
இருகையும் போறாது பொருள்கொள்ளவே 23

**பாலை** – ஒரு மரம். **கலவை** – சந்தனம். **சவ்வாது, புனுகு** – வாசனைப் பொருட்கள்.

**The *tāci* fleeces Cōracūran**

It was such routine for days many that followed
I was waiting for the ***pālai***[1] tree to yield its fruits
But in a few days,
Showing her true colours she started fleecing me.
For money towards her household expenses.
Demanding payment for the cosmetic sandal to be applied
Perfumes to be smeared and for the silk sari besides,

And for the gold ***ōlai*** too,
Thus did she take money from me
In such a loot more than her hands both
Could collect or hold.

1. ***Pālai*** – a tree which grows in arsid regions.

(சோரசூரன் பொருள்களை இழத்தல்)

கொடுக்க கொடுக்கச்சும்மா – என்னைக்
கொழுந்துகிள்ளி னாளந்தக் குளிர்ந்தகொல்லி
உடுத்தின துணிமுதலாய்க் – கொடுத்து
ஓட்டாண்டி யாகினேன் கேட்டீர்களோ! 24

ஓட்டாண்டி – பிச்சைக்காரன்.

## Cōracūraṉ loses all his belongings

As I did thus pay whatever she demanded
That cool murderess did fleece me
As if nipping a tender shoot
Parted with even the garments or person mine
I did become a pauper
Oh! folk, do listen to my sad tale.

(தாசி வெறுத்து ஒதுக்குதல்)

வெறுங்கை முழமிடுமோ – சுவை
மென்றபின் சக்கைத்துப்பி விடுவதுபோல்
உறங்குதல் தொழிலானாள் – கிட்ட
ஒண்டவொட்டாள் முகஞ் சுண்டலுற்றாள் 25

வெடுவெடெனத் தொடுத்தாள் – அங்கே
வேறொருவ னைக்கூடிச் சேரலுற்றாள்
புடைநின்ற தாய்க்கிழவி – நோஞ்சற்
பூனைபோ லிருந்தவள் புலியானாள் 26

சக்கை – கோது. புடைநின்ற – பக்கத்திலிருந்த. நோஞ்சற் பூனை – மெலிந்த பூனை.

## The *tāci* spurns Cōracūraṉ's company

Of what avail are empty hands for anyone,
As one throws away the *cakkai*[1]
After the sugarcane is munched and squeezed

The *tāci* did ignore me but gradually,
She did go to sleep not allowing me near her,
Frowned she in her face and spoke harshly
She even slept with another man
With the ***tāykkiḻavi*** in support nearby for treachery this
That old hag who looked like a cat emaciated
Did become a tigress in temperament hers.

1. ***Cakkai*** – fruit or sugarcane waste thrown away after squeezing.

**(தாசி, வீட்டை விட்டுத் துரத்துதல்)**

வெள்ளாட்டிச் சிறுக்கியரெல்லாஞ் – சும்மா
வேட்டைநாய் களைப்போலே விழத்தொடுத்தார்
விள்ளாத வார்த்தையுண்டோ – பல
விதமாய்வெளி யேதள்ளிக் கதவடைத்தார் 27

மனதங்கே சிக்கிக்கோண்டு – வர
மாட்டாமல் அவளுமோர் தாட்டாளனுந்
தினவுகள் தீர்க்கையிலே – அந்தக்
சீமாட்டி யைநினைத் தேமாறினேன் 28

சத்தியம் பலியாதோ – தெய்வம்
சாட்சியன் றோவது பேட்சையுண்டோ
நித்திரை வரவில்லையே – அய்யோ
நெஞ்சம் பதறுதினி யென்னசெய்வேன் 29

உடைந்தசங் கூதாதே – யினி
யொட்டுமோ பச்சைமண்ணுஞ் சுட்டமண்ணும்
அடங்கலுந் திருடிக்கொண் – டிவட்
கறிவுவரச் செய்தப்பாற் பரிவோமென்றே 30

**வெள்ளாட்டிச் சிறுக்கி** – பணிப்பெண்கள். **விள்ளாத** – சொல்லாத. **தேட்டாளன்** – சம்பாத்தியமிக்கவன். **சத்தியம்** – உண்மை. **பலியாதோ** – பயனாகாதோ. **நித்திரை** – தூக்கம். **அடங்கலும்** – முழுதும். **பரிவோம்** – செல்வோம்.

### The *tāci* drives Cōracūra<u>n</u> away from her house

The maids there like bitches, varitable,
They set them upon me like hounds to pounce
Hurled abuses at me spaning none of them
Thus did they push me out.
And slammed the doors shut
With my mind slicking to the *tāci*'s place
And unable to leave
I did stand there cheated totally
When she kept company inside the house
With a rich man who arrived there
Quenching his thirst carnal.
"Will truth never prevail?
Is not God a witness to this outrage?
I just cannot sleep, tormented am I
Lo! What I shall I do hereafter?"
A broken conch cannot be blown,
Will the wet and baked clay join ever?
Deciding to teach her a lesson
By stealing her belongings all and leave only then.

(தாசியின் வீட்டில் சோரசூரன் திருடுதல்)

நித்திரை மயக்கத்திலே – மெள்ள
நெம்பினேன் கதவையோர் கம்புகொண்டு
முத்திரை வைத்தபெட்டி – பதி
மூன்றெடுத் தேனதைக் கீன்றுடைத்தேன் 31

தலைமுறை தலைமுறையாய் – அவள்
’தனத்தைக் கொடுத்துத் தேடுந் தனத்தையெல்லாம்
புலனறிந் தெடுத்துக்கொண்டேன் – சண்டை
பொருதினவ ளைக்கந்தை பொருதவிட்டேன் 32

**நித்திரை** – தூக்கம். **நெம்பினேன்** – தூக்கினேன். **முத்திரை** – அடையாளம். **கம்பு** – கொம்பு. **கீன்று** – பிளந்து. **தனம்** – செல்வம், முலை **பொருது** – போர் செய்து. **கந்தை** – கிழிந்த துணி.

## Cōracūra<u>n</u> steals at the *tāci*'s house

With all the inmates in her house fast asleep as in a stupor,
With a stick, as a lever I lifted open the door,
Sealed boxes, thirteen did I remove from there,
And broke them open
The wealth which they had amassed
Over generations in succession
By luring folk with breasts theirs,
I identified and took it all away.
I did make her who fought with me foully
Change from riches to rags in penury.

**(சோரசூரன் சிவகிரிமலையில் பொருள்களைப் புதைத்து வைத்தல்)**

பறிந்தே னொருகடலில் – தென்
 பாங்குகள் சிந்துகள் படித்துக்கொண்டேன்
எறிந்தகல் விழுமுன்னமே – நடந்து
 இருகாதம் வந்தேன்சிவ கிரிமலையில் 33

மலைவளங் கண்டுடனே – நானந்த
 வஞ்சகியை நினைத்தேன் நெஞ்சகத்தில்
பலபல யோசனையாய் – [1]நேத்துப்
 பஞ்சணை யிலிருந்து கொஞ்சினதும் 34

இப்போதிங் கிருப்பதையு – மெண்ணி
 ஏக்கமுற் றேன்பாவி தாய்க்கிழவி
சற்பனை செய்தாளே – என்னைத்
 தனித்துத் துரத்தினாளே சண்டாளி 35

எவனுட னிருக்கிறாளோ – அவன்
 என்னைப்போ லேரமித் திருப்பானே
அவனைக் கெடுப்பேனென்று – பொன்னை
 அங்கனே புதைத்துவைத் திங்கனேவந்தேன் 36

**பறிந்தேன்** – விரைந்து சென்றேன். **கடிவு** – இடுக்கு வழி. **தென்பாங்கு** – தெம்மாங்கு நாட்டுப்புற இசைப்பாட்டு வகை. **சிவகிரி மலை** – நெல்லை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். **இருகாதம்** – இரண்டு காதம் பதினைந்து நாழிகைவழி. **வஞ்சகி** – ஏமாற்றுக்காரி. நெஞ்சகம். – மனம். **சற்பனை** – வஞ்சகம். **ஒருமித்து** – ஒன்று சேர்ந்து. **அங்கனே** – அந்த இடத்திலே.

பா.வே : 1. நேற்று.

## Cōracūraṉ hides the loot in Civakiri[1] hills

Walked I in a narrow route shortcut
Singing ***temmāṅku***[2] and ***cintu***[3] songs
So quickly did I walk a good twenty miles
As if it were just a stone's throw away
Thus did I reach the **Civakiri** hills.
I feasted my eyes on the bounty of the mountain
But in my restless longing mind could I think
Only of that deceitful wench and my plight pitiable
Remembered how pampered and fondled I had been
In a softbed the previous night
And my present sojourn rocky in the hill
'The vicious old *tāykkiḻavi*, that *caṇṭāḷi*[4] ventable,
She has driven me out but treacherously,'
'Whom does the *tāci* sleep with now ?
will he be as amenable as I was with her?
I shall go there and hurt him for sure
Thus did I contemplate in my mind
And concealed the wealth looted from the ***Tāci***
Buried it at a place in the **Civakiri** hill
Then I did return to the *tāci*'s place.

1. **Civakiri** – a Jamin village in **Tirunelvēli** district in **Tamilnadu**.
2. ***Temmāṅku*** – folk song set to music.
3 *Cintu* – a category of musical verse in Tamil.
4 *Caṇṭāḷi* – a vicious woman.

### (சோரசூரன் மீண்டும் தாசியின் இல்லம் வருதல்)

தேவடியாள் வீட்டு – வாசல்
திண்ணையி லேபடுத்துக் கண்ணயர்ந்தேன்
தாய்விடிந் தெழுந்திருந்தாள் – மகள்
[1]தானுமறிந்தாள் கொள்ளை போனதறிந்தாள் 37

கூக்குரல் வைத்தழுதாள் – ஊர்க்
கூட்டினாள் நானது கேட்டெழுந்தேன்
தாய்க்கிழ வியையழைத்து – உந்தன்
தனமெல்லாங் கொண்டுபோன வினமறிவேன் 38

**தேவடியாள்** – தாசி. **கொள்ளை** – திருட்டு.
**பா.வே** : 1. தானுமெழுந்தாள்.

### Cōracūraṉ comes back to the *tāci*'s house

I had a nap for a while at the pial
Of the ***tāci***'s house,
It dawned then and the old mother wokeup first
And her daughter too thereafter.
They did realize then the burglary in their house
The ***tāci*** wailed loudly over the loss
The folk entire of that town she summoned
To lament over what she had lost
I did wakeup on hearing their cries and clamour
And told the ***t āykkiḻavi*** that I knew full well
Who had stolen their wealth and how.

### (பொருட்களை மீட்டுத் தருவதாகக் கூறுதல்)

மடக்கொடி யுன்மகட்கு – நேத்து
மாப்பிள்ளை யாய்வந்தவ னார்ப்பரிந்தான்
கடைத்தலையி லேகிடந்தேன் – அந்தக்
காட்சிகண் டேனென்று சாட்சிசொன்னேன் 39

தானினி விடுவாளோ – போய்த்
    தலைப்பட்டாள் அவனிந்த விலச்சைக்கஞ்சிப்
போனவிடந் தெரியாமல் – ஓடிப்
    போய்விட்டான் நான்சொந்த மாய்விட்டேன் 40

தனித்தவள் என்னைமருவிக் – கூடிச்
    [1]சருவினாள் நானுந்தன் பொருளைத்தந்தால்
*எனக்கென்ன தருவாயென்றேன்* – அதற்கு
    என்னுட லுமதென்றாள் மின்னனையாள் 41

**கடைத்தலை** – பின்புற வாயில். **இலச்சைக் கஞ்சி** – வெட்கம் நாணத்திற்குப் பயந்து. **மருவி** – கலந்து, சேர்ந்து. **சருவினாள்** – கொஞ்சிக் குலாவினாள்.

**பா.வே** : 1. தழுவினாள்.

## Cōracūraṉ assures recoery of the stolen articles

'The fellow who was here last night
As your winsome daughter's ***māppiḷḷai***[1] then
I saw him leave here
As I lay in the backyard at that time'
As I did tender evidence thus,
She said that the fellow had run away
Feeling ashamed to be seen at a ***tāci***'s place
And left for some place unknown
I have now become close to them again
The ***tāci*** did come near me and caress
Hugging me and fondling as well
I asked, her what she would give me
If I retriered her goods stolen
She replied that she would dedicate
Her body entire to me solely

*1. māppiḷḷai* – The term in this context means a bedmate.

(புதைத்து வைத்த பொருள் திருட்டுப் போதல்)

கூடவா வென்றழைத்தேன் – வந்தாள்
கூட்டிவந்தேன் அந்தக் காட்டினிலே
மூடிவைத் ததைக்காணேன் – நின்று
மூக்கிலே விரலைவைத் தாக்கிரமித்தேன் 42

[1]தோற்பாடிப் பயலெவனோ – அந்தத்
துப்புத்தெ ரிந்தல்லவோ கைப்பற்றினான்
தாய்ப்பாலில் ருசிபார்த்தான் – எங்கே
தப்பினா னாகட்டு மெப்படியும். 43

**மின்னனையாள்** – மின்னலைப் போன்றவள். மூக்கில் விரல்வைத்தல் என்பது புதுமை கண்டவிடத்து நிகழ்வதோர் மெய்ப்பாடு. **ஆக்கிரமித்தேன்** – வஞ்சினங்கூறினேன். **தோப்பாடிப்பயல்** – துட்டன். பேடிப்பயல். **துப்பு** – உளவு, உளவடையாளம். **ருசி** – சுவை.

பா.வே : 1. தோப்பாடி

## The buried boxes missing from the hill

I did ask her to follow me
To the forest near the hill
Where I had hidden the loot
But lo, the buried loot was not there
Some scoundrel who had sniffed the treasure
Had located and taken it away
In surprise and anger great I did swear
I won't spare that coward anyway
As if tasting mother's milk to test it,
That fellow has stolen from me,
A greater thief than myself
Where can he escape from me ?

(சோரசூரன் எட்டுநாளில் மீட்டுத்தருவதாக வாக்களித்தல்)

காலடி தெரியாதோ – அந்தக்
கள்ளனுக் கினியெங்கே துள்ளாட்டம்

நாலுபங் கதிகம்தந்து – வந்து
நம்பினே னென்றுவீழ்ந்து கும்பிட்டாக்கால் 44

விட்டுவிடு வேனவனை – யல்லாமல்
வேரோடுங் களையேனோ சோரசூரன்
எட்டுநாள் தவணைவைத்து – அங்கே
என்பிறகே வந்த கொம்பனையை 45

ஊரோடும் போடியென்றேன் – அவள்
உனைப்பிரிந் தரைக்கணந்[1]தரிக் கேனென்றாள்
வாராதி ரேனென்னவே – அவள்
வட்டத் தனத்திலாணை யிட்டுக்கொடுத்தேன் 46

துணையோடுங் கூட்டிவிட்டேன் – அந்தச்
சுகத்தைப் பிரிந்தவர்கள் சகிப்பார்களோ
துணிவுற்ற கல்நெஞ்சன்நான் – இந்தத்
துட்டப்பயல் தடத்தைத் தொட்டுநடந்தேன்.
– தந்தானத் தானானா. 47

**காலடி** – பாதஅடையாளம். **களையேனோ** – நீக்க பாட்டேனோ. **தவணை** – கெடு. **கொம்பனை** – கொம்பு போல் ஒல்குந் தன்மையுள்ள பெண். **அரைக்கணம்** – அரைநொடி. **தரியேன்** – இருக்க மாட்டேன். **வாராதிரேனென** – வாராமல் இருக்க மாட்டேனென்று, அதாவது மீண்டும் வருவேன் என்பதை உணர்த்திற்று. **சுகம்** – கிளி. இங்கு பரத்தை. **தடம்** – வழி. **தொட்டு** – தொடர்ந்து.

**பா.வே** : 1. தரியேனென்றாள்.

## Cōracūraṉ promises recovery in eight days

Cannot his footprints be traced ?
That thief's revelry will be shortlived
If he offers me a compensation four fold
Of what he has taken away
And prostrates before me to make amend,
Then shall I spare him and forgive
Otherwise I shall wipe him out but totally
I did then set a deadline of days eight
To recover the loot,

I asked the ***tāci*** to go back to her place
As she pleaded with me not to part from her
I swore by her shapely breasts rounded
That I would certainly come back
And be reunited with her
Then did I send her home with a companion proper,
Parting with pleasure such is not easy for any
But stony and strongwilled that I was
I did follow the footprints of the scoundrel.

**(சோரசூரன், கள்ளனைத் தேடி நடத்தல்)**
**விருத்தம்**

9. மானனையாள் பிரிந்தேக வென்மனமுங் கண்ணுமவள்
   மருங்கே போக
நானவனைப் பின்துடர்ந்தே னென்னைப்போற் கன்னெஞ்ச
   னெங்கு முண்டோ
கானிலொரு காதமொரு பதின்காத வழியாகக்
   கடந்து சென்றேன்
மேனியைநா னிங்கிழுக்க மின்னாசை யங்கிழுக்க
   மேவி னேனே.

**மானனையாள்** – மானைப் போன்றவள். **பிரிந்தேக** – பிரிந்து செல்ல. **அவள் மருங்கே** – அவளிடத்தே. **எங்கு முண்டோ** – எங்கேயாகிலும் உண்டோ. **கானில்** – காட்டில். **காதம்** – ஏழரை நாழிகை நடந்து செல்லும் தூரம். அதாவது பத்துமைல் தொலைவு. **மேனி** – உடல். **மின்னாசை** – மின்னலையொத்த பெண்ணின் மேல் உள்ள ஆசை. **மேவினேனே** – சென்றேனே.

**Cōracūra<u>n</u> in pursuit of the thief**

With the doelike damsel leaving me for her place
My mind and eyes did follow her indeed
But heartless and hardened as I was
I followed the footprints of the thief
In the forest did I walk ***kātam***[1] many
With my mind following the damsel lustrous as lightning
I pushed my feet in pursuit of the stealer.

*1. Kātam* – a distance of ten miles.

**(கள்ளனின் தடம்கண்டு, அவனைப் பிடித்தல்)**

**தரு**

10. இந்திரை சேர்பெருமான் – புல்லாணி
எம்பெருமான் சுரர் தம்பெருமான்
சுந்தரத் திருவடியைத் – தேடாமல்
தொடர்ந்தந்தக் கள்ளப்பயல் தடந்தேடி 1

தரையெங்குஞ் [1]சுத்திச்சுத்தி – நட்டநடுச்
சாலைக்குள் ளேதிருநெல் வேலிக்கிப்பால்
வருகையிற் பிடித்துக்கொண்டேன் – அவனெந்தன்
மச்சான்மக னென்னையப் புச்சியென்றான். 2

**இந்திரை** – திருமகள், இலக்குமி. **சேர்பெருமான்** – சேருகின்ற திருமால். **சுரர்** – தேவர். **சுந்தரத் திருவடி** – அழகு பொருந்திய திருப்பாதம். **தடந்தேடி** – வழிதேடி. **திருநெல்வேலி** – பாண்டிநாட்டில் உள்ள ஓர் தலம்.

பா.வே : 1. சுற்றிச் சுற்றி.

## Cōracūraṉ catched the thief

Instead of tracing the feet elegant
Of our Lord of **Tiruppullāṇi** who is **Tirumāl**
Who doth expouse **Intirai**[1]
And who is the chief of **Curar** besides,
I did follow the foul feet of the thief
Roaming round and round for long
At long last in the middle of a road
Before **Tirunelvēli**[2] I did spot and catch him
It turned out that he was the son
Of my own ***maccāṉ***[3]
He called me ***appucci***[4] in relationship close.

**1. Intirai** – **Ilakkumi** or **Tirumakaḷ** consort of **Tirumāl** and goddess of wealth
**2.Tirunelvēli** – a town in Southern Tamilnadu
**3..*maccāṉ*** -- nephew or brother-in-law
4..***appucci*** -- uncle.

### (பாதிப் பொருளைப் பெறுதல்)

என்கோபம் போய்விட்டது – அவனங்கே
எடுத்தபொரு ளிற்பாதி கொடுத்தவனை
அங்கேநின் றனுப்பிவிட்டேன் – [1]என்னுட
ஆசைக்கண் ணாட்டியவ் வேசைக்கிப்பொன் 3

இல்லாமல் வரப்போமோ – இங்கேயோர்
இரவுகண் விழித்தப்பாற் [2]பரிவோமென்றே
நெல்வேலி யூரில்வந்தேன் – வரவுமோர்
நெறிகொண்டேன் பாவங்க ளுருக்கொண்டாற்போல் 4

**வேசை** – வேசி. **பரிவம்** – செல்லுவோம். **நெல்வேலி** – திருநேல்வேலி என்னும் ஊர். **நெறி** – வழி.

**பா.வே** : 1. என்னுடைய 2. பரிவமென்றே.

### Recovery of half of the loot

My anger vanished and I did give him
Half of the loot and sent him away
Happy I was in the thought of going back
To my beloved ***vēcai*** with the recovered prosperty
I decided to stay for just one night
At **Tirunelvēli** and then proceed
It was then as my fate would have it
A path of sins entire and enormous
Did tempt me into a trap of vice.

### (சோரசூரன் கள்ளர்களுடன் சேர்தல்)

தவசிகள் வேடங்கொண்டு – அவ்வூரிற்
சஞ்சரித் திருக்கிறார் அஞ்சுகள்ளர்
அவர்களைக் கண்டுடனே – நான்மன
தடங்கா மகிழ்ச்சிகொண்டேன் கெடுங்காலம் 5

அருந்தொழிற் படித்ததையும் – என்னுட
ஆண்மையையு மவர்கட்குக் காண்பித்துப்

பெருங்கள விடநினைந்தேன் – தெய்வமென்
பிடரியிற் சிரிக்கிற இடரறியேன் 6

அஞ்சனங் கையிற்பார்த்தேன் – அவ்வூர்
[1]ஆத்துக்குள் ளேமூங்கிற் போத்துக்குள்ளே
[2]பஞ்சலோ கத்தைவெட்டிப் – படிகட்டிப்
பிடிபட்ட போக்கொன்று பிடிபட்டது 7

கூட்டாளிக் கள்ளருடன் – ஒருமிக்கக்
கும்பாகப் புறப்பட்டுக் கெம்பாமலே
தாட்டீக மாய்நடந்து – நட்டநடுச்
சாமத்தி லேயந்தப் பூமியிற்போய்த் 8

திசைகட்டிப் பெலிகொடுத்து – அதைவெட்டித்
திருத்திப்பொருத் துக்கல்லைப் பிரித்தெடுத்து
அசுகைகொள் கள்ளர்களை – நீரிங்கே
ஆட்பார்த்திரு மென்றொரு வாய்ப்பேச்சிலே 9

**தவசி** – சந்நியாசி. **சஞ்சரித்து** – நடமாடித் திரிந்து. **அஞ்சு** – ஐந்து. **ஆண்மை** – வீரம், திறமை. **பிடரி** – பின்கழுத்து. **இடர்** – துன்பம், வருத்தம். **அஞ்சனம்** – மை. **ஆத்து** – ஆற்று. **மூங்கிற் போத்து** – மூங்கில் கழி. **பஞ்சலோகம்** – பித்தளை, வெண்கலம், செம்பு, வெள்ளி, பொன் என்பவை. **பிடிபட்ட** – அகப்பட்ட, **போக்கு** – சுரங்கவழி. **கூட்டாளி** – நண்பன். **ஒருமிக்க** –ஒருசேர. **கும்பாக**– கும்பலாக, கூட்டமாக. **கெம்பாமல்** – சத்தம் செய்யாமல். **தாட்டிகமாய்** – துட்டத்ததனமாய். **பெலி கொடுத்து** – பலி கொடுத்து. **அசுகை** – அசூயை, பொறாமை. **ஆட்பார்த்திரு** – ஆள் பார்த்திரு.

**பா.வே** : 1. ஆற்றுக்குள்ளே 2. பஞ்சலோகத்தை விட்டு.

## Cōracūran joins a gang of thieves

Disguised as saints in that place (**Tirunelvēli**)
Five dacoits did wander there
On seeing them and their timecolours
I did feel elated indeed
Having learnt for long,
The art of stealing to perfection

And with my manly provers besides
I decided to stage a big loot in their company,
Unawares of the God laughing behind my back
Over the imminent harm to me
I peered into the ***añcaṉam*** prepared by me
And in that dark paste magical
I did locate a tunnel
With steps made of metals five
Amidst a cluster of bamboos on the riverbed
In the company of those gangsters five
Did I set forth to the site located
Silently walking without noise any
We reached the spot at dead of night
In a stance quite aggressive
Fixing the direction but properly
And performing the sacrifice due
I dug the earth there and removed the stonelid
Which covered the tunnel
Asking those ***kaḷḷar***[1] jealous to stand guard outside,
I did venture into the tunnel.

***kaḷḷar*** – thieves or burglars.

**(பூதத்துடன் சண்டையிடுதல்)**

போக்கினிற் துணிந்துசென்றேன் – அங்கொரு
பூதம்வந் ததட்டித்தென் மீதினிலே
வாக்குமந் திரத்தாலே – அதைமெள்ள
மறித்துக்கொண் டேனங்கே நிறுத்திக்கொண்டேன் 10

பேயைப்பேய் பிடிப்பதுண்டோ – நீயென்னைப்
பிடிக்கவந் தாயென்ன துடுக்கிதென்று
வாயை மடித்திறுக்கி – நானின்ற
வல்லமை கண்டது பல்லுக்கெஞ்சவே 11

இப்புறந் தள்ளிவிட்டேன் – நான்மட்டும்
ஏகமாய்த் துணிந்தப்பாற் போகையிலே

கொப்பரை கொப்பரையாய் – ஒருமிக்கக்
கோர்த்துத்தொங் கினதைக்கண் பார்த்துநின்றேன் 12

**பூதம்** – பேய் பிசாசு. **துடுக்கு** – துட்டத்தனம். **உறுக்கி** – அதட்டி. **வல்லமை** – வலிமை, திறன். **பல்லுக்கெஞ்ச** – மோவாய்க் கட்டையைப் பிடித்துக் கெஞ்ச. **ஏகமாய்** – தனியாய். **கொப்பரை** – நீர்வற்றிய நெற்றுத் தேங்காய். **ஒருமிக்க** – ஒன்றாகச் சேர.

## Fighting the demon at the tunnel

There at the tunnel was a demon
Which did short at me in scolding challenge
But I countered it with my incantations vocal
And halted its movement further
'can one demon haunt another of its kind?
What impertinence is this' I demanded.
Holding my pursed lips in a fold tight
On Seeing my stance so aggressive and strong
The demon pleaded with me for mercy
I did push the demon aside
And walked into the tunnel but boldly
I saw there hanging like dried coconuts in clusters
Ever so many articles in abundance rich.

### (பொருள்களைக் கண்டு திருடுதல்)

ஓருடம்பு ஈருடம்பாய் – வேசை
ஒண்டொடி தனங்களைக் கண்டதுபோல
பூரித்துப் புளகித்துப்போய் – அத்தனை
பொருளையும் வலம்வந்து சரணஞ்செய்தேன் 13

பேராசைக் களவில்லையே – என்வேசைப்
பெண்ணுக்கு வாய்த்ததென் றெண்ணிக்கொண்டேன்
ஆராமற் புகுந்தள்ளினேன் – நான் விழுந்து
அள்ளவும் அவ்வளவுங் கொள்ளித்தேளாய் 14

**ஒண்டொடி** – ஒண்மை + தொடி. ஒளி பொருந்திய வளையலை யணிந்த பெண். இங்கு தாசிப் பெண்ணைக் குறித்தது. **தனம்** – முலை. **பூரித்து** – பருத்து. **புளகித்து** – மகிழ்ச்சியுற்று. **வேசை** – பரத்தை. **ஆராமல்** – திருப்தியடையாமல். **கொள்ளித்தேள்** – கடுமையாகக் கொட்டும் தேள் வகை.

## Cōracūra<u>n</u> stealing the articles

As though I have seen the *vēcai's* breasts alluning
So enchanted was I on seeing such abundance
Elated and overjoyed did I become
I felt like having bloated doubtly in body mine
I went round the articles there but piously
And bowed before them in reverence earnest
There is no limit to one's greed
'My *vēcai* is lucky indeed to get all these' I thought
And grabbed them all in avarice mine.

**(விஷப் பூச்சிகள் தீண்டுதல்)**

நட்டுவாக் காலியுமாய் – பொய்த்துச்செந்
நாயெனப் [1]பிடுங்கித்தென் காயமெங்கும்
கொட்டினால் விஷம்விடுமோ – நான்குதித்த
கூத்தாட்டங் கண்டவர்க [2]ளாத்தார்களே 15

பெற்றவர் சகித்தாலும் – யென்வேசைப்
[3]பெண்டிசகிப் பாளோ வென்றுதுடித்தேன்
உற்றமருந் தில்லையே – யொன்றுங்கைக்
[4]குதவ வில்லை யேயென்ன விதிவசமோ 16

திருமங்கை யாழ்வார்போல் – பொருள்கொண்டு
திருப்பணி செய்தாலிக பரத்துக்குண்டே
பரிந்ததை நினையாமல் – வேசைப்பெண்
பாவிபேர் சொன்னதற்குப் பலனிதென்று 17

**நட்டுவாக்காலி** – தேன் போன்ற பெரிய பூச்சி. **செந்நாய்** – செந்நிறமுள்ள நாய் வகை. **காயம்** – உடல். **ஆற்றார்** – பொறுக்கமாட்டார். **சகித்தாலும்** – பொறுத்தாலும். **திருமங்கையாழ்வார் போல் பொருள் கொண்டு திருப்பணி செய்தால்** – திருமங்கையாழ்வார் வாலிபப்பருவத்தில் திருடராக இருந்து, கைப்பற்றிய பொருளைப் பின்பு கோயில் திருப்பணிக்குச்

செலவிட்டார் என்பது வரலாறு. **இகபரத்துக்கு** – இம்மைக்கும் மறுமைக்கும். **பரிந்து** – விரும்பி. **அதை** – திருப்பணி செய்தலை. வேசைப்பெண்ணாகிய பாவியின் பெயரை என்க.

பா.வே : 1. பிடிங்கிற்றென் 2. ளாற்றார்களே 3. பெண் சகிப்பாளோ வென்று துடித்துடித்தேன் 4.உதவியில்லை.

## Cōracūraṉ bitter by venomous insects

But lo! The things that I tried to take
All of them became venomous insects vicious
Such as scorpious and ***naṭṭuvākkāli*** [1]
They all did sting and bite me
Like a pack of wild dogs ferocious
Poisoned all over body mine without let up any
I did jump and leap in a dance of pain
Those who did see my plight
Would not endure that sight
Even if my parents may bear to see me thus
My beloved ***vēcai*** cannot bear it' I mused
Thus was I anguished without any medicine handy
I thought that it was my cruel fate
To suffer thus sans help any.
Had I like **Tirumaṅkaiyāḻvār**
Intended to offer my loot to render ***tiruppaṇi*** [2]
To **Tirumāl** and His shrines holy.
I would have attained bliss and salvation,
In ***ikam***[3] and ***param***[4] both for sure
Having erred in evil nature mine
To think of the ***vēcai*** instead of **Tirumāl**
I deserve this punishment indeed.

1. ***naṭṭuvākkāli*** – a large black scorpion.
2. ***tiruppaṇi*** – service to temples and devotees.
3. ***ikam*** – life on earth in murdane world.
4. ***param*** – the other world or heaven.

**(சோரசூரன் துன்பப்படுதல்)**

சாவது நிசமாகி – நினைவுகள்
தடுமாறி நானுயிர் விடுகையிலே

தேவடி யாளைநொந்தேன் – ஐயோபர
தேசியாய்ப் போனாயே தோசியென்றேன் 18

குறைவய தாயெழுதித் – தெய்வமிந்தக்
குகைக்குள்ளே சாகவோ வகுத்ததென்று
பருவதம் போல்விழுந்தேன் – என்னையந்தப்
பாதையிலே [1]மறித்துவந்தப் பூதம்வந்து 19

அதட்டினான் இவனென்றே – என்வாய்
அலகுதிரும்ப [2]விருரண் டறைகொடுத்து
உதைத்துதே யிடக்காலால் – வெளியிலே
உந்திக்கர ணம்போட்டு வந்துவிழுந்தேன் 20

**பரதேசி** – ஆண்டி சந்நியாசி. **தோசி** – பாவி. **வகுத்தது** – விதித்தது. **பருவதம்** – மலை. **வாயலகு** – வாய்ப்பல். **உந்திக்கரணம்** –குட்டிக் கரணம் அடித்தல்.

பா.வே : 1. மறித்த 2. விரண்டறைக்கொடுத்து.

## Cōracūra<u>n</u> in acute sufferings

With my death imminent and my senses faltering
I was sinking slowly and cursed the ***tāci***
'Thou hast become a ***paratēci***[1] now
you are a ***tōci***[2] for certain'
God has ordained me to die young perhaps.
And that too in a tunnel
I did fall like mountain there
The demon who did challenge my entry first
Arrived there to avenge its earlier defeat
Slapped my cheek so hard twice
Twisting my teeth inside the mouth
Kicked me too with its left foot
And I fell in a somersault outside the tunnel.

1. *paratēci* – a wandering beggar.
2. *tōci* – a sinner.

(கள்வர்களிடம் பொருள்களைப் பறிகொடுத்தல்)

எளியாரை யலக்கழித்தால் – தெய்வத்துக்கு
ஏற்குமோ வதுக்கது[1] கேட்குமல்லோ
கள்வர்க ளிதையறிந்தால் – [2]என்னுட
கைப்பொரு ளையுங்கொண்டு தப்பிவிட்டார். 21

**எளியார்** – ஏழையர். **அலக்கழித்தல்** – அலைக்கழித்தல்
**சு.சொ** : 1. கேள்குமல்லோ. **பா.வே** : 2. என்னுடைய.

## The thieves take away his belongings

Will God ever allow anyone
To harm the hapless folk poor ?
Won't God question misdeeds such ?
When the thieves came to know of plight mine
They escaped with my belongings all
That I left with them.

(அருளாளர் ஈஸ்வரயோகியின் ஆதரவு)

பேச்சுமூச்சில் லாமலங்கே – [1]செத்த
பிணமாய்க் கிடந்தவெனக் குணர்வுவர
[2]ஈஸ்வர யோகிவந்தார் – என்னைக்கண்டு
எழுப்பிவிட்டார்உயிர் பிழைத்தெழுந்தேன் 22

திருட்டினிப் போதுமென்றே – [3]அவருடண்
சேவடிக் காளாகி யேவல்செய்தேன்
அருட்கொரு பாத்திரமாய்ப் – பெருமையில்
ஆழ்ந்தவ ரிடத்திலே வாழ்ந்திருந்தேன்.
தந்தானத் தானான 23

**செத்த** – இறந்த. **ஈஸ்வரயோகி** – அருட் குணாளர் ஒருவர். **சேவடி** – சிவந்த அடி. **ஆளாகி** – ஆட்பட்டு. **ஏவல்** – பணி.

**சு.சொ** : 1. செற்ற 2. கீஸ்வர 3. அவரிணைச்.

## Isvara Yōki's arrival as a saviour

As I lay unconscious outside the tunnel
Like a corpse unable to move or speak
**Isvara Yōki** did arrive there
On seeing me he woke me up
And I did regain consciousness
In a fresh lease of life for sure.
He did advise me not to steal any longer,
Bound by his feet flowery
I served humbly that great saint of repute
Who did symbolize mercy and grace
In his person holy.

**(சோரசூரனின் கூற்று)**
**விருத்தம்**

11. குருவடியா னெனவொருநா ளிருக்கும் போது
குளிர்மலையா ளத்தரசன் குலங்க ளோடும்
கருவடிவச் சேதுவுக்கு வந்த வாறுங்
கனசேது பதியுடனே கலந்த வாறுந்
திருவடிராச் சியத்திருந்து யான்வந் தங்கே
திருடினதுங் காலொடுகை சிதைந்த வாறுந்
தருவடியிற் புல்லாணி மாய னென்னைத்
தடுத்தாட்கொண் டருளினதுஞ் சாற்று வேனே.

**குருவடியான் எனக்கொடு** – அருட்குணமுடைய ஆசிரியனாகிய ஈச்சுரயோகி யென்பவரால் அடியவன் என்று கொள்ளப்பட்டு. **மலையாளத்தரசன்** – சேர நாட்டரசன், அநந்த பன்ம நாபதாசன் **குலங்களோடு** – தம் சேனைப் பரிவாரங்களுடன். **கரு வடிவம்** – கரிய நிறம். **சேது** – இராமநாதபுரம், சேதுநாடு, **கனசேதுபதி** – மேன்மை மிகுந்த சேதுபதியரசன், முத்துராமலிங்க சேதுபதி. **கலந்தவாறு** – பேசியபடி, உரையாடியபடி. **திருவடிராச்சியம்** – சேதுநாடு. **அங்கே** – சேதுநாடு. **காலொடுகை** – காலும் கையும். **தருவடியிற்** – அரச மரத்தின் கீழ். **புல்லாணி மாயன்** – சேதுநாட்டுத் திருப்புல்லாணியில் கோயில் கொண்டுள்ள தெய்வச் சிலைப் பெருமாள், திருமால், **சாற்றுவேனே** – சொல்லுவேனே.

## Cōracūra<u>n</u> declares his intention to narrate his further story

I shall narrate hence,
How the king **Malayālam**[1] alongwith his setinue

Did visit **Cētunāṭu**[2] of soil black
When I was serving my mentor as an attendant humble
And how the king did interact with the **Cētupati**[3] noble
Narrate also I shall
How from my tutelage under the feet of my mentor
I reverted to my stealing habitual
And had one hand and one leg of mine
Amputated by way of punishment for my crime
How atlast **Tirumāl** of **Tiruppullāṇi** in His grace divine
Saved me from total annitulation
I shall narrate as well.

1. **Malayālam** – **Kerala** state as it is now known.
2. **Cētunāṭu** – **Irāmanātapuram** region in Tamilnadu.
3. **Cētupati** – The princely ruler of **Cētunāṭu.**

**(ஈஸ்வரயோகிக்குப் பணிசெய்தல்)**

தரு

12. பொன்னர சடிதனிலே – தென்திருப்
புல்லாணி வாழ்நித்திய கல்யாணி
கன்னிபது மாசனிசேர் – தெய்வச்சிலைக்
கடவுள் பெரியதிரு வடிபுரக்குந் 1

திருவடி ராச்சியத்திற் – சிலதுநாள்
தீதுவிட் டாஷாட பூதியைப் போல்
குருவுக்குப் பணிகள் செய்து – நானனு
கூலத்தி லேயிருக்குங் காலத்திலே 2

**பதுமாசனி** – திருப்புல்லாணியில் கோயில் கொண்டுள்ள இறைவி; இலக்குமி. **புரக்கும்** – துதிக்கும்; பரவும். **தீது** – தீமை. **ஆஷாட பூதி** – மோசக்காரன். **அனுகூலம்** – நன்மை; உதவி.

## Rendering service to Isvara Yōki

At the golden feet royal
Of **Teyvaccilaiyār** who in the company of
**Patumācaṉi**[1] at **Tiruppullāṇi**

Doth protect devotees with His feet
Which are hold by ***Periyatiruvaṭi***[2]
In a divine empire benign,
These did I remain for a few days
Pretending virtue like ***āṣāṭapūti***[3]
Leaving aside my evil ways of old
I also did render humble service
Attending on the mentor saint.

1. **Patumācaṉi** – the goddess at **Tiruppullāṇi**
2. ***Periyatiruvaṭi*** – **Kerutāḻvar**, the mount of **Tirumāl**
3. ***āṣāṭapūti*** - a hypocrite or pretender of goodness

**(சேது நாட்டிற்குக் கேரள அரசன் வருகை)**

கேரள நாட்டரசன் – ராமகதை
கேட்டதிற் போர்க்குக்கை தீட்டிச்சென்றோன்
நாரண னடியவர்க்காய்ச் – சபைதனில்
நான்பிணை யென்றுகுடப் பாம்பையெடுத்தோன் 3

**குலசே கரப்பெருமான்** – சந்திர
குலந்தழைத் திடவந்து நலந்தழைத்தோன்
மலிபுகழ் வஞ்சிநாடன் – புகழ்சேர
**மான்பெரு மான்பால மார்த்தாண்டன்** 4

படர்கொல்லிக் காவலவன் – அனந்த
பத்துமநாப தாசன் உத்தமவான்
குடையொன்றில் ராச்சியத்தை – யடக்கிச்செங்
கோலிற் செலுத்திவருங் காலத்திலே 5

**கேரளநாடு** – மலையாளம். ராமகதை கேட்டதிற் போர்க்குக் கைதீட்டிச் சென்றோன் – **குலசேகராழ்வார்** – பௌராணிகரிடம் இராமகதை கேட்டு வருங்கால், இராமன் கரன் முதலிய அரக்கர் பதினாலாயிரவரோடு தான் ஒருவனே நின்று போர்புரிந்த செய்தியைப் பௌராணிகர் விரித்துரைக்கக்கேட்ட குலசேகரர் பக்தி மிகுதியால் கதையை மெய்யாக அப்போது நிகழும் செய்தியாகக் கொண்டு இராமனுக்குத் துணையாகும் பொருட்டுப் படையுடன் புறப்பட்ட விருத்தாந்தைக் குறித்து நின்றது. **நாரணன் அடியவர்க்காய்** – திருமாலின் பக்தர்களுக்காக.

**சபைதனில் நான் பிணையென்று குடப்பாம்பை யெடுத்தோன்** – இதுவும் குலசேகர ஆழ்வாரின் செயலே ஆகும். திடவிரதன் என்னும் அரசனின் மகனாராகிய குலசேகராழ்வார் இராமபிரானின் திருக்கதையை ஸ்ரீவைணவரிடம் கேட்டு கருத்தொருமித்திருந்தபோது மந்திரிகள் ஸ்ரீவைனவரால் குலசேகருக்குச் சித்தப்பிரமை யுண்டாயிற்றென அவர்களை விலக்க எண்ணித் திருவாராதனப் பெருமாளுடைய திருவாபரணத்தை மறைத்து ஸ்ரீவைணவரைச் சுட்ட, அரசனாகிய குலசேகரர், ஸ்ரீ வைணவர் எடுக்கவில்லை எனப் பாம்பின் குடத்தில் கைவைக்கப் பாம்பு கையை முத்தமிட்டதைக் கண்டு அமைச்சர் திருவாபரணங் கொடுத்துப் பொறுத்துக் கொள்ள வேண்டினர்; **குலசேகரப் பெருமான்** – திருவஞ்சைக் களம் என்னும் நகரத்தின் அரசன். திடவிரதன் என்பானின் புத்திரரான குலசேகர ஆழ்வார். இவர் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். இவரின் காலம் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியும் எனலாம். **மலிபுகழ்** – மிகுந்த புகழ். **வஞ்சிநாடன்** – சேரநாட்டரசன். **சேரமான் பெருமாள் பாலமார்த்தாண்டன்** – திருவிதாங்கூர் மன்னன். **படர்கொல்லிக் காவலவன்** – பகையைக் கொல்லும் அரசன். **அனந்த பத்துமநாபதாசன்** – திருவனந்தபுரம் அனந்தபத்மநாப இறைவனுக்கு அடியவன். **குடை** – அரசாட்சி. **ராச்சியம்** – நாடு; **செங்கோல்** – நல்லரசாட்சி.

## The King of Kerala arrives at Cētunāṭu

The king of **Kēraḷa Cēramān Perumān Pālamārttāṇṭan**
A descendant of **Kulacēkarap Perumān**[1] illustrious,
Who as legend would have it
Did become so engrossed in the discourse
of the heroic exploits of **Irāman**[2] against *arakkar* in thousands,
In the narration of the **Irāmakatai.**
That he did set out on a war at once to assist **Irāman**
He did also put his hand fearlessly in a pledge.
Into a pot which contained a deadly snake venomous
To confirm the innocence of the devotee of **Nāraṇan**[3]
The descendant of **Kulacēkarap Perumān** such,
In glorious succession for the ***Cantrakulam***[4] to prosper
Native besides of **Vañcināṭu**[5] of great repute
**Cēramān Perumān Pālamārtāṇṭan** such
A monarch who would kill his foes
A devotee pious of **Anantapatmanāpan**[6] as well
And a virtuous ruler who under his parasol royal,
Had sole control over his domain rightful
With his sceptre upright
At such a period proper.

1. **Kulacēkara Perumā<u>n</u>** – one of the twelve **Ā<u>l</u>wārs.**
2. **Irāma<u>n</u>** – human incarnation of **Viṣṇu.**
3. **Nāraṇa<u>n</u>** – **Viṣṇu.**
4. *Cantrakulam* – The lunar of moon
5 **Vañcināṭu** – The country of Cērās.
6 **Anantapatmanāpa<u>n</u>** - The name of the God at **Tiruva<u>n</u>antapuram.**

**(தனுக்கோடியில் அரசன் சேனைகளுடன் கடலாடச் செல்லுதல்)**

புண்ணிய மனைத்துமொன்றாய்த் – திரண்டொரு
புண்ணியந் தேடுதற்கு எண்ணினாற்போல்
[1]எண்ணின் நிணறுடையான் – தனுக்கோடி
[2]எறிகட லாடவென் றறிவுகொண்டான் 6

சதுரங்கத் தளத்துடனே – பிரதானிகள்
தளகர்த்தர் மந்திரிகள் கிளையுடனே
பதினெட்டு வாத்தியங்களும் – முழங்கிடப்
படைத்தலைவர் கள்சூழப் பயணங்கொண்டான். 7

**புண்ணியம்** – அறம்; நல்வினை. **நிணறுடையான்** – உருக்கமுடையவன். **தனுக்கோடி எறிகடல்** – தனுக்கோடியில் அலைமோதுகின்ற கடல். **சதுரங்கத் தளம்** – காலாள், தேர், குதிரை, யானையாகிய நால்வகைச் சேனை. **பிரதானி** – அதிகாரன்; **தளகர்த்தர்** – சேனைத் தலைவர்.
பா.வே : 1. எண்ணினன் இன்குடையான் 2. ஏறிகட லாடவே நினைவுகொண்டான்

## The King visits Tanuṣkōṭi to bathe at the sea there

To crown all his virtuous rituals
And pilgrimage pious
The king tender at heart did decide
To bathe in the sea at **Tanuṣkōṭi** [1]
Whose waves lash the shore
Accompanied by the units four of the army his
With ministers, officials and commanders besids
He travelled grandly thus in a march
Woth resoundig music by instrument eighteen

**Tanuṣkōṭi** - A coastal place near **Irāmēsvaram**

**(புரோகிதர்கள் தொடருதல்)**

போமதைக் கண்டுடனே – தானங்கள்
பூரிகள் வாங்கப் புரோகிதர்கள்
நேமங்கொண் டெழுந்தார்கள் – [1]நெத்திக்கு
நேரேமுன் குடுமியோ ரோரந்தொங்க 8

தடிக்கொம்பு குடையுங்கொண்டு – [2]கோணியும்
[3]சாக்குச்சுமை யும்வாயிற் பாக்குங்கொண்டு
இடைக்குக்கீழ் முண்டுடுத்திக் – கச்சமிட்டு
இருதொடையுந் தெரியச் சொருகிக்கொண்டு 9

[4]எவடயெந் நானுவென்று – பேசிக்கொண்
டின்புறு நம்பூரியோர் கும்புவரவே
த்வலையுந் தளிச்செம்புந் – தாவளியில்
தக்கையிட்ட மடிசஞ்சி தருப்பைகொண்டு 10

கம்பளியு டுத்திக்கொண்டு – வேதங்கள்
கத்தவவ தானிகள் மெத்தவர
தெம்பதி தம்முடனே சாஸ்திரிகள்
தீட்சிதர் கூட்டங்கள் திரண்டுவர 11

**பூரி** – தட்சணை. **புரோகிதர்** – அந்தணர். **நேமம்** – நியமம். **நெத்தி** – நெற்றி. **கோணி** – பை. **முண்டு** – உள்வேட்டி. **எவட யெந்நானுவென்று** – எவ்விடம், என்ன செய்தி என்று. இது மலையாளப் பேச்சு. **நம்பூரி** – மலையாளப் பார்ப்பாரில் உயர்ந்தோர். **கும்பு** – கூட்டம்..**தளிச்செம்பு** –சமையல் செய்வதற்குரிய செம்பு. **தாவளி** – கம்பளி. **தக்கையிட்ட** – ஒட்டுப் போட்டுத் தைத்த. **தருப்பை** – தெர்ப்பைப் புல். **கத்த** – கற்ற. **அவதானி** – திறமையானவன். **தெம்பதி** – தம்பதி; கணவனும் மனைவியும்.

**பா.வே** : 1. நெற்றிக்கு 2. கோணியில் 3. சரக்குச் சுமையும் 4. எவடேயெந் தானுமென்று.

## Priests follow the procession

On seeing this royal march
Priests desirous of gifts in cash and kind
Did follow in hot pursuit

With the locks of their ***kuṭumi***[1] hanging sidewards
Of foreheads theirs,
Armed with sticks and umbrellas
With jutebages bundled in ***kōṇi***
And mouthfuls of betel and areca nuts to chew
Wearing ***muṇṭu***[3] below their waists
Folded above and fixed in a ***kaccam***[4]
Speaking ***Mālāyḷam***[5] in their enquiries of places and people
***Nampūris***[6] walked ahead as a group
With ***tavalai*** and ***taḷiccempu*** utensils
Packing stitched ***maṭicañci***[7] and ***taruppai*** grass
In blankets theirs,
Scholars in scripture well versed
Walked along gently wearing woolan shawls
***Sāstries***[8] and ***Tiṭcitars*** too were these in large numbers
Along with spouses theirs.

| | | |
|---|---|---|
| *1. Kuṭumi* | - | Tuft of hair |
| *2. Kōṇi* | - | a jute bag |
| *3. Muṇṭu* | - | dhoti or a piece of cloth worn around the waist |
| *4. Kaccam* | - | dhoti folded uphards and fixed |
| *5. Malayāḷam* | - | one of the Dravidian Languages |
| *6 Nampūris* | - | *Nampūtiries* are Brahmin priests |
| *7 maṭicañci* | - | a bag made by |
| *8 Sāstries* and *Tiṭcitars s* | - | Brahmin scholars and priests |

**(அரசன் சேனைகளுடன் திருநெல்வேலி வருதல்)**

விருதுள்ள பாளையங்கள் – தோவாளை
வெளியிலி றங்கிநெல் வேலியில்வந்தார்
அரசனைக் காணவென்றே – எங்கள்குரு
வானவர்சென் றார்உடன் யானுஞ் சென்றேன் 12

குருமுனி வரவுகண்டு – ராசனெதிர்
கொண்டுவந் தழைத்துத்தன் அண்டையில்வைத்து
அருமைகொண் டுபசரித்துக் – கூடவர
லாகுமென் றீஸ்வர யோகிக்கங்கே. 13

**விருது** – வெற்றி. **பாளையம்** – படை; பாசறை. **தோவாளை** – கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். **நெல்வேலி** – திருநெல்வேலி. **குருவானவர்** – ஈச்சுரயோகி. **குருமுனி** – குருவாகிய முனி, ஈச்சுரயோகி. **ராசன்** – பால மார்த்தாண்ட வர்மனாகிய கேரள அரசன். **அண்டை** – அருகில்.

### The king arrives at Tirunelvēli along his retinue

The vrctorious army camped at **Tōvāḷai** for a while
And then reached **Tirunelvēli**
As my mentor **Isvarayōki** wanted to meet the king there,
I also did accompany him
On seeing my G***uru*** the king came forward
To greet and receive him with reverence
With warmth and hospitality earnest
The king invaited **Isvarayōki** to accompany him

**(சோரசூரன் ஈஸ்வரயோகியுடன் அரசனைக் காணுதல்)**

சிவிகையுந் தீவட்டியுங் – கூடாரத்
திரையுங் கொடுத்துக்கூட வருகவென்றான்
குவலயத் தோர்நடுங்க – விஷத்தைக்
கொடுக்கும் பாம்புக்குப்பால் கொடுப்பதுபோல் 14

எனக்கொரு குதிரைதந்து – நிலையங்கி
இடைக்கட்டுத் தலைப்பாகு கடுக்கன்கண்டி
கனத்த கைவளையுந்தந்து – யோகியர்
காரியஸ் தானாபதி நீர்காணென்றார். 15

**சிவிகை** – பல்லக்கு. **தீவட்டி** – தீவர்த்தி – எரிபந்தம். **குவலயம்** – பூமி. **விஷம்** – நஞ்சு. **நிலையங்கி** – நெட்டங்கி. **இடைக்கட்டு** – இடைவார். **கண்டி** – கழுத்தணி. **யோகியர்** – ஈச்சுரயோகி. **காரியஸ்தானாபதி** – பணியாளர்களுக்கு மேலதிகாரி.

### Cōracūraṉ along with Isvarayōki meets the king

The king did give to the yōki a palanquin
And a tent outfit with curtains

He invited him to accompany him
Besides a burning torch for lighting as well
The king gave me a horse too
A long garment and a waist band
Besides a turban and ornaments
Like earstuds necklaces and bangles
He proclaimed me as ***kāriyastāṉātipati***
Of my mentor **Isvarayōki**
This offer magnanimous of the king to me
Was like offering milk to a snake dreaded
Which would only spit venom one and all.

**(சோரசூரன் தானாபதியாகுதல்)**

தானா பதியாகி – யோகியர்
[1]தன்னோடே கூடவந் தன்னாள்முதல்
யானொரு துரையானேன் – யாவரும்
என்னைவந் தனுசரிக்க முன்னைப்படைத்தேன் 16

அதிஷ்ட மொருத்தன்பங்கோ – இவ்வளவு
அடிகண்ட பின்புசும்மா விடுவேனோ
முதற்கட்சி யாயிருந்தேன் – எனக்கங்கே
முத்துமழை பொழிந்ததோர் மூன்றுநாழிகை 17

**அன்னாள்** – அந்தநாள். **துரை** – அதிகாரி, மேன்மகன். **அனுசரிக்க** – பின்பற்றிவர; கொண்டாட. **முன்னைப் படைத்தேன்** – பெருமையடைந்தேன்.

பா.வே : 1. தம்மோடு கூடவந்தே னந்தாள்முதலாய்

## Cōracūraṉ as Tāṉāpati

As the ***Tāṉāpati***[1] of the ***yōki*** my mentor
I did attain the status of an official
As all people did approach and honour me thus
I felt proud indeed
Luck is not the monopoly of anyone in particular
Will I remain passive in fortune mine

After so much misfortune and suffering earlier?
I was the first and foremost there
And it was indeed a shower of pearls ventable
For a duration of ***nāḻikai***[2] three.

***1.Tāṉāpati*** - manager and commander
***2.Nāḻikai*** - a duration of 24 minutes

**(அரசனுடன் யாத்திரை செல்லல்)**

எவ்வேளை போனாலும் – ராஜனுட
ஏகாந்தத் திலுந்தடை யெனக்கில்லையே
இவ்வாறு செய்தென்னையும் – விரைக்கோட்டை
எலியெனக் கூட்டிக்கொண் டெழுந்தானே 18

பெருகுநெல் வேலிக்கிப்பால் – சீவலப்
பேரிவிட்டு ஓட்டைப்பி டாரத்தில்வந்து
முருகவிழ் வேடனத்தம் – வைப்பாறு
முதலியார் மடஞ்சாயற் குடிகடந்து 19

கடுகுசந் தையுங்கடந்து – கொத்தங்குளம்
கடந்துசிக்க லுக்கிப்பால் நடந்துவந்து
தடமதிள் சிகரிகைசூழ் – புல்லாணி
தனில்வந்து சேதுவிற் புனலாடிச் 20

சக்கரைப் புனலாடி – நடைவைத்துத்
தர்ப்பசய னம்பரவி யப்புறஞ்சென்று
மைக்கூண்டு தோணித்துறை – தனில்வந்து
வாய்த்ததோணி யிற்பாம்ப னாற்றைக்கடந்து 21

இராமீசர் பதம்பணிந்து – தனுக்கோடி
நாடிச்சென் றங்குபுன லாடிக்கொண்டு
தாமதஞ் செய்யாமல் – அங்கேசெய்யும்
[1]தருமம் செய்து திரும்பி வருகையிலே 22

**ராஜனுட** – பாலமார்த்தாண்டனுடைய. **ஏகாந்தம்** – தனித்திருக்குமிடம். **விரை** – வாசனை, நறும்புகை. (19.20) கண்ணிகளில் திருநெல்வேலியிலிருந்து திருப்புல்லாணிக்குச் செல்லும் வழியிலுள்ள ஊர்கள் கூறப்படுகின்றன. அவ்வூர்கள் : சீவலப்பேரி, ஓட்டப்பிடாரம், வேடநத்தம், வைப்பாறு, முதலியார் மடம், காயல்குடி, கடுகுசந்தை, கொத்தங்குளம், சிக்கல். **சிகரிகை** – கோபுரம். **சேது** – சேது சமுத்திரம். **புனலாடி** – நீராடி. **சக்கரப்புனல்** – திருப்புல்லாணியிலுள்ள சக்கர தீர்த்தம். **நடை வைத்து** – நடந்து வந்து; காலடிவைத்து. **தர்ப்பசயனம்** – திருப்புல்லாணி. **பரவி** – துதித்து. மைக்கூண்டு, தோணித்துறை என்பன திருப்புல்லாணிக்கும் இராமேச்சுரத்திற்கும் இடையிலுள்ள ஊர்கள். **தோணி** – மரக்கலம். **பாம்பனாறு** – பாம்பன் ஆறு. **இராமீசர்** – இராமேச்சுரத்திலுள்ள இறைவன்.

பா.வே : 1. தர்ம்மன்

**His pilgrimage along with the king**

I was close to the king at all times
With free access even in privacy his
With no barriers imposed on me
I was like a gnawing mouse stealthy
Pached in a bundle of seeds and grains
Leaving **Tirunelvēli** prosperous
We did on our way to **Tiruppullāṇi**
Pass in that route places so many
Such as **Cīvalappēri,Oṭṭapiṭāram,Vēṭanattam,**
**Vaippāṟu, Mutaliyārmaṭam,Cāyaṟkuṭi,**
**Kaṭukucantai, kottaṅkulam** and **Cikkal**
Then did we reach **Pullāṇi**
Surrounded by temple towers
At **Cētu** did we bathe in the holy waters there
And also at ***Cakkkara Tirttam***
Walked to **Pullāṇi** to worship there
We did pass then **Maikkūṇṭu** and **Tōṇittuṟai**
On our way to **Irāmēsvaram**
We did cross the **Pāmpaṉ** river in a boat
After praying at the feet of the lord of **Irāmēsvaram**
We did proceed to **Tanuṣkōṭī** and bathed there
At that holy shrine did we give alms
And gifts in charity to the needy ones
We did return then without delay any.

**1.Irāmēsvaram** - a formour pilgrimage centere in south india.

**(சேதுபதி மன்னனைக் காணுதல்)**

தனுக்கோடி யாடினவர் – **சேதுபதி**
தனைக்காண வேணுமென்றே மனதிலெண்ணி
மனுக்கோடி சூழ்ந்திருக்கும் – புல்லாணி
மார்க்கத்தி லேயுந்த வூர்க்கருகே 23

பாளையம் வருகையிலே – **முகவைப்**
**பதிராசன் சேதுபதி ராசன்**
காளை முகிற்கிளையான் – தண்டுவார்
கண்டன்சா மித்துரோகி வெண்டயத்தான் 24

இரணிய [1]கெற்பத்தியாகி – பாளையப்பட்
டெழுபத்திரு மகிபர் தொழும்பாதன்
பருதி குலாதிபதி – [2]சனங்கட்கு
பாம்பன் துறைகடத்திப் பாதைவிடுத்தோன் 25

தெண்டிரைப் பலன்கொடுத்துத் – [3]தன்னுட
தெரிசனமுங் கொடுக்குஞ் சேதுபதி
தொண்டியந் துறையுடையான் – ராகவன்
சொற்கொண்டு சேதுவா திக்கம் பெற்றோன் 26

தடமுற்ற செம்பிநாடன் – காவிக்குடை
சகசம்புக் குடைமன்னன் தாலிக்குவேலி
குடைமேற் சில்லிவிருதும் – அனுமக்
கொடிவிருதுங் கெருடக் கொடிவிருதும் 27

நாலங்க முள்ளபடையும் – திரண்டந்த
ராசனுக் கெதிர்வந்து நாடினேனே
ஓலஞ்செய் வாத்தியத்தால் – அண்டமுக
டுடையத்திசைகளெங்குந் [4]திடுதிடெனக் 28

**மனுக்கோடி** – மக்கள் கூட்டம். **மார்க்கம்** – வழி. **பாளையம்** – சேரனின் சேனை. **முகவைப் பதி** – இராமநாதபுரம். **காளை** – எருது. **முகில்** – மேகம். **தண்டுவார் கண்டன், சாமித் துரோகி வெண்டயத்தான், இரணிய கெர்ப்பத்தியாகி, தாலிக்கு வேலி** என்பவை சேது வேந்தர்க்குரிய விருதுகள். **பாளையப்பட்டு எழுபத்திரு மகிபர்** – 72 பாளையங்களின் அரசர்கள். **பருதி குலாதிபதி** – சூரிய வம்ச அரசன். **சனம்** – மக்கள். **தெண்டிரைப்பலன்** – தெளிந்த அலைகளையுடைய சேதுதீர்த்தத்தில் நீராடிய பலன். **தெரிசனம்** – தரிசனம்; காட்சி. **தொண்டியந்துறை** – தொண்டி எனும் துறைமுகம். **ராகவன்** – இராமன். **சேது வாதிக்கம்** – சேதுவை ஆளும் தலைமை. **தடம்** – வழி. **செம்பிநாடன்** – சேது நாடன். **காவிக்குடை, சகசம்புக்குடை, தாலிக்கு வேலி, சில்லி விருது, அனுமக் கொடிவிருது, கெருடக் கொடி விருது** – சேதுவேந்தர்க்குரிய விருதுகள். **நாலங்கம்** – இரதம், யானை, குதிரை, காலாள் என்னும் நாண்குவகைப் படையினர். அந்த ராசன் என்றது சேரனை. **ஓலம்** – முழக்கம்.**அண்டமுகடு** – வான்வெளி.

**சு.சொ** : 1. கெர்ப்பயாஜி 2. சனங்களுக்கு 3. தன்னுடைய 4. கிடுகிடெனக்.

## Cētūpati meets the king of Kērala

After bathing at **Tauṣkōtī** the king did decide
To meet **Cētupati** of repute great
In the **Tiruppullāṇi** route ever so crouded
As the king and the army did arrive
**Cētupati** the illustrious ruler of **Muhavai(Irāmanātapuram)**
Known also by titles glorious
As ***Taṇṭuvārkaṇṭaṉ,Cāmittunōki Veṇṭayattaṉ***
And ***Iraṇiyakerpattiyāki***
Such a king powerful as held in great esteem
By obedient rulers of ***Pāḷaiyams***[1] two and seventy
Who fall at his feet
A monarch of ***Cūryakulam***[2] hoary
The ruler who laid a pathway to ***Pāmpaṉ***
Thus did he enable holy bathing for the folk there
And a chance to see him too
The custodian of ***Toṇṭi*** harbour as well
Known as having obtained the right to rule ***Cētu***
By the grace of ***Irākavaṉ***[3] him self
The ruler of ***Cempināṭu*** with its roads proper
Endowed with laurels and symbolic banners
Indicating his titles ever so many in parasols too
Such as ***Kāvikkuṭai*** and ***Cakacampukkuṭai***

***Tālikkuvēli, cilli, Anumakkoṭṭi*** and ***karuṭakkoṭṭi***
Besides all this parar phernalia so grand
These was his army with all the four units formidable
They all did gather to greet the ***Cēra*** king
With all their musical bands
Offering welcome in reverberating renouance,
And the rumblings such echoed over the entire ***Aṇṭam***[4] and ***mukaṭū***[5]

*1. Pāḷaiyam* - a principality
*2. Cūryakulam* - solar dynasty
*3.* **Irākavan̲** - **Irāman̲**
*4. Aṇṭam 5.mukaṭū* - sky and space of the entire universe

**(சேதுபதியும், சேரனும் சந்தித்துரையாடல்)**

கட்டியம் ஒலிமுழங்க – இருவருங்
கடலொடு கடல்வந்து கலந்தாற்போல்
கிட்டினார் சமபேட்டி – அதுக்கெல்லாங்
கெடனையொரு வன்செய்தே னடிமுதலாய் 29

தானாாப திக்கத்திலே – யவருக்குந்
தங்கக் கட்டி யிவருக்கும் சிங்கக் குட்டியாய்
நானாக வெங்கும் நின்று – நடந்த
நடத்தையி லேயவிரென் னிடத்திலன்பாய் 30

மன்னவன் **சேதுபதி** – தன்னரண்
மனையிற் சென்றங் கென்னை வரவழைத்துத்
தன்னெதி ரிருக்கச்சொல்லி – உமக்கென்றுந்
தானாபதி யுத்தியோகந் தானோவென்றார் 31

உள்ளதைச் சொல்லுவேனோ – பொய்க்கடற்
குள்ளொரு துளிகொண்டு விள்ளலுற்றேன்
பிள்ளைமார் நாங்களென்றேன் – தளகர்த்தர்
பிரபலர் தானெங்கள் பெரியோரென்றேன். 32

**கட்டியம் ஒலி** – புகழ் ஒலி; விருதுகளின் முழக்கம். **இருவரும்** – சேதுபதியும் மலையாள நாட்டரசனும். **சமபேட்டி** – இரண்டரசரில் உயர்வு தாழ்வின்றி இருவரும் ஒருவரையொருவர் சென்று காண்டல். **கெடனை** – முயற்சி. **அடி முதலாய்** – தொடக்கம் முதலாக. **தானாபதிக்கம்** – தானாதிபதிகளுக்குரிய செயல். அவர் என்றது மலையாள நாட்டரசனை. இவர் என்றது சேதுவேந்தரை. தங்கக்கட்டி, சிங்கக்குட்டி என்பவை நாட்டு வழக்கு. நல்லகுணஞ் செயல்களுடையவரைத் தங்கக்கட்டி என்பர். வீரச்செயலால் மேம்பட்டவரைச் சிங்கக்குட்டி என்பர். **நடத்தை** – செயல், ஒழுக்கம். அவர் என்றது சேதுபதியை. **தானாபதி** – படைத்தலைவன். **பொய்க்கடல்** – பொய்யாகிய கடல். **விள்ளல்** – சொல்லல், கூறல். **தளகர்த்தர்** – படைத்தலைவர். **பிரபலர்** – பிரசித்தி பெற்றவர்.

## Cēraṉ and Cētupati meet and talk

With emissaries heralding the arrival of kings both
To announance their laurels respective
As if one ocean did come to merge with another
They did meet on an equal footing
And I did make efforts all for that meet
Right from the beginning
As a ***Tāṉāpati*** I did play my role
To satisfy both in equale measure
As I thus did stay and move everywhere
To carry out tasks mine
***Cētupati*** on seeing me so earnest and active
Did summon me to his presence in his palace
Asked me to be seated too and enquired
Whether I had been a ***Tāṉāpati*** for long
How could I tell him the truth?
Hence did I resort to an ocean of lies
And said that my ancestors were all ***piḷḷaimār***[1]
Noted for their courage as commanders of repute

***1. Piḷḷaimār*** - members of a carte.The entire universe

**(சேதுபதி சேனாதிபதி பதவி தருதல்)**

கெருவமும் பணக்கொழுப்பும் – வந்ததைக்
கெடுத்துக்கொண்டார் நானிப்போ தடுத்துக்கொண்டேன்
நிருவாகி என்றறிந்து – எனக்கந்த
நிருபன்சே னாதிபத்தியம் தருவேனென்றான் 33

இருக்கிறே னென்றுசொன்னேன் – இப்படி
இருக்கையி லேநடந்த திருக்கைக்கேளும்
பெருத்ததோர் சனிபகவான் – எனைவந்து
பிடித்தார் பிடித்ததைப் படித்தானென்றால் 34

**கெருவம்** – கர்வம். **நிருவாகி** – திறமையாளன். **நிருபன்** – அரசன்; இங்கு சேதுவேந்தன். **சேனாதிபத்தியம்** – சேனாதிபதி. படைத்தலைவன். **திருக்கை** – திருக்கு – மாறுபாடு;

## Cētupati offers the post of *Cēṉātipati*[1]

Arrogance and pelf had spoilt so many
I did however accept the offer
When the ***Cētu*** king expressed his desire
To make me a ***cēṉātipati***
In such a situation so favourable to me
You do listen to what happened
As a strange twist in fortunes mine
The lord of the planet **Saturn** [2]
Did lay his malefic hands on me
Which I shall narrate for all to know.

*1. Cēṉātipati* - commander of the army
*2.* **Saturn** - *Caṉi* in tamil ,alphabet which can do great harm when it is maleic

**(சோழ அரசன் பரிசுப்பொருள் தருதல்)**

திண்சோழ நாட்டரசன் – ஏழெட்டுச்
[1]சிறைவளர்த் தபிநய முறைவருத்திச்
தண்சங்கீ தமும்வருத்தி – நாடகச்
சாலையில் நாட்டிய வேலைவருத்தி 35

ஆடைகள் பணிகள்செம்பொன் – தனித்தனி
ஆயிர மாயிர மவர்க்குதவி
கோடிபேர் காவல்வைத்து – இராமீசர்
கோவிலுக்கு நேர்ந்து கொண்டதென்று 36

**வஞ்சனை**– தவறு. **சிறை** – பாதுகாப்பில் வளர்க்கப்படும் பெண்ணினம். **அபிநயம்** – நடிப்பு; மனக்கருத்தைக் குறிப்பாய் விளக்கும் அங்கச் செய்கை. **பணிகள்** – அணி கலன்கள்.

பா.வே : 1. சிறைவளர்த் தபிநய.

## The Cōḻā king offers gifts

The **Cōḻā** king mighty at this juncture
Did send ***Tācis*** to **mukavai**
As per a vow taken in prayer earnest by that king
To dedicate them to the service of **Irāmīcar** [1]
The ***Tācis*** thus sent were trained
In the arts of ***apinayam*** [2] and music
Rigorously coached in ***nāṭṭiyam*** [3] too in dancehalls
Protected zealously at several stages seven or eight
If their training such
They were paid a thousand gold coins each
Besides garment and jewels to adorn them
Thus with layers of protection manifield
Were they trained and sent to **Mukavai** on their way
To the temple of **Irāmīcar**

1. ***Irāmīcar*** - Lord **Civa** of **Irāmēsuram**
2. ***apinayam*** - gestures and movements of limbs in dancing
3. ***nāṭṭiyam*** - The art of dancing

**(சேதுபதி தாவளம் கற்பித்தல்)**

இவடத்துக் கனுப்பிவைத்தான் – கூடவந்த
எஜமானன் சொல்லவந்த நிஜமறிந்து
தவமிக்க சேதுமன்னன் – அத்தனை
தளங்கட்கும் நல்லதா வளங்கற்பித்து 37

விடுதிவிட் டிருக்கச்சொல்லி – **இராமலிக்க**
**விலாசத்தி** லழைத்துச்சல் லாபத்துடன்
நடனங்கள் பார்க்கலுற்றோன் – அப்போது
நானுமிருந் தேனந்த நடுச்சபையில் 38

**இவடத்து** – இவ்விடத்து; முகவை நகரத்துக்கு. **எஜமான்** – எசமான் – தலைவன். **நிஜம்** – உண்மை. **தளங்கட்கும்** – கூட்டங்களுக்கும். **தாவளம் கற்பித்து** – வசதி செய்து தந்து. **விடுதி** – தங்குமிடம். **இராமலிங்க விலாசம்** – சேதுவேந்தர் அரண்மனையிலுள்ள கொலுமண்டபம். **சல்லாபம்** – அளவளாவுதல்.

## Cētūpati's cordial hospitality to them

Learning the purpose of their visit to **Mukavai**
From the leader who brought the ***Tācis***
The benevolent **Cētū** king did receive them cordially
And arranged for their stay and comforts
Lodging them but approprately
The king did then bring them to ***Irāmaliṅka Vilācam***
A hall so fine for performence of fine arts
In the king's palace
Exchanging pleasantries with the ***Tācis***
He did witness their dances there
I was also present on that occasions joyous.

**(தாசிகளின் நடனத்தைக் காணுதல்)**

கண்டேனத் தாசிகளை – ஓடிப்போய்க்
கட்டிக்கொள்ள நினைத்ததென் கெட்டமனது
பெண்டாசை பொல்லாதே – யென்னையுந்தப்
பேய்பிடித்தது புத்தி போய்மடித்தது 39

தலைக்கட்டி வருகையிலே – [1]என்னுட
தலைக்கட்டி வரும்படி கலக்கக்கொண்டு
உலைக்கிட்ட மெழுகானேன் – அவர்களில்
ஒருத்தியை நெருக்கோடே நெருக்காகத் 40

தூதுவிட் டளப்பறிந்தேன் – அவளொரு
துரும்பாகக் கூடவென்னை விரும்பவில்லை
காதலும் எனைவிடவில்லை – களவிலே
கைவைப்போ மென்றதிலே கருத்தைவைத்தேன் 41

**பெண்டாசை** – பெண்ணாசை. **தலைக்கட்டி வருகையில்** – (இவ்வாறு நான் சேனாபதிக்குரிய பணிகளை) நிறைவேற்றி வருகையில். **தலைக்கட்டி** – தலைக்கு + அட்டி ; என்னுடைய தலைக்கு அட்டி வரும்படி என்று பிரித்துப் பொருள் கொள்க. **அட்டி** – கேடு. **உலைக்கு** – உலையில். **அளப்பறிந்தேன்** – ஆராய்ந்து அறிந்தேன். **துரும்பு** – தூசு. **களவு** – திருட்டு.

பா.வே : 1. என்னுடைய

## Cōrācūran witnessing the dance programme

On seeing the ***Tācis*** dancing thus
I felt an urge so strong and lustful
To rush forward and hug them all
The evil desire for women on my past
Did haunt me and go into my head
To spoil my career in the service of the Cētu king
And bring my very head to peril imminent
Thus did I melt in passion such
And did send a messenger to one of the ***Tācis***
To find out her reaction to amorous mine
She rejected my advances outrightly
With scant regard for offers mine
Not even worth a straw in her eyes was
Not however givig up my intentions amorous
I diverted my attention to stealing
And set my mind on that pursuit nefarious

**(சோரசூரன் தாசியின் அழகில் மயங்குதல்)**

குருக்கட்கு நாமம்வைக்கும் – புத்தியென்னைக்
கொன்றாலும் விடுமோ பெண்டாசையால்
கருக்கடை எடுத்துச்செய்து – காவலர்
கைத்திறமும் நம்திறமுங் காண்போமென்றால் 42

இவளவு செய்யும்போது – இங்கிருக்க
லாகாதே வெளியேறப் போகாதே
கெவுரவம் போய்விடுமே – வீணிலே
கேவலம் ஆசைப்பட் டாவதென்ன 43

கொம்புத்தேன் கண்டமுடவன் – கொண்டபெருங்
கொட்டாவி யிதுநமக் கெட்டாதென்றே
என்புத்தி தேறிக்கொண்டு – வந்துவிட்டேன்
எவர்களுங் கொலுமுடித் தேகியபின் 44

மன்மத னிங்கேவந்தான் – வந்துசண்டை
மாட்டினான் காமத்தீயை மூட்டினானே
துன்மதி யெனைவிடுமோ – [1]வேற்கவே
தூர்த்தர்க் கெல்லாமுதற் பாத்திரனான 45

காமன்வந் தடிக்கையிலே – நீதியுங்
கருமமுந் தருமமுங் கருதுவேனோ
தீமைசெய் யறியேனோ – யெனக்கங்கே
தேவேது குருவேது பாவமேது 46

பசிக்கிப் பனங்காய்தின்றால் – பித்தம்பட்ட
பாட்டைப்படு தென்றுகை தீட்டிக்கொண்டேன்
நிசிப்பொழு தகலுமுன்னே – செய்தாலல்லோ
நெய்வேத்தியங் கொள்ளும்காமத் தெய்வமென்று 47

**கருக்கடை** – கள்வர்க்குரிய கருவிகளில் ஒன்று. **இவளவு** – இவ்வளவு. **கெவுரவம்** – கௌரவம். **மன்மதன்** – காமன். **துன்மதி** – கெட்டபுத்தி. **ஏற்கனவே** – முன்னமே. **தூர்த்தர்** – தீயவர். **தேவேது** – தெய்வம் ஏது. **நிசிப்பொழுது** – இரவுப்பொழுது. **நெய்வேத்தியம்** – நைவேத்தியம் – கடவுட்குப் படைக்கும் உணவு. **காமத்தெய்வம்** – காமன்; மன்மதக் கடவுள்.

பா.வே : 20. ஏற்கனவே.

## Cōrācūraṉ enamoured of the *Taci*'s beauty

Will my wily nature of hoodwinking even a ***kurukkaḷ***
In pretence pious
Leave me even if I here killed?
Armed with a ***karukkaṭai***[2] I did decide
To test my sleight of hand against the guards
With such a plan of action disgraceful

It would not be proper to remain any longer there
As my status and prestige will be lost
And I'll be put to shame in my desire vain
To attain what cannot be allained but easily
Thus did I muse and restrain myself for a while
After all the ***Tācis*** left the hall
**Ma<u>n</u>mata<u>n</u>**[3] did haurt me to fuel my fire of lust
Would my basic nature vicious leave me ever?
Already a scoundrel first and foremost was I
When **Ma<u>n</u>mata<u>n</u>** thus did tantalize me
Would I think of duty and virtue?
Not a stranger to missdeed as I was
Why should I think of god, ***Guru***[4] or sin?
If one eats palmfruit unripe to appease his hunger
The bilious reaction can't be helped
I have to perform my adventure amorous
At night itselt before it dawns
As **Ma<u>n</u>mata<u>n</u>** accepts only offerings nocturnal

***1.kurukkaḷ*** - priest in a Hindu temple (a Brahmin priest)
***2.karukkaṭai*** - a burgalar's tool
**3.Ma<u>n</u>mata<u>n</u>** - the God of love
***4.Guru*** - teacher or mentor

**(தாசியைக் களவில் சேர நினைத்தல்)**

புலப்பங்கள் பெரிதாகிக் – கூத்துப்பார்க்கப்
போன விடத்திற்பேய் பிடித்தாற்போல்
கலக்கங்கொண் டெழுந்திருந்தேன் – அந்தப்பெண்ணைக்
களவிலே [1]கொண்டுவர வுளவெண்ணினேன் 48

ஏகாந்தத் தலத்தில்வந்தேன் – மழைக்கால்
இருட்டுமவ் வேளைவந் தெனைக்கெடுக்க
மோகாந்த காரத்திலே – முழுகிப்போய்
மூலிகை நரிக்கொம்பு முதலெடாமல் 49

குளிகங்கள் சொக்குப் பொடிகள் – அஞ்சனங்கள்
கூட்டுந் திலதமுங் கைக்கொள்ளாமல்
முளைகருகிய பயிர்போல் – கேடுவரும்
முன்னேமதி கெட்டதெனக் கந்நேரத்தில் 50

**புலப்பங்கள்** – வாய்குழறுதல், பிதற்றுதல். **உளவு** – உபாயம். **ஏகாந்தத்தலம்** – தனியிடம். **மோகாந்தகாரம்** – ஆசையாகிய இருட்டு. **மூலிகை, நரிக்கொம்பு, குளிகம், சொக்குப் பொடி, அஞ்சனம், திலதம்** என்பவை கள்வர் கொள்ளும் சாதனங்கள். **முதலெடாமல்** – முதலியவற்றை எடுத்துச் செல்லாமல். **கேடு** – கெடுதி. **மதி** – அறிவு. **அன்னேரம்** – அந்நேரம்.

பா.**வே** : 1. கொண்டுவரவோர்

## Cōrācūra<u>n</u> decides to have clandestine amour with the *Tāci*

With lamentatious such in my lustfull mind prattling
As if haunted by a devil at the venue of the dance
I did rise in anguish and decided
To abduct that *Tāci* but clandestinely
Thus steeped in lust head over heels
I did set out on misadventure mine
At that winternight making me wilder still
I arrived at a lonely place
As an evil frame of mind procedes disaster for sure
Without even taking the accessories usual
Such as ***mūlikai*** , ***narikkompu, cokkuppoṭi, añcanam*** and ***tilatam.***

***mūlikai*** , ***narikkompu, cokkuppoṭi, añcanam*** and ***tilatam*** - These articles are herbs,bones,powders,pastes used in burglary by thieves

**(தாசியைக் கொண்டுவரச் செல்லுதல்)**

ஆகாத காலமென்பை – பிடரிதொட்டு
அழுந்தப் பிடித்துத்தள்ள வெழுந்து சென்றேன்
போகாதே யென்று சொல்லி – ஒருகரும்
பூனை தடுத்ததிலும் ஞானமற்றேன் 51

நிழலென [1]வளைந்து சென்றேன் – காவலர்
நெருக்கமு மங்கேசனப் பெருக்கமுங்கண்டேன்

குழிநரி போற்பதுங்கி – ஆரற்சுவர்க்
    கொல்லைக்குள் ளேயொரு வில்வக்கொம்பு 52

மறுபுறந் தெரியக்கண்டேன் – உடுத்திய
    வஸ்திர மெடுத்தததிற் றொத்தவெறிந்தேன்
எறிகையில் மகிழ்ச்சியினால் – உடல்தன்னால்
    [2]எழும்பித்துப் பந்தடித்துக் கிளம்பினாற்போல் 53

அப்புறத் திறங்கிவிட்டேன் – எனக்கங்கே
    அவள்பெரிதோ அந்தச் சுவர்பெரிதோ
இப்படிப் பெண்கிடைத்தால் – எட்டுமலை
    யென்றாலுந் தாண்டுவ தெனக்கரிதோ? 54

**ஆகாத காலம்** – கெட்ட நேரம். **பிடரி** – பிடர் பின் கழுத்து. **ஞானம்** – அறிவு. **ஆரற்சுவர்** – மதில்சுவர். **வில்வம்** – ஓர் மரம். **வஸ்திரம்** – ஆடை, உடை.

**சு.சொ** : 1. வழைந்து சென்றேன்.
**பா.வே** : 2. எழும்பிற்று.

I started on my evil pursuit illfated
Desrpite omens like the crossing of a blackcat
That occurred to prevent my plan so foul
Thus was I senceless in headlong slide downward
Weaving my way as a shadow
I did see guards and other folk in numbers large
Hiding myself like a fox I moved
And reached the place where I planned to find her(***Tāci***)
There beyond a wall big·and tall
Was the branch of a ***Vilvā*** tree
Removing a piece of cloth from person mine
I threw it on that treebranch to be hooked therein.
Even as I hurled the cloth thus.
So elated and elastic did I become
Rising like a ball thrown on the ground
I landed on the other side of the wall
Could a well be a hurdle to me ever
When I was  hellbent on grabbing that woman?

Would I not jump and clear mountains eight
If I colud get such a prize as a girl
Of beauty wondrous?

(தாசியைத் தேடுதல்)

பொருப்பெனும் மனத்திரத்தால் – வல்லவர்க்குப்
புல்லு மாயுதமென்று சொல்லுவதுபோல்
வரிப்புலிக் கூட்டத்திலே – சிறிதொரு
மான்குட்டி சென்றதென நான்கிட்டினேன் 55

கூடமுந் திண்ணைகளுஞ் – சவுக்கையும்
கொட்டகையும் மேல்வீடு [1]முத்தவெளியும்
நாடகச் சாலைகளும் – [2]சுத்திச்சுத்தி
நலியாமற் றேடியங்கே பலியாமல் 56

**பொருப்பு** – மலை. **மனத்திரத்தால்** – அசையாத மனத்தினால். **சவுக்கை** – சதுரத் திண்ணைக் கொட்டகை; காவற்கூடம், **முத்தவெளி** – முற்றவெளி. **சுத்திச் சுத்தி** – சுற்றிச் சுற்றி. **நலியாமல்** – சோார்வடையாமல். **பலியாமல்** – பயன் விளையாமல்.

பா.வே : 1. முற்றவெளியும் 2. சுற்றிச்சுற்றி

## Searchiñg for the *Tāci*

With determination ever so rocky and strong
And resourceful like one brave and talented
To whom even a blade of grass is a weapon formidable
I did venture like a fawn amidst tigers striped
These did I search for her
In the halls piales and square sheds
In the upper storey and the open terrace beyond
And in the dance halls as well
I did search in vain for her in places all.

(தாசியைப் பார்த்து ஆசை கொள்ளுதல்)

பாடக சாலையிலே – யங்கொரு
படுக்கையி லேபெண்கள் அடுக்கடுக்காய்

எட்டுப்பேர் தாசிகளும் – உறங்கினார்
எல்லார்க்கும் நடுவிலே யவளைக்கண்டேன் 57

புதையல் கண்டவர்போல் – கண்டுடல்
பூரித்து நின் றேனந்த நேரத்திலே
இதயம் பதறலுற்றது – தோளுங்
கண்ணுமிடந் துடித்ததையு மெண்ணாமல் 58

அங்கிருந்த விளக்கணைத்தேன் – அவளுக்கோர்
அயற்சியைக் கொடுத்தந்த முயற்சியிலே
கங்கணம் கிலுங்காமல் – தோழியர்
கைகளை யெடுத்தப்பாற் பைய்யவைத்துத் 59

**பாடக சாலை** – பாடும் இடம்; நாட்டியக்கூடம். **இதயம்** – மனம். **பதறல்** – பதட்டப்படுதல். ஆடவர்க்கு இடக்கண்ணும் இடத்தோளும் துடித்தல் தீக்குறி. **அயற்சி** – **அயர்ச்சி** – சோர்வு. **கங்கணம்** – கை வளையல். **கிலுங்காமல்** – ஒலிக்காமல்; ஒலி எழும்பாமல். **அப்பால்** – அப்புறம். **பைய்ய** – மெதுவாக.

### Cōracūran̲'s desire at the *Tāci*

At a ***pāṭākacālai***[1] in that mansion spacious
I did find a row girls in beds theirs
All eight of the ***Tācis*** were they fastasleep
Armidst them was there the ***Tāci***
Whom I did target.
As one who did discover a treasure
I became jubilant all over my body and mind
I was also tense some what then.
Without minding in my excitement fevereish
The ominous flutter of my left eye and shoulder
I blew out the lamp there
To make her exhausted in the darkness around
I gently moved aside the hands of her companions
Taking care that their bangles did not jingle

***1. pāṭākacālai*** - a hall for singing

**(தாசியைத் தூக்கி வருதல்)**

துடைக்குள்ளே யொருகையும் – [1]அவளுட
தோளிலே யொருகையும் நீளவிடுத்து
இடைக்கொடி துவளாமல் – அவளைக்கை
இரண்டிலு மெடுத்துக்கொண் டிப்பால்வந்தேன் 60

கொங்கைகள் கொஞ்சச்சுமையோ – நிதம்பங்கள்
குன்றமல்ல வோகுழல் கொண்டலல்லவோ
அங்கதைச் சுமக்கப்போமோ – மோகத்தி
னாலே நெட்டிப்பொம்மை போலிருந்தது 61

சித்தெனும் ராமீசர் – சிறைகளைத்
தீவினை யான்செய்த பாவம்வந்து
பத்தடி நடக்குமுன்னே – யிருகண்ணும்
பட்டுக்கட்டி னாற்போலாச்சுத் தட்டுக்கெட்டங்கே 62

வேட்டை நாய்தனை மிதித்தேன் – வள்ளென்று
விழுந்துபிடிங் கித்தெந்தன் முழங்காலிலே
[2]ஆட்டுக் கறிபோலே – விலையிட்டால்
அரைப்பணக் கறியுண்டு சரித்திட்டுதே 63

நரிக்குரல் கடலைமுட்டும் – அதுபோல
நாய்க்குர லொருசத்தம் கேட்குமுன்னே
இருக்கிற நாய்களெல்லாம் – குலைத்ததவ்
விரைச்சலைக் கேட்டெழுந் திருச்சுவிட்டார் 64

**நீள விடுத்து** – நீட்டி விடுத்து. **இப்பால்** – இப்புறம். இவ்விடம். **கொங்கை** – முலை. **நிதம்பம்** – பிருட்டம்; இடுப்பின் கீழ் பக்கம். **குன்றம்** – மலை. **குழல்** – கூந்தல். **கொண்டல்** – மேகம். **சித்து** – சித்தி. **ராமீசர்** – இராமேசுரத் தலத்திறைவர். **சிறைகளை** – பாதுகாப்பான பெண்களை. **பட்டுக் கட்டினாற்போல** – மெலிதான பட்டுத்துணி கட்டியது போல். **இரைச்சல்** – சத்தம்.

**பா.வே :** 1. அவளுடைய 2. ஆட்டுடற்.

## The *Tāci*'s abduction

Placing one of my hands on her thigh
And another on a shoulder hers
And without allowing her slim wait to limp
I carried her in both hands mine
Quite heavy were her breasts indeed
Like a pair of mountains were her buttocks
Were not her locks dark clouds veritable?
Not an easy task carrying such a load
To me driven by lust and passion
She was as light to carry as a *Neṭṭi*[1] doll
Even before I could walk a mere ten steps
Being deprived of ***Irāmīcar's*** support and grace
And with the evil impact of my misdeeds closing in
My eyes became lazy as if I were blind folded
With a silken cloth tied around them.
Unaware and unsure of what I was doing them
I trampled upon a hound like dog ferocious
The dog barked furriosly and also bit me.
And tore out a big chunk of flesh from my knee
So much meat as would have cost half a ***paṇam***[2] for sure
On hearing the dog's bark so many other dogs miachorus
Started barking to make the guards and soldiers these
To make up and find out the cause of commotion

1. *Neṭṭi* - a corklike stal of aquatic pith plant
2. *paṇam* - a monetary unit of those days.

**(காவலரால் துன்புறுதல்)**

காவலர் வீரரெல்லாம் – நானந்தக்
கட்டழகி தன்னைவிட்டேன் சுட்டசட்டிபோல்
தீவட்டி வெளிச்சங்கண்டேன் – அங்கொரு
செப்புக்கி டாரத்தினுட் பதுங்கினேன் 65

அரண்மனை சோதித்தபேர் – மயக்கமுற்று
அங்கனே கிடக்குமந்த மங்கையைக்கண்டார்
கருவுள்ள திருடனவன் – என்றுவழி
கட்டிக்கொண்டு சல்லடை இட்டுப்புடைத்தார் 66

நடுக்க மெடுத்ததெனக்கு – காலுங்கையும்
நானசையக் கொப்பரையுந் தானசையாதோ
கிடுகிடென் றசைந்திட்டதே – வுதைவிட்டுக்
கிளம்பினே னென்புத்தி கெட்டதைக்கேளும் 67

**செப்புக் கிடாரம்** – செம்புக் கடாரம்; செப்புக் கொப்பரை. **கருவுள்ள** – புத்திக் கூர்மையுள்ள. **சல்லடை இட்டுப் புடைத்தார்** – எல்லா இடங்களிலும் குத்தினார். **கொப்பரை** – பெரும் பாத்திரம்.

## Cōracūra<u>n</u> torchered by guards

I dropped the ***Tāci*** as if she were a bowl so hot
I did see the burning torchers of the guards
And hid myself in a big copper vessel
Those who rushed there in hot persuit
Did find the womam lying unconscious
This fellows is a thief quite resourceful
They commented among themselves
And searched in all places as if with a sieve
I trembled in right at the predicament mine
With my hands and legs thus moving
The ***Kiṭāram***[1] also did clang but loudly
Kicking my way out of that vessel.

*1. Kiṭāram* - a big vessel

**(சோரசூரன் பல்வேறு துன்பங்களடைதல்)**

செலதாரைக் குள்நுழைந்தேன் – மூக்குமயிர்
சிந்திப் பொசுங்கிப்போச் சந்தநாத்தம்
நல்லதென்றி ருக்கையிலே – காதிலே
நாக்குப்பாம்பு நுழைந்து [1]தாக்குமய்யோ 68

மூளையி [2]லேறிட்டுது – அதைவிட
முடிந்துபோ னாலுமெத்த முக்கியங்காண்
கேளுமோர் அவதிதன்னை – இப்படிக்
கெதிகெட்ட வேளையி [3]லிதுபத்தாமல் 69

நாய்க்கடிக் காயத்திலே – பிள்ளைப்பூச்சி
நாலாறு நுழைந்தது ராமராமா
வாக்கிட்டுச் சொல்லப்போமோ – [4]அதுபூந்து
வறட்டையி லேயோரு [5]முரட்டுப்பயல் 70

தண்ணீரைச் சாய்த்துவிட்டான் – மூச்சுவிடத்
தடைப்பட்டு நானந்தக் கிடையைவிட்டு
விண்ணாந்து வெளிப்பரிந்தேன் – பரியுமுன்
விட்டதண்ணீ ரங்கேதடை பட்டதைக் கண்டு 71

குத்தினார் தடியைக் கொண்டு – அதிலொரு
குத்துவந்தென் பீசத்திற் றைத்துவிட்டது
பெற்றது மோசமென்றே – இத்தனையும்
பெருமையாய்த்தோனுமந்தப் பெண்கிடைத்தால் 72

வீண்துன்பப் படலாமோ – செலதாரை
[6]விளிம்புபட் டுடலெங்குந் தழும்புபட
மீண்டந்தப் புறம்பரிந்தேன் – அங்கேயும்
விட்டதில்லை யென்னைத் தொட்டசனியன் 73

நீராவிக் கொல்லையது – மரங்களின்
நிழலிலும் பூஞ்செடித் தழைகளிலும்
தூரத் தொளித்தொளித்து – வரயிலோர்
சுப்பியொடிந் ததிலொரு கொப்பசைந்தது 74

அசைகைகண் டங்குவளைந்தார் – வளையவும்
அப்படியே உயரொரு கொப்பில்தொத்தினேன்
முசுறங்கே தலைப்பட்டுது – மயிர்க்கொன்றையாய்
மொய்த்துக்கொண்ட துளிச்சல் பத்திக்கொண்டது 75

குருவிகள் கலைந்திட்டது – யேகத்திற்
கூக்குர லாச்சுதினிப் போகக்கடியெங்கே
மரமெங்கும் வளைந்துகொண்டார் – அவரொரு
மரந்தேட நானொரு மரந்தாவப் 76

**செலதாரை** – கழிவுநீர் செல்லும்படி மேற்புறம் மூடியமைத்த வாய்க்கால். **நாத்தம்** – நாற்றம்; கெட்ட வாசனை. **நாக்குப் பாம்பு** – நாக்குப் பூச்சி; மண்புழு. **முடிந்து போனாலும்** – செத்தாலும். **அவதி** – துன்பம். **கெதி கெட்ட வேளையில்** – போக்கற்றபொழுதில். **இது பத்தாமல்** – இது போதாமல். **நாலாறு** – நான்கு + ஆறு. **பூந்து** – புகுந்து. **வறட்டையிலே** – பிறாண்டையிலே; துன்பப்படுத்தயிலே. **கிடை** – இருப்பிடம். **விண்ணாந்து** – விண்ணானம் – நாணம்; நாணமுற்று. **வெளிப்பரிந்தேன்** – வெளியே விரைந்து வந்தேன். **பரியுமுன்** – வெளியே வருமுன். **பீசம்** – விதை. **நீராவிக் கொல்லை** – தடாகத்தோடு கூடிய வீட்டில் கொல்லை. **சப்பி** – காய்ந்த சள்ளி. **கொப்பு** – கொம்பு; மரக்கிளை. **அசைகை** – அசைதல். **முசறு** – முசிறு – செந்நிறமுள்ள எறும்பு வகை. **தலைப்பட்டது** – தோன்றிற்று. **போக்கடி** – போக்கு – போக்கிடம்.

**பா.வே :** 1. தாக்கிற்றையோ 3. லிதுபற்றாமல் 4. அதுபுகுந்து.
**சு.சொ :** 2. லேரிட்டுது 5. முறட்டுப்பயல் 6. விழிம்புபட்.

I entered a drainage canal there
As my misfortune would have it
The stench was so foul as to burn and hurt nostrils mine,
Even as I tried to put up with it.
An earthworm entered my ear to torment many further
I could feel the turtuse straight in my brain
I felt it would be better to die then and there
In such an illfated plight miserable
Four or five ***piḷḷaippūcci***[1] insects crawled
Over my dogbitten knee sore and wounded
As I was suffering from such miseries indescribable
A brutal fellow there drained a lot of water there
On seeing the water not flowing freely in the canal
With a big stick they did probe and pierce
To remove the block and in the process such.
The sharp stick did pierce my testicles
Even then I thought that all this torture
Would redound to my glory
If only I could get hold of that ***Tāci***
Should I suffer in such endeavous wasteful?
With scars all over body mine
Bruised by the sharp edger of the ***Calatārai***[2] thus
I did go out the other way
Even then my misfortune dogged at my heels

Not leaving me in peace for a moment
It was a grove with a pond therein
As a walked through shady trees
And amidst the foliage of flowers laden plants
All the while hiding myself
A drytwig snapped and a treebranch moved
On hearing the sound and movement such
My pursues rushed in that direction
I jumped up and clung to a treebranch there
Lo! a bunch of hairy red ants vicious swarmed over me
I felt a burning sensation all over
The birds in the tree dispersed noisily
On account of all the clamour and commotion
The charing guards did surround the tree
With no chance to escape from relentless pursuers such
I hopped from one tree to another

1. *piḷḷaippūcci* - a harmlers but annoying insect
2. *Calatārai* - a drainage canal with a lid above

**(சோர சூரன் பிடிபடுதல்)**

[1]பறவைகள் காட்டிக்கொடுக்க – இப்படியாய்ப்
பாவோடினேன் தப்பிப் போவோமென்றே
குறிதப்பிப் போய்விட்டது – முருங்கையின்
கொப்பைப்பிடித் தொடிந்து போய்க் குப்புறவீழ்ந்தேன். 77

கேணித்தண் ணீருக்குள்ளே – எருமைக்
கிடாப்போல் விழுந்தால் சத்தம் கேளாதோ
மாணுற்று வந்துவளைந்தார் – வளைந்தவர்
மத்தாப்பு வெளிச்சத்தி லுத்துப்பார்க்கவே 78

நட்டகட்டை போலிருந்தேன் – கண்டுகொண்டு
நாக்குவளைத் ததட்டினார் கூக்குரல்வைத்தார்
பெட்டிமகன் றனைப்பாரும் – நம்முட
பேரும்நம் காவலும் பிளந்ததென்பார். 79

**பாவோடினேன்** – நெசவாளர் பாவில் குழல் சென்று திரும்புதல் போல் யானும் சென்று, சென்றவழியில் பாதுகாப்பு மிக்கிருந்தமையால் சென்றவழியே திரும்பி, இப்படியே பலவழிகளிலும் திரிந்தேன். **முருங்கை** – முருங்கை மரம். **கேணி** – கிணறு. **மாணுற்று** – நிறைந்து; மிகுதியாகி. **பெட்டிமகன்** – பொய்மகன்; வேசை மகன்.

**சு.சொ :** 1. பரவைகள்.

## Cōrācūra<u>n</u> apprehende

In exercise such to escape
I did cling to a flimy branch of a ***muruṅkai*** tree
Which snapped under my weight
And I fell down on the ground below
With a thud so loud and noisy
As a buffalo falling in a well full of water
In numbers large the guards surrounded me
And stared at  me in the light of burning torches
I lay there like a log of wood implanted
On seeing me they did scold and shout at me
With their lashing tongues they said
"See this sun of a bitch
Who has brought dishonour to our duty as guards
And also tarnished our reputation"

**(காவலரின் பேச்சுகள்)**

நாயல்லோ சொல்லிவிட்டுது – அல்லாமல்
நாங்காண்ப தேதிவனைப் போங்காணென்பார்
ஆயிரங் கள்ளர்களை – ஒருமிக்க
அழித்துச்செய் வித்தவன் தொழிற்காரனென்பார் 80

அவகடப் பட்டுவீழ்ந்தான் – அல்லாமல்
அம்புலி மானையும் நெம்புவானென்பார்
இவனுட திறம்பார்த்தால் – கேணியி
லிருக்கையிற் பிடிப்பதும் வருத்தமென்பார் 81

இவளவு காவற்குள்ளே – வந்தானே
யெமனுக்கு மிவன்துணி வில்லையென்பார்

அவரவர் நினைத்தபடி – கட்டுமென்பார்
அடியுமென்பார் கைகளைப் பொடியுமென்பார் 82

[1]இடறுங்கள் தலையையென்பார் – ஐயோவென்
றிரங்குவா ரதிலொரு வருங்காணேன்
வடுகர்கள் ஓடிவந்து – யெந்தமஞ்சி
[2]வாடுனிவுன் னாடுதொங்கப் பாடுக்கோடென்பார் 83

பருத்த மராட்டியர்கள் – வந்து
பளால்பக்காச் சோர மளாலென்பார்
வருத்திய கன்னடியர் – ஓடிவந்து
வள்ளேகள்ளன் சிக்கிதன் நல்லாவென்பார் 84

பட்டாணிச் சேவுகர்கள் – ஓடிவந்து
பகடோபக டத்தேரிப் பாணிச்சோ ரென்பார்
எட்டானைப் பெலனுண் டென்பார் – ஆயுதங்கள்
இடுப்பிலே யிவனுக்குண் டடக்கமென்பார் 85

பெட்டிப்பாம் பென்னசெய்யும் – அதுபோலப்
பேசாதி ருப்பவன் பாசாங்கென்பார்
விட்டுப்பார்த் தால்தெரியும் – கொப்பத்தில்
[3]வீழ்த்திய யானைக்கெங்கே ஓட்டமென்பார் 86

கொக்கரிப்பார் குதிப்பார் – யென்கையால்
கொல்லவேணு மென்றுதுரை சொல்லுவாரென்பார்
வக்கணை பேசுவதும் – யேசுவதும்
வரம்பில்லை யவர்நாக்கில் நரம்பில்லையே. 87

**அவகடம்** – வஞ்சகம். **அம்புலிமான்** – சந்திரன். **இவளவு** – இவ்வளவு. **யெமன்** – எமன். **இடறுதல்** – தட்டிவிடுதல். **வடுகர்** – செலுங்கர். **கன்னடியர்** – கர்நாடகத்தார். **யெந்த... பாடுக்கோ, பலால் பக்காச் சோரன் மளால். வன்னே, கள்ளன் சிக்கிதன், பகடோ, பாணிச்சோர்** – திருட்டுப்பயல் சிக்கினான் பிடியுங்கள். **பட்டாணிச் சேவுகர்** – உருது மொழி பேசும் முகம்மதிய வேலையாள். **எட்டானை** – எட்டு + ஆனை; எட்டு யானை. **கொப்பம்** – யானையைப் பிடிக்க வெட்டப் படும் பள்ளம், ராஜாதிராஜன் போரிட்ட இடம். **துரை** – இங்கே 'துரை' என்றது சேது வேந்தர் பெருமானை. **வக்கணை** – நிந்தனை.

சு.சொ : 1. இடருங்கள்.
பா.வே : 2. வாடுரவுன் னாடுதொங்க வாடு போடென்பார் 3. விழுத்தியவானைக்கெங்கே

## The comments of the guards

"Had not the dog barked we could not have seen him"
Said the guards and added
"This fellow is an expert indeed
A thousand burglars melted and rolled into one
In his deceit foul did he fall
Otherwise he would lift even the moon"
Had he remained in the well it self
We could not have caught him
Such is his dexterity, they observed
'He had penetrated this place guarded so heavily
Even **yamaṉ**[1] would not dare an attempt such
The guards thus discussing among themselves
Did also give instructions as they pleased
To bind and beat me and break my hands
Some others shouted that my head be trampled upon,
Among all the guards none did pity my plight
Speaking in their mother tongues respective
***Vaṭukar***[2], ***Marāṭṭyiar***[3] and ***Kaṉṉaṭiyar***[4]
***Paṭṭāṇi***[6] rushed there and shouted
'A ***pakkā***[5] thief is this fellow catch him'
'He is as strong as elephands eight
And he carries weapons in his waist'
'He keeps quiet as he is a trapped snake now
If he is let free his true colours he will show
Like an elephant fallen in a ***koppam***[7] is he,
He cannot run and escape'
Thus they did speak about me
In anger such they pounced on me scolding
No limit there was for tonguelashing theirs
'Our king would like to kill this fellow
With his own hands' they said.

*1. Yaman* - The god of death
*2. Vaṭukar* – Telugu speaking communities
*3. Marāṭṭiyar* - the people of Maharastra
*4. Kannaṭiyar* - Native Of Karnataka
*5. Pakkā* - Really strong
*6. Paṭṭāṇi* - Natives of Afghanistan
*7. Koppam* - a pit to catch wild elephants, one of the battle field.

**(காவலர்கள் இறுக்கிப் பிணைத்தல்)**

இதுக்கெனக் கிளப்பமென்ன – வுலகத்தில்
இளைத்தவன் தேவியெல் லோர்க்கும் பத்தினி
[1]பிதற்றுரார் போவென்றுநான் – சும்மாகல்லுப்
பிள்ளையார் போலிருந்தே னுள்ளதுண்டன்று 88

இப்படி யிருக்கையிலே – கயிற்றைக்கொண்
டேணிவழி யிருவரி றங்கிவந்து
கைப்பிடித் திறுக்கக்கட்டிக் – கரையேற்றிக்
காவற்புரைக்குள் [2]வைத்தார் கோபத்துடன் 89

காலொடு கைகளுக்கும் – வெவ்வேறு
கட்டைகள் நுழைத்ததிற் குட்டையடித்தார்
நாலுபுற முமிருந்தார் – அவர்சிவன்
ராத்திரிகொண் டாடினார் நான்தூங்கினேன் 90

**இளப்பம்** – ஈனம்; ஏளனம். **பத்தினி** – மனைவி. **காவற்புரை** – காவல்செய்வோர் தங்குமிடம். சிவராத்திரி கொண்டாடினார் என்றது, சிவராத்திரி விரதமிருப்பவர் அன்று இரவு முழுவதும் கண்விழித்திருப்பதுபோல அன்று இரவு முழுவதும் காவலர்கள் கண்விழித்து என்னைக் காவல் புரிந்தனர் என்றபடி.

**சு.சொ** : 1. பிதத்துறார்
**பா.வே** : 2. வந்தார்.

## Cōrācūraṉ's hands and legs bound tightly

As the guards thus did chatter among themselves
I did remain passive and silant like ***kalluppiḷḷaiyār***[1]
As if all that scolding scornful did not concern me

"In this world of ours the wife of aweakling
Will be deemed the wife of all and sundry"
I did muse thus on my hapless plight then
At the juncture such two of them guards
Came down from a ladder bringing a rope there
They tied my hands quite tightly
And placed me in the guardroom
Securing my legs too with pieces of wood to tigten the grip
They stood around me on all sides four
In revelry theirs the guerds did celebrate ***Civarāttiri***[2]
Whereas I slept but soundly for sure.

*1. kalluppiḷḷaiyār* - a stone idol of god **Vināyakār**
*2. Civarāttiri* - National worship of Lord **Civa** as a ritual by keeping away all night long

**(சேதுபதியிடம் கொண்டு செல்லுதலும் சேவகர் கூற்றும்)**

மறுநாள் விடியுமுன்னே – சேதுபதி
மண்டலா திபன்முன்பு கொண்டுபோய்விட்டார்
சிறைகொள்ள வந்தகள்ளன் – [1]எந்தன்
திறமுமவர் கள்செய்த மறமுஞ்சொன்னார் 91

துரைமக்கள் படைத்தலைவர் – சேவுகர்
சுற்றத்தார் களுமென்னை யுற்றுப்பார்த்துக்
குருவிபோல் பதுங்கிநின்றாய் – யென்னடா
குக்கலேயுனக் குத்தேங்காய் தக்குமோவென்பார் 92

நடுச்சபை தனிலேவந்து – அஞ்சாமல்
நமக்கென்னென் றிருக்கிறான் சமத்தனென்பார்
[2]இடுக்கமித் தனையாலும் – முகத்திலே
[3]யெவ்வளவும் வாட்டமில்லை கவடனென்பார் 93

இமைச்சிமிட் டலைப்பாரும் – இத்தனை
யெடுத்துச்செய் தவனேதுக் கிளைப்பானென்பார்

சுமக்கொண்ணாச் சுமையெடுத்தான் – இவன்றன்னைச்
சும்மா [4]விடப்படுமோ வம்மாவென்பார் 94

[5]தூண்டினிற் போடுமென்பார் – நீறிய
சுண்ணாம்புக் கால்வாயிற் சுடுவோமென்பார்
பாண்டிமண் டலத்தினிலேநீ – யெங்கிருந்தாய்
பாவியென் பாரடாமூ தேவியென்பார் 95

தானா [6]பதிக்கமென்று – வேஷங்கொண்ட
சண்டாளத் துரோகியிவ னன்றோவென்பார்
சேனா பதியரெல்லாம் – இதுசொல்லச்
சேதுமன் னனுஞ்சில [7]செய்திசொல்வான் 96

**சேதுபதி மண்டலாதிபன்** – சேதுபதி மன்னன். **சிறை கொள்ள** – அடிமைப் பெண்களான தாசிப்பெண்களைக் கவர்ந்து செல்ல. **மறம்** – வீரம். **குக்கல்** – நாய். நாய்க்கு முழுத் தேங்காய் பயன்படாதவாறு போல நாயினுங் கடையனான உனக்குத் தானாபதிப்பதவி பயன்படாது. நிலையாது என்றவாறு. நாய்க்கு முழுத் தேங்காய் பயன்படாதது போல அவனுக்கு ஆடன் மகளையடைதலும் கிட்டா தாயிற்றெனலும் ஆம். **தக்குமோ** – கிடைக்குமோ. **சமத்தன்** – திறமையாளன். **இடுக்கம்** – இடுக்கண்; துன்பம். **கவடன்** – வஞ்சகன். **வேஷம்** – வேடம்.

**பா.வே :** 1. என்றென் 2. இடுக்கணித் 3. எள்ளளவும் 4. விடப்போமோ 5. தூண்டியிற் 6. பதியமென்று. 7. சேதிசொல்வான்.

## Cōrācūran brought before Cētupati

Even before it dawned the nextday
The guards in custody theirs
Brought me before the ***Cētu*** king and told him
Of my audacity outrageous and their alert action
In capturing me red handed in my attempt
To kidnap the ***Tāci***
The nobler,commanders, guards and relatives theirs
All of them did stare at me and remarked
'You stand now here like a docile bird diffident
But you are a dog out to grab a coconut luscious
Which you do not deserve at all'
'See this crook so cool headed as to stand here

In this open court royal
Absolutely fearless and unconcerned,
A gritty and clever fellow indeed'
See his face so clear with not a trace of fear
Not a whit affected is he despite struggle such
A scoundrel he is ofcourse
See his winking eyelashes
A daredevil who had done havoc such
Would he hesitate to do anything else?
This fellow did carry such a precious load unbearable,
And get away with it,
Should he be left unpunished?
'For him in a hook'said someone
Dump him in a limekils hot to roast therein
Where in ***Pāṇṭimaṇṭalam***[1] were you before
Thou rank sinner?'they asked
'You are a ***mūt ēvi***[2] indeed they said
A ***caṇṭaḷa<u>n</u>***[3] treacherus is this traitor
In the guice ***Tā<u>n</u>āpati*** isn't he?
Said the ***Cē<u>n</u>āpatis*** all there thus
On hearing such remarks theirs
The **Cētu** king did express his views further.

*1. Pāṇṭimaṇṭalam* - The region of Pāṇṭiya rulers in Tamilnadu
*2. mūt ēvi* - an inaspicious deity or person who spell evil and bad occurrences.
*3. caṇṭaḷa<u>n</u>* - a vicious traitor or loubred person

**(சேதுபதி கேரள அரசனிடம் அவனை ஒப்படைத்தல்)**

பெருமைபெற் றிருந்தவரே – தானாபதிப்
பிள்ளையவர் களேயென்ன கொள்ளையுமக்கு
திருடவும் படித்தீரோ – வென்னென்று
தேறுவீரோ கழுவி லேறுவீரோ? 97

மலைநாட் டரசனுக்கு – வேணுமென்று
வாய்த்தீரே யிதைவிடக் கீர்த்தியுண்டோ

கொலைநாஞ் செய்வதில்லை – யிவன்றன்னைக்
கொண்டுபோய் விடுங்களவ ரண்டையி லென்றான் . 98

என்றலும் [1]பிடித்தனர்கள் – சேவுகர்
இருவதுபேர் கத்தி யுருவிவரச்
சென்றங்கு கொணர்ந்து விட்டார் – கேரள
தேசத் தரசனென்னை யேசிச்சொல்வான். 99

**கழு** – கழுமரம். **மலைநாட்டரசன்** – கேரள அரசன்; **கீர்த்தி** – புகழ்; பெருமை. **அவரண்டையில்** – அவரது பக்கத்தில். **யேசி** – திட்டி.

பா.வே : 1. பிடித்தார்கள்

## Cētupati hands over Cōrācūra<u>n</u> to the keraḷa king

"Oh ,**Tā<u>n</u>āpati piḷḷai** held in great esteem here
What went wrong for you to act like thus?
Did you learn to steal also among arts other
How would you reconcile yourself to this situation awkward".
Or would you accept impalement in a ***Ka<u>l</u>u***?'
Thus scolding me **Cētu** king also observed
In a mocking tone sarcastic as follows
'Joining service under the **Kēraḷa** king
You have brought him great credit indeed'
Then he ordered his men to hand me over
To the **Kēraḷa** king for further action
Twenty guards with their swords drawn
Surrounded and led me
To the **Kēraḷa** king who looked at me
And said

**(கேரள அரசன் கோபமுற்று உரைத்தல்)**

சுடுந்தொழிற் செய்தாயடா – யேண்டாசண்டித்
தொழுவாடி கள்ளக் கழுவேறி
மடந்தைய ருனக்கில்லையோ – இப்படி
மட்டித்தொழில் செய்தவுன்னை வெட்டினாலென்ன 100

விருந்திட்டுப் பகையழைத்தாய் – சாமித்துரோகம்
விடுமோ வுடனேகாட் டிடுமல்லவோ
வரம்பற்ற கொடுமைசெய்த – இந்தத்துன்
மார்க்கனைப் புறத்தே [1]யகற்றிடென்றான் 101

**மடந்தையர்** – பெண்டிர். **மட்டித்தொழில்** – கீழான செய்கை. **துன்மார்க்கன்** – தீயகுணமுடையவன்.

**பா.வே :** 1. புகற்றுமென்றான்.

## Kēraḷa king's angry utterances

You did commit an act so evil
Thou art a leprous loafer to be impaled for sure
Don't you have womenfolk in household thine?
For this mean act of yours
Why not we cut you to pieces?
If we inivite our foes to a feast
Would they not show their true colours treacherous?
And betray there nature ungodly?
Remove this vicious scoundrel who did exceed limits
In the foul action his
Away from me and out of my sight'

**(ஞானியாரிடம் கொண்டு செல்லல்)**

நாய்க்குண்டோ நல்லபதம் – அங்கிருந்து
ஞானியர் முன்புகொண்டு போனார்களே
[1]தாய்க்காகா தார்க்காவான் – ஞானியர்
சந்தோஷப் படுவாரோ வென்றோஷத்தை 102

உடலெங்கும் நடுங்கிச்சொல்வார் – நமக்கிங்கே
உள்ளமுற் றிருந்தாயெடா கள்ளப்பயலே
கிடையாத பொருள்களெல்லாம் – உனக்கெம்மைக்
கேட்டால் நாம்கொடுக்க மாட்டோமோ ? 103

**ஞானியர்** – ஈச்சுரயோகியார். **தாய்க்காகா தார்க்காவான்** – தாய்க்கு ஆகாதவன் யாருக்கு ஆகுவான்.

**சு.சொ :** 1. தாய்க்கல்லா தாற்காவண்.

## Cōrācūra<u>n</u> taken to Īsvarayōki

'For a mean dog like me is there salvation any?
I was brought to the presence
Of my holy mentor **Īsvarayōki**
A man like me whom even his mother cannot endure
Can he pass muster with others?
Will my holy patron be pleased
With my misdeeds so atrocious?
Trembling with anger my mentor said
"You did pretend sincese service here
Foul thief are you for sure
Even if you desired anything rare
Would we not have provided thee?

**(கேரள அரசன் சேதுபதியிடம் திரும்ப அனுப்புதல்)**

தலையி லெழுத்திருந்தால் – உனைச்சும்மா
தரிக்கொட்டு மோவிந்தத் திருக்கிட்டது
கொலைசெய் யொண்ணாதிவனைக் – காலுங்கையுங்
குறைத்தொருகால் கையோடே துரத்துமென்றார் 104

அரசனும் அதுகேட்டு – இதுக்கெல்லாம்
யாத்திரை வந்தநாம் பாத்தியமோ
துருவனாஞ் சேது மன்னன் – இடத்திலிந்தத்
துட்டப்பய லைக்கொண்டுபோய் விட்டிடுமென்றார் 105

**தரிக்கொட்டுமோ** = தரிக்க + ஒட்டுமோ; **தரிக்க** – தங்க; இருக்க. **திருக்கு** – தீவினை. **யாத்திரை** – பிரயாணம். **பாத்தியம்** – பொறுப்பு. **துருவன்** – அழிவில்லாதவன்.

## Cōrācūra<u>n</u> sent back to Cētupati

'If you are destined to come to grief by evil these
Would you keep quiet?
To prevent him from further crime as murder heinous,
Amputate one of his legs and one of his hands
And drive him away' he said

The **Kēraḷa** king on listening to the suggestion thus
Differed and said,
'Are we to mete out such a punishment severe
To this fellow when we are on a pilgrimage?
Let us not assume such responsibility onerous
Take this scoundrel to the **Cētu** king
"Of repute immortal
Thus said the **Kēraḷa** king.

**(சேதுபதி தண்டனை தருதல்)**

அங்கிருந் திங்குகொணர்ந்தார் – யோகியர்சொல்
லாக்கினையு மரசன்சொல் வாக்கியமும்
இங்கித முந்தெரிந்து – மன்னுயிர்க்
கிதமா கியசேது பதிராஜன் 106

தலையாரி களையழைத்துக் – காலுங்கையுந்
தட்டிவிடு மென்றுகத்தி தொட்டுக்கொடுத்தான்
சொல்வதைக் கேட்டுடனே – சாமி நான்
துன்பப்பட மாட்டேனென்று கும்பிட்டுவீழ்ந்தேன் 107

கண்ணிரெண்டும் அவிந்தபின்பு – சூரியநமஸ்
காரமென் னடாவென்றார் காரியஸ்தர்
பண்ணுமணை கடந்தவெள்ளம் – திரும்புமோ
பதிசொன்ன [1]திருவாய்க் கெதிர்வாயுண்டோ 108

அப்புறங் கொணர்ந்து விட்டார் – விட்டுக்குரங்
காட்டமாட்டி னார்தெருக் கூட்டங் கூட்டினார்
எப்படிச் செய்தாலும் – யெனக்கங்கே
யேனென்று [2]கேட்பவ ரெவருமுண்டோ 109

கொண்டையைக் குலைத்துவிட்டார் – மாப்பிள்ளைக்
கோலமென் றெருக்கம்பூ மாலையிட்டார்
பெண்டுகொள் திருட்டுப்பயல் – இவனென்று
பேரிகை யடித்தனர் ஊரெங்கும் 110

பாளையம் புறப்பட்டாற்போல் – யென்றனைப்
பார்க்கப்புறப் பட்டார்க ளூர்க்குளுள்ளோர்

ஆளுட னாள்தள்ளி – ஒன்றுக்கொன்று
[3]அடிபட்டுது அந்தக் கடைத்தெருவில் 111

[4]என்னுட ராஜாங்கம் – யானையில்
ஏறியுந் திட்டிவாச லானேன்நான்
உன்னிய மகிழ்ச்சிகொண்டு – நமக்கிது
ஒருநா ளானாலுந் திருநாளென்று 112

மெய்யிறு மாப்புடனே – தோளிலே
வேட்டியை வல்லவட்டுப் போட்டுக்கொண்டு
கைகளை வீசிக்கொண்டு – யென்னிடத்திற்
காத்திருந்த வர்களெல்லாம் பார்த்திருக்க 113

**யோகியர்** – ஈச்சுர யோகியார். **ஆக்கினை** – ஆணை; கட்டளை; தண்டனை. **இங்கிதம்** – குறிப்பு; சமயோசித நடை. **இதம்** – இன்பம்; நன்மை. **தலையாரி** – கிராமக் காவற்காரன். **கத்தி** – வாள். **காரியஸ்தர்** – மேலதிகாரி. பதி **சொன்ன** – சேதுபதி வேந்தர் சொல்லிய. **கொண்டை** – தலைமுடி. **பெண்டு** – பெண். **ராஜாங்கம்** – இராசாங்கம்; அரசாட்சி. **யானையில் ஏறியுந் திட்டி வாசலானேன் நான்** – சேது வேந்தருக்குத் தானாயதியாகியும் அதற்கேற்ற சீரிய செயல் செய்யாது, திருட்டுத்தொழில் செய்த செயலுக்கு, யானையேறிய ஒருவன் அதற்குத்தக்க ராசவீதியில் பவனி செல்லாது திட்டிவாசலை எதிர்ப்பட்டு யானையினின்று இறங்கிய செயலை உவமை கூறினார். 'யானையேறியும் திட்டிவாசல்' என்பது பழமொழி. **உன்னி** – நினைத்து. **மெய்** – உடல். **இறுமாப்பு** – செருக்கு. **வல்லவட்டு** – வல்லவாட்டு – பூணூல் போல இடத்தோளின் மேலிருந்து அணியும் ஆடை.

**பா.வே** : 1. திருவாக்குக் கெதிர்வாக்குண்டோ 3. அடிச்சடி பட்டதந்த. 4. என்னுடைய
**சு.சொ** : 2. கேழ்ப்பவ ரெவருமுண்டோ.

## Cētupati awards Punishment

I was brought then before the **Cētu** king,
Who paying need to the verdict of the ***yōkiyar***
And the opinion of the **Kēraḷa** king,
Did in discretion as a king benevolent
Towards the lives of his subjects
Grdered his ***Talaiyāries***[1] to chop
My hand and leg
He touched the knife meant for that purpose
And handed it over to his men

On hearing that edict of his
I fell at his feet crying
'Oh' sire I can't bear such punishment grievous'
On hearing my frantic plea for mercy
The king's ***kariyastar***[2] did remark
'Can you peform sunworship
After you have gone blind In your eyes both?'
Can the flood which has breached the dam
Return ever?
Will the edict of the great **Cētu** king
Ever be retracted or opposed?
Can there be two opinions on his order?'
Then they led me to the streets
Like a monkey was I made to act and perform
Shunted from pillar to post by the guards
Gathered people to witness my plight
However they treated me or teased
None was there to question them or support me
They disherelled my ***Koṇṭai***[3]
And did garland me with ***Erukkam***[4] flowers
Calling me a bridegroom in decision on theirs
They did beat their drums and declared me
As a womanizer stealthy
With such a publicity for my action notorious
People turned up in numbers large
In the bazaar street there was a jostling crowd
All of them pushing forward to have a look at me
What an irony my shortlived glory as ***Tāṉāpati*** had been?
Meanet to mount an elephant in a status elevated
And make a majestic round of the main streets royal
I had to eat humble pie at the ***Tiṭṭivācal***[5]
Stripped of honour and put to shame in public
However I did feel elated at my dubious distinction
Of finding myself mobbed by a curious joining crowd
Deemed it as an occasion festive for me
I walked jauntily with my shawl folded

As a *vallavaṭṭu* around shoulders mine.
Moving my hands back and forth but haughtily
I walked round the streets for all to see
As in a procession proper.

*1. Talaiyāri* - a foreman among memial servants
*2. Kāriyastar* - manager or supervisor in a household or estate or palace
*3. Koṇṭai* - tuft of hair
*4.Erukkam* - Vercum wild plant with corrosive sap and palepink flowers
*5.Tiṭṭivācal* - A wicketgate used by people when the main gate of a fort or palace is closed.

**(காலுங் கையுந் துண்டிக்கப்படுதல்)**

சட்டமாய்ப் பவனிவந்தேன் – தெருவெல்லாந்
  தாண்டிவந் தாக்கினைத் தலத்தில்வைத்து
வெட்டினார் காலுங்கையும் – இருதுண்டாய்
  விழுந்துதென் [1]காலுங்கையுஞ் சுழன்றிடவே 114

துடித்துத் துடித்துநொந்து – ரெத்தவெள்ளம்
  தோயவிழுந்தேன் மூர்ச்சை போய்விட்டது
கிடைக்குள்ளே கிடந்துழன்று – ஈமொய்க்கக்
  கிருமிகள் மொய்த்தரிக்க எறும்பரிக்கத் 115

துர்க்கந்தத் திலேமூழ்கி – நான்கிடந்து
  துள்ளின மாடுபொதி சுமக்கையிலே
சக்கந்தம் பண்ணிடுவார் – பெண்ணாசை
  சார்ந்தது கைகாலொடு தீர்ந்ததென்பார் 116

நாறுதென் றொதுங்கிநிற்பார் – அடேகள்ள
  [2]நாயே காலிலென்ன காயமென்பார்
தேறுதல் சொல்லவருவார் – இப்படி
  தேர்க்கூட்டங் [3]கூடித்தந்த மார்க்கத்திலே 117

**ஆக்கினைத்தலம்** – குற்றவாளிகளைத் தண்டிக்கும் இடம். **கிடை** – கிடக்கை; வீழ்ந்துகிடக்கும் நிலை. **கிருமி** – புழு. **துர்க்கந்தம்** – கெட்ட நாற்றம். **சக்கந்தம்** – பரிகாசம். **நாறு** – துர்நாற்றம். **தேறுதல்** – ஆறுதல். **மார்க்கம்** – வழி.

பா.வே : 1. கண்கலங்கிச் 2. நாயேமுழுங் 3. கூடிற்றந்த.

## Amputation of hand and leg

They brought me to the place ordained for my punishment
And chopped my hand and leg one each
The hand and leg thus severed
Fell on the ground removed from their joints
In excruciating pain amidst a pool of blood
I did lie on the ground for a while
And then became unconscious
With flies swarming all over and infested by germs
Ants crawling around my body odorous and foul
In such a gruesome predicament mine
People in scorful just did comment
That my lust for women did cost me
Only my hand and leg
Some onlookers moved aside to avoid my odour
'What is that wond on your leg,thou stealing cur?
Some others did ask me.
Thus was the street crowded as if for a ***Tērōṭṭam*** [1]there.

*1. **Tērōṭṭam*** -chariot or carfestival of temples.

### (மைத்துனன் கண்டு கதறுதல்)

பங்கமுற் றிருக்கையிலே – நான் தானா
  பதியாகி முன்னிருந்த துதிகேட்டு
எங்களூ ரினிலிருந்து – கும்பிட
  எதிர்வந்த தெய்வம்போ லெனைத்தேடி 118

மைத்துனன் பார்க்கவந்தான் – நான்கிடந்த
  வரிசைகண்டான் கண்ணீர் சொரியநின்றான்
இத்தனை பாடும்பட – என்தலையில்
  எழுதியி ருந்ததடா அழுதென்னடா 119

நாலுபேர் கண்கள்முன்னே – காகமன்ன
  நடைகற்றுத் [1]தன்னுட நடையுங்கெட்டுக்
காலொடு கால்பின்னிக் – கிடக்கிற
  காட்சிகண் டைய்யோவென்று கட்டிக்கொண்டேன் 120

**பங்கம்** – அவமானம். **துதி** – புகழ். **மைத்துனன்** – மனைவிக்கு சகோதரன்; சகோதரியின் கணவன். **வரிசை** – நிலை. **காகம் அன்னநடை கற்று** – காகமானது அன்னத்தைப் போன்று நடக்க முயன்று.

பா.வே : 1. தன்னுடைய.

## Cōrācūran̲'s brother-in-law wails and laments

As I lay thus wounded and disfigured
My ***Maittun̲an̲***[1] who had earlier heard of my elevation as ***Tān̲āpati***
And arrived from my native place to see my pelf and power
Like a devotee seeking his deity for worship
Was shocked to see me in a plight so miserable
As he stood these shedding tears profuse
I told him not to cry as I was destined
To suffer, as I desired more than what I deserved
Like a crow which tried to walk like a swan graceful
Ended up losing its own gait in the process
Thus crying in grief as I held him in an embrace.

*Maittun̲an̲* -wife's brother or nephew

(காயத்திற்கு மருந்திட்டு ஊருக்கு அழைத்தல்)

கதறினா னவனுமங்கே – கண்ணீரிற்
கழுவினா னென்னுடலை யழுதழுது
இதுகாண்ப தற்கோவந்தேன் – யென்று மருந்
திட்டுக்கை கால்காயங்கள் கட்டிவிட்டுப் 121

பத்திய மூட்டிவிட்டு – என்னைக்காப்
[1]பாத்திவிட் டானொரு ராத்திரியில்
மெத்தவு முபசரித்தான் – [2]நம்முட
மெய்யழகர் தருவார் காலுங்கையும் 122

**பத்தியம்** – மருந்துக்கேற்ற உணவு. **காப்பாத்தி** – காப்பாற்றி. **ராத்திரி** – இரவு. **மெத்தவும்** – மிகவும். **மெய்யழகர்** – திருமாலிருஞ்சோலைமலை அழகர்.

பா.வே : 1. பாற்றிவிட். 2. நம்முடைய

He too cried and washed my body with his tears
'Have I gone over here to see this' he wailed
And dressed the wounds in my hand and leg
With medication and bandages proper
He put me on a diet and rendered such aid
As to save my life in just one night
He was so hospitable and prayerful for my sake
And said that lord ***meyyaḻakar***[1] would restore
My leg and hand

*Meyyaḻakar* – the name of a deity manifesting **Tirumāl**

**(சோரசூரன் அதை மறுத்துப் புல்லாணித் தலத்தில் இருத்தல்)**

ஊரொடும் போவோமென்றான் – எனக்கந்த
ஓசையுற் றதுநா ராசம் போலே
பாரெங்கு மெனக்கூர் தான் – நானினிப்
பரதேசி யாகியே திரிவேனென்றேன் 123

வேசமிப் படியாச்சே – அங்கேபூ
விற்ற கடையில்புல்லு விற்கமாட்டேன்
தாசரி போல்திரிந்து – புல்லாணித்
தலத்திலே யென்காலந் தொலைப்பேனென்று 124

தாவுந்த மில்லாமல் – செய்திகள்
தனித்துச்சொல் லியவனை யனுப்பிவிட்டேன்
கோவிந்தன் பேரைச் சொல்லிக் – கைக்கொரு
கோலுமோர் [1]பொந்தைமரக் காலுங்கட்டி 125

காவிவஸ் திரமுடுத்தி – வீசையுங்
கட்டிய கொண்டையு மொட்டையடித்துப்
பாவமெல் லாந்துலைந்து – தருமங்கள்
பலித்திடும் புல்லாணித் தலத்தில்வந்து 126

[2]ஆண்டிக்கோ விந்தனென்று – பேர்கொண்டு
அங்கும்பிச் சையெடுத்தவ்வூ ரெங்குந்திரிந்தேன்

[3]காண்டிக்கு மினியசொல்லான் – செந்தமிழ்க்
கவிவாணன் வீரரா கவசாமி 127

**நாராசம்** – பழுக்கக் காய்ச்சிய இரும்புச் சலாகை. **பாரெங்கும்** – உலகெங்கும். **பரதேசி** – சந்நியாசி. **தாசரி** – தாதன். அடியவன். **என் காலம்** – என் வாழ்நாள். **தொலைப்பேன்** – கழிப்பேன். **தாவந்தம்** – சங்கடம்; இரக்கம். **பொந்தை மரம்** – பூண்கட்டின தடி. **வஸ்திரம்** – வத்திரம்; ஆடை. **வீசை** – மீசை. **கொண்டை** – தலைமுடி. **பேர்** – பெயர். **காண்டிக்கும்** – காண் + திக்கும்; பார்க்கும் திசைகளெல்லம். **வீரராகவசாமி** – இந்நொண்டி நாடகத்தை இயற்றித்தந்த ஆசிரியர்.

**பா.வே** : 1. பொந்தையும் 2. நொண்டிக்கோ 3. கண்டினும்.

## Cōrācūran̲ unwilling to go to his native place decides to stay at Tiruppullāṇi

Then my ***maittun̲an̲*** did suggest
That we could go over to our native place
It was quite jarring for me even to hear a proposal such
All places on earth are native to me now
I shall roam like a ***paratēci***[1] hereafter
With my plight so disgraceful now
Shall I go to my place in a status lowered?
Can I sell grass where used to sell flowers fragrant?
Like a mendicant devotee shall I wander
And spend the rest of my life at **Pullāṇi** shrine
Without any further ado did I send him away smoothly
Convincing him in discussion private
Then chanting the appellation holy of **Kōvintan̲**
I had my tuft and moustache shaved clean
Tonsured my head entire as well
I did equip myself with a stick for my hand
And a wooden crutch for my leg
Wearing a saffron robe I did arrive
At **Pullāṇi** shrine where I could rid myself
Of my sins all and turn a new leaf
For a fresh lease of life virtuous
Calling myself ***Āṇṭi*** **Kōvintan̲** I wandered abegging
All over the place when I met

*Kavivāṇan*[2] *Vīrarākavacāmi*[3] of renown great
In visible directions all as a master of muse sweet

*1. paratēci* - a wandering beggar with no place of his own
*2. Kavivāṇan* - an expert in writing poetry
*3. Vīrarākavacāmi* - the author of this poetic work.

**(அருளாளரின் அறிவுரைப்படி திருமண்ணும் சங்கு சக்கரமும் தரித்தல்)**

என்னைக்கண் டுளமிரங்கி – மாயன்கா
 லீயும்படி யெனக்கோ ருபாயஞ்சொன்னான்
சொன்னதை யுறுதிகொண்டு – பாவங்கள்
 தொலையப்புண் ணியதீர்த்தந் தோறும்மூழ்கி 128

**ஆரியன் பெரியநம்பி** – கருணைபெற்
 றாழிசங் கமுமெந்தன் [1]தோளிலேபெற்று
பேருமந் திரமும்பெற்று – [2]ஈராறு
 [3]பெற்றுத்திரு மண்குறியைப் பெற்றுத்திருவைச் 129

**மாயன்** – திருமால் ; தெய்வச்சிலைப் பெருமாள். **ஈயும்படி** – தரும்படி. **உபாயம்** – யோசனை ; வழி. **ஆரியன் பெரிய நம்பி** – வைணவ குருபரம்பரையினருள் ஒருவர். **ஆழி** – சக்கராயுதம். **சங்கம்** – சங்கு. **பேரு** – பெயர். **மந்திரம்** – அஷ்டாட்சரம். **ஈராறு** – இரண்டு + ஆறு = பன்னிரண்டு. **திருமண்குறி** – நாமம்.

**சு.சொ** : 1. தோழிலேபெற்று 2. இராறு.
**பா.வே** : 3. பெற்றதிரு மண்குறியும்.

## He wears vaishnavite marks according to the advice of the gracious poet

On seeing my plight miserable
The merciful poet suggested as a welwisher earnest
The proper way to propitiate **Māyan** in worship
For the restoration of my leg and hand severed
Acting on the advice of that poet but faithfully
I did set out on my mission of salvation
Bathing and dipping in holy ponds
To rid myself of my sins

I also had the marks of wheel and conch
Branded on shoulders mine
With the blessings of the great mentor
**Āriyan̲ periyanampi**[1]
The eight lettered incornation I did memorise
And the worship of ***Al̲vārs*** twelve besides
I also sported the ***Tirumaṇ*** mark sacred on person mine,

**Āriyan̲ periyanampi** -a great vaishnavite mentor

**(புல்லாணி எம்பெருமானைத் துதித்தல்)**

[1]சூழவந்து வலஞ்செய்வதும் – எம்பிரான்
தொண்டரைப் பெரியோரைக் கண்டவிடத்தில்
தாழ்ந்து வணங்குவதும் – உச்சிஷ்டம்
தள்ளுமிலை யமுதைக் கொள்ளுவதும் 130

பெருந்திரு வீதியிலே – உருண்டங்கப்
பிரதட்சணஞ் செய்வதும் விரதமாய்
பெருந்துக்க மேசுகமாய் – ஒரு கால்
பொருந்துமரத் தொடுங்குந்திக் குந்தித்திரிந்தேன் 131

சிலதுநாட் போனபின்பு – மார்கழித்
திருவத் தியானத் திருநாளிலே
கலியனுக் கருள்புரிந்து – சாத்துமுறை
கண்டருள் சமையத்திற் கொண்டல்வண்ணன் 132

பரிந்தன னென்னிடத்தும் – பாவிக்கும்
பாவியான வென்னைக் கூவவென்றான்
தெரிந்தன ரோடிவந்தார் – வேத்திரச்
செல்வர்வந் தழைக்கநான் புல்லரும்பிச் 133

சென்னியிற் கைகுவித்து – உள்ளமுந்
தேகமும் பதறிநான்து ரோகியன்றோ

சன்னிதி முன்புவர — அவளவு
சிலாக்கிய னோபார்க்க யோக்கியனோ? 134

**எம்பிரான் தொண்டர்** – வைணவ அடியார். **உச்சிஷ்டம்** - உச்சிட்டம் – எச்சில். **அங்கப் பிரதட்சணம்** – உடலால் புரண்டு வலம் வருகை. **மார்கழி** – தமிழ் ஒன்பதாம் மாதம். **திருவத்தியானம்** – திருவத்தியயனம் – திவ்யப்பிரபந்தம் ஒதுகை. **கலியன்** – திருமங்கையாழ்வாார். **சாத்துமுறை** – கோயில் முதலிய இடங்களில் பிரபந்தத்தை ஓதியபின் இறுதியில் சில பாசுரங்களை விசேடந் தோன்றத் தனியே ஒதுகை. **சமையம்** – நேரம். **கொண்டல் வண்ணன்** – மேகவண்ணன் ; இங்கே திருப்புல்லாணித் தெய்வச்சிலைப் பெருமான். **பரிந்தனன்** – அன்பு செய்தான். **கூவ** – அழைப்பிக்க. **வேத்திரச் செல்வர்** – கோயிற் சீகாரியஞ் செய்பவர். **புல்லரும்பி** – புளகம் எய்தி. **சென்னி** – தலை. **தேகம்** – உடல். **துரோகி** – ஏமாற்றுவோன். **சன்னிதி** – இறைவன் முன்பு . **அவளவு** – அவ்வளவு. **சிலாக்கியன்** – புகழ்தற்குரியவன். **யோக்கியன்** – குணவான்.

பா.வே : 1. சூழ்ந்து.

## Praying to the lord of Tiruppullāṇi

At **Pullāṇi** I did make pious rounds of the shrine
Bowing in reverance at the sight of the lord's devotees
And other elders too
Eating leftovers and rolling on the ground
On the main streets big to fulfil vows such
In stoic consideration of pain as pleasure
With just a wooden crutch in place of a leg
I moved and sat alternately in wanderings mine
A few days passed thus
When on the day of ***Tiruvattiyān̲am***[1] in the month of ***Mārkal̲i***[2]
At the auspicious time of ***Cāttumur̲ai***[3] for **Kaliyan̲'s** sake
The cloudhued **Māl** did in His grace divine
Take pity on me a sinner
And summoned me to his presence
Those known to me and the temple staffers as well
Rushed towards me to take me to the ***Can̲n̲iti***
In frenzied ecstasy all over my body and mind
Placing my hands above my head in worship
I wondered whether I deserved to go the ***Can̲n̲iti***
Quite unsure of my virtuous present
Compared to my evil past.

*1. Tiruvattiyānam* - chanting of ***Tivviyaprapantam*** which is a collection hymns by ***Alvārs***
*2. Mārkali* - The nineth month of the tamil year
*3. Cāttumurai* - a special chamting of hymns(***pācuram***)

**(பிழைக்கு வருந்தி இறைவனைத்துதித்தல்)**

நாயினுங் கடையனன்றோ – யாதொரு
நலமில் லாதவனைக் குலவீனனைத்
தீயவர் சேகரனை – மங்கையர்
தீனனை யதோகெதி யானவனைக் 135

காதலித் தழைத்தானோ – என்றுருகிக்
கண்களில்நீர் சொரிய வங்குசென்றேன்
பாதகஞ் செய்ததெல்லாம் – [1]வரவரப்
[2]பறந்திடச் சட்டைவிட்ட பாம்பானேன் 136

**கடையன்** – கீழானவன் ; இழிந்தவன். **நலமில்லாதவன்** – நன்மையில்லாதவன். **குலவீனன்** – இழிகுலத்தவன். **தீயவர் சேகரன்** – தீயவர் தலைவன். **மங்கையர் அதீனன்** – பெண்கள் வசப்படுபவன். **காதலித்து** – விரும்பி. **பாதகம்** – கெடுதி ; தீங்கு. **வரவரப் பறந்திடச் சட்டைவிட்ட பாம்பானேன்** – சட்டை உரித்த பாம்பினைப் போன்று, திருப்புல்லாணித் தலத்திற்கு நான் வர வர பாவங்கள் நீங்கப் பெற்றேன் என்பதாகும்.

பா.வே : 1. இரவிமுன் 2. பனியெனப் பறந்திடப் பணிந்துநின்னேன்.

## Praying in repantance

'Am I not more despicable than a mean dog?
Not a trace of virtue do I possess
A shame to society and a chief of evil mongers
One who is lured by women ever
And a total wreck in respects all
Did god in His boundless love summon me?
Thus was I melted and shed tears
I did go to the ***Canniti*** then
As I neared the holy sanctum of the Lord
My sins all seemed to vanish
And I felt like a snake ridden of its scales

**(இறைவன் சன்னிதியைத் தரிசித்தல்)**

[1]உரிமைகொண் டெனக்கருள்வான் – அங்குதிரு
வோலக்கம் வீத்திருந்த கோலத்தைக் கண்டேன்
[2]திரைகண்ட பெருக்கெனவே – அயன்முதல்
தேவர்கள் முனிவர்கள் திசைமகிபர் 137

அகிராஜன் பட்சிராஜன் – சேனையர்கோன்
ஆழ்வார் ளாசிரியர்க ளடியவர்கள்
[3]தகைமைகொள் பரிவாரர் – நம்பியர்
தக்க பரிசனர்கள் சமையத்தரும் 138

கரதலங் குவித்திறைஞ்சி – யிருபாலும்
கட்டிய முழுங்கிடச் சிட்டர்புகழ
விருதுகள் பிடித்துநிற்கக் – கவரிகள்
வீச [4]மறைத்தமிழ் கோஷமிட 139

நரம்பொலி யாழ்முழங்க – வாத்திய
நாத முழங்கச்சங் கீதமுழங்க
அரம்பையர் நடனஞ்செய்ய – யாவரும்
ஆனந்த வெள்ளத்தி லாழ்ந்துநிற்கத் 140

திரைகளு மேற்கட்டியும் – நவமணிச்
சீர்மாலை யும்பலபூ மாலையும்
குருமணி யொளிமயமாய் – வளமெலாங்
கொண்டதொரு காங்கேய மண்டபத்தினில் 141

சுந்தரபாண் டியன்குறட்டில் – பொன்னின்வளந்
தோயுமொரு குருகுல ராயன்பீடத்தில்
எந்தைதெய்வச் சிலைபெருமாள் – மின்னெனும்
இருதேவி மாருடன் கருமேகம்போல 142

வளருமெய் யழகொழுகத் – தொண்டர்கள்
வாழ்த்த வெழுந்தருளி [5]வீத்திருந்து

நளின மலர்ப் பதத்தைத் – திருமங்கை
நாதனுக் கருளினன் காதலுடன் 143

திருமங்கை மன்னனெழுந்து – வாய்புதைத்துச்
செங்கைகுவித் துக்குழைந் தங்கமொடுக்கிக்
கருமுகில் வண்ணனடிக்கீழ் – மறைபுக்கிக்
கைதொழு தெழுந்திப்பால் எய்திநின்றான் 144

**திருவோலக்கம்** – தெய்வசன்னிதானம். **வீத்திருந்த** – வீற்றிருந்த. **கோலம்** – காட்சி. **திரை** – அலை. **பெருக்கு** – நீரோட்டம் ; வெள்ளம். **அயன்** – பிரமன். **திசை மகிபர்** – திக்குப் பாலகர் ; எண்திசைத் தெய்வங்கள். இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் எனும் எண்மர். **அகிராஜன்** – பாம்புகளுக்கு அரசன் ; ஆதிசேடன். **பட்சிராஜன்** – பறவையரசன்; கருடன். **சேனையர்கோன்** – சேனைமுதலி; விசுவக்சேனர். **பரிவாரர்** – சுற்றத்தார். **நம்பியர்** – அர்ச்சகர். **பரிசனர்** – அடியார். **சமையத்தார்** – மதவாதிகள். **கரதலம்** – கை. **இறைஞ்சி** – வணங்கி. **இருபாலும்** – இரண்டு பக்கமும். **கட்டியம்** – அரசர் முதலியோரைக் குறித்துச் சொல்லும் புகழ்த்தொடர். **சிட்டர்** – பெரியோர். **விருது** – கொடி. **கவரி** – சாமரை. **மறைத்தமிழ்** – ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களான திவ்வியப் பிரபந்தங்கள். **கோஷமிட** – முழங்க. **வாத்தியநாதம்** –இசைக் கருவிகளால் எழுப்பப்படும் இசை. **சங்கீதம்** – வாய்ப் பாட்டு. **அரம்பையர்** – தேவலோகத்து நடன மங்கையர்.

**திரை** – திரைச்சீலை. **மேற்கட்டி** – மேல்விதானம். **நவமணி** – கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வைரம் ஆகிய ஒன்பது வகை அரதனங்கள். **குருமணி** – நிறமுள்ள இரத்தினம். **காங்கேய மண்டபம், சுந்தரபாண்டியன் குறடு, குருகுலராயன் பீடம்** – இவைகளெல்லாம் திருப்புல்லாணி எம்பெருமான் கோயிலில் உள்ள இடங்கள். மார்கழி மாதம் அத்யயன விழாவில் திருமங்கையாழ்வாருக்கு வீடருளிய நிகழ்ச்சி விளக்கப்படுகிறது. **வீத்திருந்து** – வீற்றிருந்து. **நளினமலர்** – தாமரைப் பூ. **திருமங்கைநாதன், திருமங்கை மன்னன்** – திருமங்கையாழ்வார். **காதலுடன்** – அன்புடன். **செங்கை** – சிவந்த கை. **அங்கம்** – உடல் ; மெய். **கருமுகில் வண்ணன்** – திருமால். **மறைபுக்கி** – அடைக்கலம் புகுந்து. **இப்பால்** – இந்தப் பக்கம். **எய்தி** – அடைந்து.

**சு.சொ** : 1. உருமைகொண் 4. மறைத்தமிழ்.
**பா.வே** : 2. திரைகொண்ட 3. தகவுகொள் 5. வீற்றிருந்து.

## Seeing the Cannithi in all its splendour

The Lord who would shower his grace on me
In his divine right to take liberties universal
I saw Him seated in ***Tiruvōlakkam***[1] splendid
Like an ocean surging in tide high

There were devotees in numbers large
Hailing from both heaven and earth
**Tēvars**[2] all right from **Ayan**[3]
Saints and ***Ticaimakipar***[4] besides
The king of snakes and the king of birds
The army chief along with ***Ālvars*** and devotees
A retinue of relatives righteous as well
Prierts ***paricanar***[5] and religious folk
All of them with palms closed praying in earnest
With rumbling heraldry on sides both
Elders these eulogizing the Lord
Banners held aloft and fanned by ***kavari***[6]
As scriptures were chanted in ***tamil*** chaste
Stringed ***yāl***[7] and other instruments besides
Providing music resonant to suit the occasion
Damsels divine adancing
All those assembled there in ecstasy steeped
At the ***Kānkēyamaṇṭapam***[8] lustrous and adorned
With curtains colourful and strings of flowers and gems nine
Spelling prosperity all around
At the ***Kurukularāyan pīṭam***[9] on the ***Cuntarapāṇṭiyankuraṭa***[10]
My Lord paternal ***Teyvaccilaipperumaḷ*** cloud hued
Flanked by His divine consorts both
And in His form and figure so handsome
Did offer His divine feet elegant
To ***Tirumaṅkainātan*** for worship
As the devotees assembled there cheered in a chorus
***Tiumaṅkaimannan*** stood up in reverence deep
With his mouth and palms closed in prayer
Flexing His frame entire in worship pious
Thus did he stand at the feet of the Lord

1. ***Tiruvōlakkam*** - in the divine presence of god or the ***Canniti*** of the ***deitee***
2. ***Tēvars*** - Heavenly beings
3. ***Ayan*** - **Piraman** - the god of creation in hindusm
4. ***Ticaimakipar*** - divine sentinels in eight directions also known as ***Aṭṭatikkupālakar***
5. ***Paricanar*** - devotees

*6. Kavari* - *Cāmaram* or fam made of the hair of ***kavarimān*** a kind of deer
*7. Yāḻ* - ancient musical instrument with strings
*8. Kānkēyamaṇṭapam* - a hall at the **Tiruppullāṇi** temple *Kurukularāyaṉ pīṭam*
*9. Cuntarapāṇṭiyankuraṭa* - the pedestal and the pial at **Tiruppullāṇi** temple

### (தெய்வச்சிலையானை வணங்குதல்)

நின்றபின் னடியேனும் – எம்பிரான்
நீர்மைகண் டிதுநல்ல நேரமென்றே
சென்றெதிர் கைதொழுதேன் – புல்லாணித்
தெய்வச் சிலைமுகிலைக் கைதொழுதேன் 145

ஆவின முடையானைப் – பச்சையா
லடையானை யாழிப் படையானைத்
தேவர்க்குங் கிடையானைப் – புல்லாணித்
தெய்வச் சிலைமுகிலைக் கைதொழுதேன் 146

கெருடப்பொற் கொடியானை – முல்லைமலர்க்
கடியானை மணி முடியானைத்
திருவர சடியானைப் – புல்லாணித்
தெய்வச் சிலைமுகிலைக் கைதொழுதேன் 147

அருள்சொரி விழியானை – யூழிக்கு
மழியானைப் பொன்னுங் கழியானைத்
திருவணை வழியானைப் – புல்லாணித்
தெய்வச் சிலைமுகிலைக் கைதொழுதேன் 148

அன்புள்ள மனத்தானைத் – தர்ப்பா
தனத்தானைக் கோவர்த் தனத்தானைத்
தென்புல்லை வனத்தானைப் – புல்லாணித்
தெய்வச் சிலைமுகிலைக் கைதொழுதேன் 149

கைதொழு துள்ளமுருகி – [1]மெய்பதறக்
கண்ணீரா றாய்ப்பெருக மண்ணில்வீழ்ந்து
செய்பிழை பொறுப்பாயென்று – புலனையும்
சித்தத்தை யுமவன்பா தத்திற்செலுத்திச் 150

சன்னதி முன்பாக – அடியற்றுச்
சாய்ந்தபனை [2]மரமென வீழ்ந்துகிடந்தேன்
தன்னறி வில்லாமல் – கிடக்கின்ற
தருணத்தி லேயந்தக் கருணைக்கடல் 151

**எம்பிரான்** – இங்கு தெய்வச் சிலைப்பெருமான். **நீர்மை** – தன்மை சிறந்த குணம் ; அழகு. **ஆவினம்** – பசுக் கூட்டம். **பச்சை** – பசுமை. **ஆலாடை** – ஆலிலை. **ஆழிப்படை** – சக்கராயுதம். **முல்லை மலர்க் கடியானை** – முல்லை மாலையின் பரிமளத்தை யுடையவனை. **திருவரசு** – திரு அரசமரம். **ஊழி** – ஊழிக்காலம். **பொன்னங்கழி** – திருப்புல்லாணியை யடுத்த உப்பங்கழி. **திருவணை** – சேது.

**தர்ப்பாதனத்தான்** – தருப்பைப் புல்லை ஆசனமாகக் கொண்டவன். **கோவர்த்தனத்தான்** – கோவர்த்தனமலையை எடுத்தவன். **தென்** – தெற்கு. **புல்லைவனம்** – புல்லங்காடு = புல்லாரணியம். **புலன்** – ஐம்புலன். கேட்டல், பார்த்தல், முகர்தல், ருசித்தல், தொடுதலை அறிதல். **சித்தம்** – மனம். **தருணம்** – சமயம். **கருணைக்கடல்** – தெய்வச்சிலைப் பெருமாள்.

**சு.சொ** : 1. மெய்பதர.
**பா.வே** : 2. மரம்போல்.

## Praying to Teyaccilaiyār

*After he stood aside at the feet of the Lord*
I felt it was the time proper
To hail our Lord's divine attributes glorious
And offered worship facing **Teyaccilaiyār** cloudlike
With my hands folded in devotion deep
The Lord who doth own cows and lie on a banyan leaf
He who wields a wheel as a weapon His
And beyond the reach of ***Tēvar*** even
I did worship ***Teyvaccilai*** of **Tiruppullāṇi** such
With my palms joined in prayer earnest
The Lord with the banner golden of ***Karuṭaṉ***[1]
He who revals in the fragrance of ***Mullai***[2] flower
He who wears a crown gemstuded
And seated under an ***Aracu***[3] tree aspicious
I worshipped the ***Pullai Teyaccilaiyār*** cloudlike
The Lord endowed with eyes showering grace divine
He whom even the deluge cannot destroy
He who is associated with ***poṉṉaṅkaḻi***[4] and **Cētu**[5] too

In end favors His,
I did worship such **Teyaccilaiyār** of **Tiruppullāṇi**
The kindhearted lord seated on ***Tarappācayaṉam***[6]
He who lifted ***kōvarttaṉam***[7] mountain as an umbrella ventable
And the Lord of **Teṉpullaivaṉam**[8] as well
I offered worship with folded hands
To the **Pullāṇi Teyaccilaiyār** the cloud of mercy
Melted in my mind thus and my body trembling in frenzy
Shedding tears profusely with my hands folded in worship
I fell on the ground seeking pardon for my sin all
Applying my mind solely on the Lord's feet
I did lie there like a felled **palmyra** tree
In my state thus unconscious and unaware of myself
At that moment the Lord an ocean of mercy
That He is for sure.

***1. Karuṭaṉ*** -The bird mount of **Viṣṇu**
***2. Mullai*** -a kind of fragrant flower
***3. Aracu*** -peepul or **bōdhi** tree
*4. poṉṉaṅkaḻi* -a legoon near **pullāṇi**
**5. Cētu** -**Irāmēsvaram** region
***6. Tarappācaṉam*** -Seat of ***Taruppai*** grace
***7. Kōvarttaṉam*** -a mountan held aloft as an umbrella by lord **Krisṇa** to savecowherds and cattle
**8. Teṉpullaivaṉam** -a forest of grass in the south.

**(இறைவன் மீண்டும் கைகால்களைத் தருதல்)**

கடைக்கண் ணாற்பார்த்திரங்கிக் – காட்டிலந்தக்
காகா சுரனைப்பண்டு [1]கார்த்தாற்போல்
தடக்கை யபயங்காட்டிக் – காலுங்கையுஞ்
சந்தோஷ மாகும்படி தந்தோமென்று 152

செழித்தசொப் பனத்தாலே – யென்னையடா
திருடா வினியெழுந் திருடாவென்று
எழுப்பினாற் போலெழுந்தேன் – காலுங்கையு
மெப்போதும் போலேவளர்ந் திருக்கக்கண்டேன் 153

**காகாசுரனைப்பண்டு கார்த்தாற்போல்** – சீதா பிராட்டியிடம் தவறிழைத்து வேறு உய்யும் வழியின்றி அலுத்து இராமபிரானால் உய்யப்பெற்ற காகாசுரன் வரலாறு இராமாயணத்தால் அறியத்தக்கது. **தடக்கை** – பெரிய கை. **அபயம் காட்டி** – அஞ்சலென்று காட்டி ; **அஞ்சலென்று** – பயப்படவேண்டாம் என்று. **செழித்த** – கண்ட. **சொர்ப்பனம்** – கனவு.

**பா.வே** : 79. காத்ததுபோல்.

## The Lord restores the severed limbs

As I lay dazed and drowny thus
The Lord turned His gaze merciful on me
With his hand raised in a gesture of offering refuge
As he did when saving **Kākācuraṉ**[1] earlier
In my dream he did appear and said
'Wake up,thou thief and rise,
We have given back the leg and hand
To make you happy hence'
I did wake up as if aroused
And found my leg and hand restored
As they were there originally.

**1. Kākācuraṉ** a repentant demon saved by the Lord **Rāmā**.

**(சோரசூரன் இறைவன் கருணையை எண்ணி மகிழ்தல்)**

துள்ளினேன் றுள்ளித்துள்ளி – யெம்பிரான்
சுந்தரத்தி லேமனதைச் [1]சூறைவிடுத்தேன்
கள்ளமெல் லாந்தவிர்த்தேன் – எம்பிரான்
கைங்கரி யத்தைத்தானே காதலித்தேன் 154

அப்பொழு தெம்பெருமான் – தோளிலே
யணிதிரு மாலையைத் தணியவிட்டான்
ஒப்பினா னென்றறிந்து – தொண்டர்திரு
வோலக்க மெழுந்து மாலையுடன் 155

உடுத்துக் களைந்ததெல்லாம் – கொடுத்தன்ப
[2]ருடன்வைத்த னேகசொற்பணி விடையுஞ்சொன்னார்

விடைகொண்ட நாண்முதலாய் – மலர்ப்பூ
மேலிருந் தவள்பொற் றாள்வணங்கிக் 156

கோதையைத் தொழுதிறைஞ்சி – புல்லிற்பள்ளி
கொண்டவனை யிலங்கை வென்றவனைப்
பாத மலர்வணங்கிப் [3]ப்ரக்கிருதியின்
பாசமிறந் தன்பரொடு நேசம் பிறந்து 157

கருமமெல் லாந்துலைந்து – எம்பிரான்
கஞ்ச மலரடியைத் தஞ்சமென்று
மருவளர் புல்லாணித் – தலத்திலே
வாழ்ந்திருப் பாருடன் வாழ்ந்திருந்தேன்.
– தந்தானத் தானானா – 158

**சுந்தரம்** – அழகு. **சூறை விடுத்தேன்** – பறி கொடுத்தேன். **கைங்கரியம்** – தொண்டு. **ஒப்பினான்** – இசைந்தான். **திருவோலக்கம்** – சபை யிருப்பு. **உடுத்துக் களைந்தது** – அணிந்து நீக்கின ஆடை. இது சூடிக்களைந்த மாலை முதலியவற்றக்கும் ஆயிற்று. **அனேகம்** – பல. **பணிவிடை** – செல்ல அனுமதி. **பூ மேலிருந்தவள்** – இலக்குமி ; பதுமாசனித்தாயார். **கோதை** – ஆண்டாள். **புல்லிற் பள்ளி கொண்டவன்** – தருப்பசயனத் தெம்பெருமான். **இலங்கை வென்றவன்** – இராவணனைக் கொன்று இலங்கையை வென்றவன்; இராமபிரான். **ப்ரக்கிருதியின் பாசம் இறந்து** – உலகப்பொருள்களில் பற்றற்று. **நேசம்** – அன்பு. **கருமம்** – நல்வினை தீவினைகள். **கஞ்சமலர்** – தாமரை மலர். **தஞ்சம்** – அடைக்கலம். **மருவளர்** – வாசனை நிறைந்த ; மணம் நிறைந்த.

**க.சொ** : 1. சூறைவிடுத்தேன்.
**பா.வே** : 2. ருடன்வைத் தெனக்கோர்பணி 3. ப்ரக்கிருதியின்.

## Cōrācūran's ecstasy over the mercy of the Lord

I did leap in joy several times
.Lured by my lord's features handsome
Avoiding decit all in my mind
I loved only to serve the Lord
In my pious frame of mind such
The Lord as a gesture of His approval
Did allow the garland on His shoulders
To slip down on His person divine
With the Lord's ***Tiruvōlakkam*** thus over

And the removed garland and garments
From the Lord's presence were given to me
And then in the presence of the devotees there
I was allowed to leave the ***Canniti***
Just from that memorable day onwards
I bowed at the golden feet of the lotus borne **Ilakkumi**
Prayed to **Kōtai** as well
Then did I worship the Lord of **Pullāṇi**
Who conquered **Ilaṅkai** as **Irāmaṉ** glorious
With all my earthly bonds severed
And deeply attached to the Lord's devotees
I was ridden of the impact of my misdeeds all
Taking refuge at the lotusfeet of the lord
I stayed at the shrine of **Pullāṇi** fragrant
Along with the happy residents of that holy place

**(வாழிப்பாடல்)**
**விருத்தம்**

13. வாழிதிருப் [1]புல்லாணியிற் தெய்வச்சிலையார் செகநாத
மாயன் வாழி
வாழிபது மாசனிசூ டிக்கொடுத்தாள் சீதைமண
வாளன் வாழி
வாழிதொண்ட ரண்டர்களும் பதின்மர்களுஞ் செய்யதிரு
வரசும் வாழி
வாழிநொண்டி நாடகத்தைப் படிப்பவர்கள் கேட்பவர்கள்
வாழி வாழி.

**வாழி** – வாழ்க. **சூடிக்கொடுத்தாள்** – ஆண்டாள். ***சீதைமணவாளன்*** — சீதாபிராட்டியின் கணவனான இராமபிரான். **தொண்டர்** – அடியவர். **அண்டர்** – தேவர். **பதின்மர்** – பத்து பேர் (பன்னிரு ஆழ்வார்கள் - திருமாலடியார்கள்) 1. முதல் ஆழ்வார் (பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்) 2. திருமழிசை யாழ்வார் 3. நம்மாழ்வார் 4. குலசேகராழ்வார் 5. பெரியாழ்வார் 6.தொண்டரடிப்பொடியாழ்வார் 7. திருப்பாணாழ்வார் 8. திருமங்கையாழ்வார் 9. மதுரகவி ஆழ்வார் 10. ஆண்டாள்.

**பா.வே** : 1. புல்லை.

## *Vālippātal* (The concluding song of felicitation)

Long live the Lord of **Tiruppullāṇi**
**Teyaccilaiyār Cekanāta Māyan̲**
Long live the consort divine
Of **Patumācan̲i**[1] **Cūṭikkoṭuttāḷ** and **Sīta**[2]
Long live devotees **Tēvar** and the **Āḻvārs**[3] all
Long live the ***Tiruvarasu***[4] sacred
Long live those who read this **Noṇṭināṭakam**
And listen to its rendering as well.

| | | |
|---|---|---|
| 1. **Patumācan̲i** | - | The goddes of **Tiruppullāṇi** |
| 2. **Sīta** | - | The consort of **Irāman̲** |
| 3. **Āḻvārs** | – | **1 poykaiyāḻvār 2. Pēyāḻvār 3. Pūtattāḻvār 4. Tirumaḻicaiyāḻvār 5.Nammāḻvār 6. Kulasēkarāḻvār 7. Periyāḻvār 8. Toṇṭaraṭippoṭiyāḻvār9. Tiruppāṇāḻvār 10. Tirumaṅkaiyāḻvār 11. Maturakaviyāḻvār 12. Āṇṭāḷ** |
| *4. **Tiruvarasu*** | - | The peepul tree. |

# துணை நூல்கள்


**சுவடி**

**பதிப்புக்குரிய சுவடி**

திருப்புல்லாணி நொண்டி நாடகம்

எண் ஆர். 3754, அ. கீ. சு. நூ., சென்னை.

**அகராதி நூல்கள்**

1. கதிரைவேற்பிள்ளை, நா., தமிழ் மொழியகராதி, ஏசியன் எஜீகேஷனல் சர்வீஸ், புதுடெல்லி, 1992.

2. சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ஆசியன் எஜீகேஷனல் சர்வீஸ், புதுடெல்லி, 1988.

3. வையாபுரிப்பிள்ளை, எஸ்., தமிழ் லெக்சிகன், தொகுதி I-VI, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.

**தமிழ் அச்சுநூல்கள்**

1. அன்னி தாமசு (பதி.), பிரபுந்தத் திரட்டு, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

2. சுந்தரமூர்த்தி, கு., (பதி.), தொல்காப்பியம், பொருளதிகாரம், (பிற்பகுதி), பேராசிரியர் உரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம். 1985.

| | | |
|---|---|---|
| 4. மருதமுத்து, மொ., (பதி.), | திங்களூர் அருள்மலை<br>நொண்டி நாடகம்,<br>ஆசியவியல் நிறுவனம்,<br>சென்னை, | 1998. |
| 5. முத்துச்சண்முகன்,<br>அசோகன், வீ, | நொண்டி நாடகங்கள்,<br>முத்துப் பதிப்பகம்,<br>மதுரை, | 1981. |
| 6. பாஸ்கரத் தொண்டைமான்,<br>தொ.மு., | வேங்கடம் முதல்<br>குமரி வரை,<br>பொருநைத் துறையினிலே,<br>அபிராமி நிலையம், | 1986. |
| 7. வேங்கடசாமி ரெட்டியார் (பதி) | கம்பராமாயணம்,<br>இராமாவதாரம்,<br>யுத்தகாண்டம் –I,<br>(உரையுடன்)<br>கம்பன் அறநிலை,<br>கோவை , | 1996. |

## பாடல் முதற்குறிப்பு

## (எண் – பாடல் எண்)

## சொல்லடைவு
## எண்: பாடல் எண் மற்றும் கண்ணி எண்

## வழக்குச் சொல்லடைவு

### (எண் – பாடல் எண் மற்றும் கண்ணி எண்)

## பின்னிணைப்பு – 1

## அச்சு நூல்களாக அறியப்பெறும் நொண்டி நாடகங்கள்

| எண் | நூல் பெயர் | ஆசிரியர் | பதிப்பாசிரியர் | பதிப்பகம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 1. | அலிப்புரம் நொண்டி நாடகம் | ந. கந்தசாமி ஊமையம்பட்டி | ந. கந்தசாமி | கமலம் பதிப்பகம், இராசிபுரம் | 1995 |
| 2 | இல்லற நொண்டி நாடகம் | சதாசிவம் பிள்ளை (1820 –1896) | ஜே.ஆர். அர்னால்டு | – – –, ஆனல், யாழ்ப்பாணம் | 1887 |
| 3. | [1]சீதக்காதி நொண்டி நாடகம் | க.கந்தசாமிப்புலவர் முத்தாலங்குறிச்சி | (அ) – – – | சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை. | 1939 |
| | | | (ஆ) முகம்மது ஹுசைன், நைனார்முகம்மது (தொ.ஆ) | சுல்தானா அப்துல்லா, சென்னை. | 1953 |
| | | | (இ) கவி. கா. மு. ஷெரீப். | சீதக்காதி நூல் வெளியீட்டகம், சென்னை | 1981 |
| 4. | ஞானநொண்டி நாடகம் | வேதநாயகம் சாஸ்திரியர் | அ.வேதபோதகம் | Payne & Co., Madras | 1937 |
| | | | | வேதநாயகசாஸ்திரி யாரின் பேரவைப் பதிப்பு, தஞ்சாவூர் | 1989 |
| 5. | திருக்கச்சூர் நொண்டி நாடகம் | மதுரகவிராயர், அமரம்பேடு | சி. கிருட்டிண மூர்த்தி | கமலானந்தன் பதிப்பகம், சென்னை | 1992 |
| 6. | திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணியர் நொண்டி நாடகம் | க. கந்தசாமிப் புலவர், முத்தாலங்குறிச்சி | ச. சுப்பிரமணிய பிள்ளை | சிந்தாமணி யந்திரசாலை, பாளையங்கோட்டை | 1885 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | த.ஆ.அருணாசலம் பிள்ளை | கோபால் எலக்டிரிக் அச்சுயந்திரசாலை, உடுமலை | 1948 |
| | | | ,, | சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம், திருச்செந்தூர் | 1948 |
| 7. | திருப்புல்லாணி நொண்டி நாடகம் | கவிவீரராகவையங்கார் | பெரியான் ஸ்ரீநிவாசன் | திருஞானமுத்திரைப் பிரசுராலயம் ஆழ்வார்திருநகரி | 1968 |
| 8. | திருமலையாதிபன் நொண்டி நாடகம் | மன்னர்பெருமாள் புலவர் | சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் | ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தானம் திருவிடைமருதூர் | 1967 |
| 9. | திருவிடைமருதூர் நொண்டி நாடகம் | ஸ்ரீ அனந்தபாரதி | சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள் | ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தானம், திருவிடைமருதூர் | 1967 |
| 10 | திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம் | கு. அவிநாசிப் புலவர் | மொ.மருதமுத்து செ. ராசு | ஆசியவியல் நிறுவனம்,சென்னை. | 1998 |

1. செய்தக்காதி நொண்டி நாடகம் என்றும் இந்நூல் வழங்கப்பெறும்.

## பின்னிணைப்பு – 2
### அச்சில் வராத நொண்டி நாடகங்கள்

| வ.எண். | நூற்பெயர் | ஆசிரியர் | சுவடி நூலகம், எண் |
|---|---|---|---|
| 1. | ஆதிமூலேசர் நொண்டி நாடகம் | மாரிமுத்து | சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம். எண். R2711, R7484 |
| 2. | [1]கும்பினி நொண்டி நாடகம் | – | கேரளப் பல்கலைக் கழக நூலகம். எண். 8853 |
| 3. | [2]குமாரமுத்தையன் நொண்டி நாடகம் | – | கே.ப.க.சு.நூ. எண். 8441 |
| 4. | குளத்தூரய்யன் நொண்டி நாடகம் | – | கே.ப.க.சு.நூ. எண். 11611 |
| 5. | குன்றக்குடி குமரன் நொண்டி நாடகம் | – | செ.அ.கீ.சு.நூ. எண். R4762, R4837 |
| 6. | [3]சாத்தூர் நொண்டி நாடகம் | – | உ.வே.சா.நூலகம்.எண்.1298a |
| 7. | சாத்தூரப்பன் நொண்டி நாடகம் | – | செ.அ.கீ.சு.நூ. எண். 3222A |
| 8. | [4]சூரனூர் நொண்டி நாடகம் | – | தமிழ்ப் பல்கலைக் கழகம் எண். 2769 |
| 9. | செந்தில்வேலவர் நொண்டி நாடகம் | – | உ.வே.சா.நூ. எண்.68-IIG |
| 10. | திருக்குடந்தை சாரங்கபாணி நொண்டி நாடகம் | சண்பகமன்னார் என்னும் சீநிவாசய்யங்கார் | உ.வே.சா.நூ. எண்.348 (579) |
| 11. | பழனி நொண்டி நாடகம் | பவுஷேந்தன் | செ.அ.கீ.சு.நூ. எண். D494, D495, R3017 |
| 12. | புல்வயல் குமரேசர் நொண்டி நாடகம் | – | உ.வே.சா.நூ. எண்.1248, 2109 |

1. இதில் தஞ்சை சரபோஜி மன்னர் பற்றிய வரலாற்றுக் குறிப்பு உள்ளது.
2. செந்தூர் முருகனைப் பற்றியது.
3. சாத்தூர் நாடகமும் சாத்தூரப்பன் நொண்டி நாடகமும் ஒன்றா? வேறா என்பது ஆய்தற்குரியது.
4. சூரனூர் ராயர் பேரில் நொண்டி நாடகம் என்றும் வழங்கப்பெறும்.

## பின்னிணைப்பு – 3

## பெயரளவில் தெரியவரும் நொண்டி நாடகங்கள்

| வ. எண் | நூல்பெயர் | ஆசிரியர் | காலம் |
|---|---|---|---|
| 1. | ஆகிலாண்டேசுவரி பேரில் நொண்டி நாடகம் | – | – |
| 2. | ஆவிநாசி நொண்டி நாடகம் | குழந்தைக் கவுண்டர் | – |
| 3. | ஆதிமூலேசர் நொண்டி நாடகம் | ,, | – |
| 4. | கடம்பர்கோயில் நொண்டி நாடகம் | மதுரைநாயகம் பிள்ளை, கடம்பர்கோயில் | – |
| 5. | சாளுவராய நொண்டி நாடகம் | – | – |
| 6. | திருக்கச்சி நம்பி நொண்டி நாடகம் | – | – |
| 7. | திருக்குருகூர் நொண்டி நாடகம் | – | – |
| 8. | திருத்தணிகை நொண்டி நாடகம் | முத்துராமக்கவிராயர், கோவளம் | 19ஆம் நூற்றாண்டு |
| 9. | திருமந்திரம் நொண்டி நாடகம் | – | – |
| 10. | திருவனந்தபுரம் நொண்டி நாடகம் | க. கந்தசாமிப்புலவர், முத்தாலங்குறிச்சி | 17ஆம் நூற்றாண்டு |
| 11. | தில்லைவிடங்கன் ஐயனார் நொண்டி நாடகம் | மாரிமுத்துப்பிள்ளை, தில்லைவிடங்கன் | 18ஆம் நூற்றாண்டு |
| 12. | நொண்டி நாடகம் | சி.சின்னத்தம்பிப் புலவர், யாழ்ப்பாணம் | 18ஆம் நூற்றாண்டு |
| 13. | நொண்டி நாடகம் | சீத்தாம் பிள்ளைப்புலவர், இலங்கை | 18ஆம் நூற்றாண்டு |
| 14. | பழநி நொண்டி நாடகம் | கி. நாராயணப்பிள்ளை | – |
| 15. | புதுவை நொண்டி நாடகம் | திருவாமாத்தூர் தண்டபாணி சுவாமிகள் | – |
| 16. | பொக்கவாயன் நொண்டி நாடகம் | அம்பலம் | – |
| 17. | மதுரகவிராயர் நொண்டி நாடகம் | அப்துல் கரீம் சாகிப் | 19ஆம் நூற்றாண்டு |
| 18. | [1] வீரசேனன் நொண்டி நாடகம் | – | – |

1. இலக்கியக்கொள்கை, தொகுதி 8 (பதி). ச.வே. சுப்பிரமணியன், கே.பகவதி, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983, ப. 270.

## இணைப்பு – 4

## நொண்டி நாடகங்கள் பற்றிய ஆய்வுகள்

### கட்டுரைகள்


1. அசோகன், வீ., **குன்றக்குடி குமரன் பேரில் நொண்டி நாடகம்,** 12ஆவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி –3, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு, அண்ணாமலைநகர், 1980, பக்.1-6.

2. அப்துல் காதிர், கே.எம்.கே. **செய்தக்காதி நொண்டி நாடகம்,** சீதக்காதியும் செந்தமிழ்ப் புலவரும், வர்தா பதிப்பகம், சென்னை, 1961, பக்.51-58.

3. அழகிரிசாமி,கு., **திருச்செந்தூர் நொண்டி நாடகம்,** இலக்கிய விருந்து, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1958.

4. ,, **திருச்செந்தூர் நொண்டி நாடகம்,** தமிழ் வட்டம், 2வது ஆண்டு விழா மலர், மலர் வெளியீட்டுக் கழகக் குழுவினர், சென்னை, 1969.

5. அறிவுடைநம்பி, ம.சா., **திருவிடை மருதூர் நொண்டி நாடகம்,** தஞ்சை மராட்டிய மன்னர் வளர்த்த தமிழ் இலக்கியம், பகுதி 1, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1994. பக்.216-243.

6. இராசேந்திரன், ம., **நொண்டி நாடகங்கள்,** தமிழ் இலக்கியக் கொள்கை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983, பக்.247–270.

7. கமாலுத்தீன், எஸ்.எம்., **சீதக்காதி நொண்டி நாடகம்,** மணிவிளக்கு இதழ், --------, சென்னை, 1973.

8. சக்தி பெருமாள், **திருச்செந்தூர் நொண்டி நாடகம்,** மறைமலையடிகள் நூற்றாண்டுவிழா மலர், கழக வெளியீடு, சென்னை, 1977.

9. நயினார் முகம்மது, சி., **நொண்டி நாடகம்,** கட்டுரை, புவியெல்லாம் பொங்குக, உமறுப் பதிப்பகம், திருச்சி, 1976.

10. பச்ச முத்து, ந., **நொண்டி நாடகங்கள் – மக்கள் கவிதை,** வானொலிப் பேச்சு.

11. மணவை முஸ்தபா, **நொண்டி நாடகம்**, தமிழில் இஸ்லாமிய இலக்கிய வடிவங்கள், மீரா பப்ளிகேஷன், சென்னை, 1986. பக்.169-182.

12. மருதமுத்து, மொ., **திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம் – சுவடி ஆய்வு,** தமிழ்ப் பொழில், துணர்–71, மலர்–9, காந்தைத் தமிழ்ச் சங்க, செளியீடு, தஞ்சாவூர், 1998. பக்.399-408.

13. முகம்மது உசேன் நயினார், **சீதக்காதி நொண்டி நாடகம் நூலாராய்ச்சி,** ––––, கரூர், ––––

14. லாரன்ஸ் அடிகள், எஸ்., **மதுரைவீரன் கதையும் சாஸ்திரியாரின் ஞானநொண்டி நாடகமும் – ஓர் ஆய்வு,** தரு, காலாண்டிதழ், உலகக் கிறித்துவத் தமிழ்ப் பேரவை, சென்னை, 1996, பக்.16-19.

15. ஜமாலுதீன், அ., **செய்தக்காதி நொண்டி நாடகம்,** ஆறாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தாகூர் அரசினர் கலைக்கல்லூரித் தமிழ்த்துறைச் சார்புல வெளியீடு, பாண்டிச்சேரி, 1964, ப.934.

**எம். ஃபில். ஆய்வு**

16. அசோகன், வீ.. **நொண்டி நாடகங்கள்,** மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1979.

17. இளங்கோ, ந., **நொண்டி நாடகம் (சீதக்காதி நொண்டி நாடகமும் ஞான நொண்டி நாடகமும்),** சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1991.

18. கிருட்டிணமூர்த்தி, சி., **திருக்கச்சூர் நொண்டி நாடகம்,** சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1990.

**எம்.லிட். ஆய்வு**

19. செயராமன், ந.வீ., **பள்ளும் நொண்டி நாடகமும்,** அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம், 1966.

**பிஎச்.டி. ஆய்வு**

20. குளத்தூரான், ஜி. **பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகம் ஆகியவற்றில் நாட்டுப் புறத் தாக்கம்,** கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1982.

**பி.ஜி. டிப்ளமோ ஆய்வு**

21. உத்திராடம், கோ., **திருப்புல்லாணி நொண்டி நாடகம் மற்றும் சிற்றிலக்கியம்,** உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1997.

## பின்னிணைப்பு – 5

## திருப்புல்லாணி இலக்கியச் சுவடிகள்

### அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புல்லாணி கதவு திறத்தல் பாட்டு | R 463 g |
| 2. | திருப்புல்லாணி தெய்வச்சிலைப் பெருமாள் திருப்புகழ் | R 463 a |
| 3. | திருப்புல்லாணி தெய்வச்சிலைப் பெருமாள் துதி | R 463 b |
| 4. | திருப்புல்லாணி வண்ண விருத்தம் | R 463 c |
| 5. | திருப்புல்லாணி வாகனமாலை | R 463 c,f |
| 6. | திருப்புல்லாணி வேதாந்த கவி | R 463 i |
| 7. | திருப்புல்லாணி களைப்பாட்டு | R 3755 |
| 8. | திருப்புல்லாணி தாலாட்டு | R 3756 |
| 9. | திருப்புல்லாணி திருவனந்தல் | R 3757 |
| 10. | நலங்குப்பாட்டு | R 3758, R5978 |
| 11. | திருப்புல்லாணி நொண்டிச் சிந்து | R 3754 |

## Publications from Palm – Leaf Manuscripts

## General Editor: Dr.G.John Samuel

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | The Wandering Voice (3 Ballads), | Dr. R. Nirmala Devi | 1987 | Rs.120.00 | US $ 32 |
| 2. | The Art of Drumming – Mattaḷaviyal | Dr. V.P.K. Sundaram | 1988 | Rs. 90.00 | US $ 20 |
| 3. | The Dateless Muse | Dr. R. Nirmala Devi | 1988 | Rs. 80.00 | US $ 20 |
| 4. | The Unsung Melodies, | Dr. V. Murugan | 1989 | Rs. 75.00 | US $ 32 |
| 5. | The Divine Pilgrimage | M. Shanmukham Pillai | 1992 | Rs.200.00 | US $ 40 |
| 6. | A Tale of Romance | Dr. A. Thasarathan | 1994 | Rs.300.00 | US $ 50 |
| 7. | Varma Cūtiram | Dr. P. Subramaniam | 1994 | Rs.400.00 | US $ 50 |
| 8. | Peṇṇaraciyār Katai | Dr. K. Jayakumar, D. Boominaganathan | 1995 | Rs.100.00 | US $ 20 |
| 9. | Nīli Yaṭcakāṉam | Dr. P. Subramaniam | 1996 | Rs.150.00 | US $ 20 |
| 10. | A Tale of Nemesis | Dr. P. Subramaniam | 1996 | Rs.250.00 | US $ 20 |
| 11. | The Valorous Virgins | Dr. K. Jayakumar , D. Boominaganathan | 1996 | Rs. 220.00 | US $ 35 |
| 12. | A Tale of Betrayal | Dr. P. Subramaniam | 1996 | Rs. 400.00 | US $ 65 |
| 13. | The Epic Eternal –Part I & II | Dr. K. Jayakumar | 1996 | Rs. 900.00 | US $130 |
| 14. | Destiny and Divinity | M. Parimanam | 1996 | Rs. 200.00 | US $ 30 |
| 15. | The vows Fulfilled | M. Maruthamuthu | 1996 | Rs. 450.00 | US $ 65 |
| 16. | Poetic Petals in the Interior Landscape | R. Jayalakshmi | 1996 | Rs. 400.00 | US $ 50 |
| 17. | The Defender of the Faith | Dr. K. Jayakumar, R. Jayalakshmi | 1996 | Rs. 350.00 | US $ 40 |
| 18. | Where Justice Chimes | Dr. P. Subramaniam | 1997 | Rs. 400.00 | US $ 50 |
| 19. | Redemption through Grace | M. Maruthamuthu | 1998 | Rs. 350.00 | US $ 30 |
| 20. | Tirukkalampakam | M. Parimanan, R. Jayalakshmi | 1999 | Rs.300.00 | US $ 30 |
| 21. | Treatise on Mathematics | Dr. P. Subramaniam, K. Sathya Bama | 1999 | Rs. 300.00 | US $ 30 |
| 22. | The Scorching Guile | Dr.A.K. Perumal, Dr. K. Jayakumar | 1999 | Rs. 300.00 | US $ 35 |
| 23. | The Beatitude Undefiled | G. Selvalakshmi | 1999 | Rs. 350.00 | US $ 50 |
| 24. | The Measure of Eternity | Dr. K. Jayakumar | 1999 | Rs.500.00 | US $ 50 |
| 25. | Kaṇaṉ the Munificent | R. Jayalakshmi | 1999 | Rs. 500.00 | US $ 50 |
| 26. | A legend of Kōlavarai Araṅkaṉ | Dr P. Subramaniam , K. Sathyabama | 2000 | Rs.600 .00 | US $ 45 |
| 27. | The Story of Casting the Net | Dr. G. Selva lakshmi | 2005 | Rs. 215.00 | US $ 20 |
| 28. | Treatise on Mathematics – Part – II | Dr..P. Subramaniam , K. Sathyabama | 2005 | Rs.210 .00 | US $ 20 |
| 29. | The Misplaced Royal Romance | G. Uthiradam | 2005 | Rs.400 .00 | US $ 40 |
| 30. | A Kuravañji of Riṣivintam | M. Maruthamuthu | 2006 | Rs.335.00 | US $ 35 |
| 31. | Akatticar Kalampakam | R. Jayalakshmi | 2006 | Rs. 200.00 | US $ 20 |
| 32. | The Story of Kusalavaṉ | Dr. G. Selvalakshmi, R. Jayalakshmi | 2006 | Rs.160.00 | US $ 20 |
| 33. | A Pool of Poison | R. Jayalakshmi, K.Panneer Selvam | 2006 | Rs. 180.00 | US $ 20 |
| 34. | Tiruppullāṇi Noṇṭi Nāṭakam | R. Jayalakshmi, M. Marutha Muthu | 2007 | Rs.180.00 | US $ 20 |
| 35. | A text on mathematics | Dr. P. Subramaniam, K. Sathyabama | 2007 | Rs.320.00 | US $ 40 |